

ஸ்ரீ:



# श्रीवीक्षारण्यक्षेत्र माहात्म्यम्
## (मार्कण्डेयपुराणान्तर्गतम्)

ஸ்ரீமார்க்கண்டேயமகரிஷி அருளிய

# ஸ்ரீவீக்ஷாரண்யக்ஷேத்ர மாஹாத்ம்யம்



ஸ்ரீ கநகவல்லி ஸமேத ஸ்ரீ வீரராகவப்பெருமாள் - திருவள்ளூர்

**Publisher :**

**Mahaperiaval Trust**

Gurukrupa, No.94, ITI Lay-out, MSRIT Post,
Bangalore - 560 054.Karnataka.
Phone : 23602740.

ஸ்ரீ:



# श्रीवीक्षारण्यक्षेत्र माहात्म्यम्
# (मार्कण्डेयपुराणान्तर्गतम्)
# ஸ்ரீமார்க்கண்டேயமகரிஷி அருளிய
# ஸ்ரீவீக்ஷாரண்யக்ஷேத்ர மாஹாத்ம்யம்



ஸ்ரீ கநகவல்லீ ஸமேத ஸ்ரீ வீரராகவப் பெருமாள் (பங்குனி உத்திரஸேவை) - திருவள்ளூர்


**PUBLISHER**:

MAHAPERIAVAL TRUST
GuruKrupa, No.94. ITI Lay-out.
MSRIT POST,
BANGALORE-560 054.
KARNATAKA.
PH: 23602740

ஸ்ரீ:



# ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹ பரப்ரஹ்மணே நம:
# ஸ்ரீவீரராகவ பரப்ரஹ்மணே நம:
# மார்க்கண்டேய புராணத்திலுள்ள ஸ்ரீவீக்ஷாரண்யக்ஷேத்ர மாஹாத்ம்யம்

மணிப்ரவாள நடையிலுள்ளதை
எளிய தமிழிலாக்கிப் பதிப்பித்தவர்
ஸ்ரீவில்லிபுத்தூர் வித்வான்
ஸ்ரீ.உ.வே.R.கண்ணன்ஸ்வாமி

பதிப்பித்தவர்:

மகாபெரியவாள் ட்ரஸ்ட்,
குருக்ருபா, நெ. 94, ITI லே அவுட்,
MSRIT போஸ்ட்,
பெங்களூர் 560 054.
கர்நாடகா
தொலைபேசி: 2360 2740

I

# ஸ்ரீ வீக்ஷாரண்ய க்ஷேத்ர மாஹாத்ம்யம்
# முன்னுரை

ஸ்ரீய:பதியாகிய ஸ்ரீமந்நாராயணன் அநுக்ரஹத்தினாலே ஒரு க்ரந்தத்தைப் பற்றிநாம் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயங்கள் மூன்றாகும். அவையாவன :– வக்த்ரு வைலக்ஷண்யம் (ஆக்கியோன் பெருமை), ச்ரோத்ரு வைலக்ஷண்யம் (கேட்பவன் பெருமை), ப்ரபந்த வைலக்ஷண்யம் (நூலின்பெருமை) என்று. வீக்ஷாரண்ய க்ஷேத்ர மாஹாத்ம்யம் என்ற இந்த க்ரந்தத்துக்கு வக்தா ம்ருகண்டு மகரிஷியின் புதல்வராகிய ஸ்ரீமார்க்கண்டேய மகர்ஷியாவார். இவரது தவத்தைக்கண்டு பெருமகிழ்வுற்றவர் களாகிய பார்வதியும் பரமசிவனும் இவருக்கு யதேஷ்டமான வரங்களைத்தந்தனர். நீண்ட வாழ்நாளையும், நோய், கிழத்தனம், மரணமின்றி என்றும் பதினாறு பிராயத்தினராயும், ஸ்ரீமந்நாராயணனிடத்தில் அசஞ்சலமான பக்தியையும் அளித்தனர். மேலும் ''சங்கராத் ஞானமந்விச்சேத்'' என்கிறபடி புராணமியற்றக்கூடிய ஆற்றலையும் தந்தார். ஸ்ரீமந்நாராயணனி டம் அவரது மாயையைக்காண மார்க்கண்டேயர் விரும்பியகாலத்து ப்ரளய காலத்தில் ஆலந்தளிரில் பாலமுகுந்தனாக பகவான் இவருக்கு ஸேவை ஸாதித்தார். இவரும் அவ்வடபத்ரசாயியினிடம் ஆசையுடன் அருகே சென்றபோது அவரது மூச்சுக்காற்றால் உள்ளே இழுக்கப்பெற்று அவரது வயிற்றுக்குள்ளே சென்றபோது ப்ரளயகாலத்தில் எம்பெருமான் தன் வயிற்றில் வைத்திருந்த அனைத்து உலகங்களையும் தேவர்கள் முதலானவர்களையும் கண்டு ஆச்சர்யமுற்றார். இவரது பெருமையை மந்த்ரராஜபத ஸ்தோத்ரத்தில் ஸ்வாமி தேசிகன் பரக்கப் பேசியுள்ளார். இவர் அருளிய புராணம் தான் மார்க்கண்டேய புராணமாகும்.

இவர் இயற்றிய மார்க்கண்டேய புராணமாகிய நூலின் பெருமையை இனிகாண்போம். வேதங்களின் பொருள்களை நம்மால் எளிதில் புரிந்துகொள்ளமுடியாது. ஒரு யஜமானன் வேலைக்காரர்களுக்கு இதைச்செய், இதைச்செய்யாதே என்று

கட்டளேயிடும் முறையில் அமைந்துள்ளது. அதனுல் இதற்கு ''ப்ரபுஸம்ஹிதை'' என்று பெயர். ''இதிஹாஸபுராணுப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத்'' என்று வேதத்தின் பொருளே விளக்கவந்தவைகள் தான் இதிஹாஸபுராணங்கள். ஒரு மனிதன் தனது நண்பனுக்கு அறிவுரை கூறுவது போன்று அமைந்துள்ளது. அதனுலேயே இதிஹாஸபுராணங்களுக்கு ''ஸுஹ்ருத்ஸம்ஹிதை'' என்று பெயர். இதிஹாஸத்தைக் காட்டிலும் புராணத்தின் பெருமை தக்க ஆதாரங்களுடன் இந்நூலில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது. அப்புராணங்கள் ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என மூவகைப்படும். பரமசிவனேப் பற்றிய புராணங்கள் தாமஸம். ப்ரம்மாவைப் பற்றியவை ராஜஸம். ஸ்ரீமந்நாராயணனேப்பற்றிவை ஸாத்விகம் என்று விளக்கப்பட்டுள்ளது. அத்தகைய ஸாத்விக புராணத்தின் வரிசையில் சேர்ந்ததாகும் இந்த மார்க்கண்டேய புராணம். இப்புராணத்தின் பெருமை இந்நூலில் பரக்க விவரிக்கப்பட்டுள்ளது.

நூலில் விளக்கப்படும் பொருளின் பெருமை: ஸ்ரீவீக்ஷாரண்யக்ஷேத்ரமாஹாத்ம்யம் என்பது இந்நூலின் பெயர். இது மார்க்கண்டேய புராணத்தில் 101வது அத்யாயத்திலிருந்து 111வது அத்யாயம் வரை பதிஞேரத்யாயத்தில் விளக்கப்பட்டுள் ளது. அர்ச்சாவதாரமாக எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் நூற்றெட்டு திவ்யதேசங்களில் இதுவும் ஒன்று. ஒரு க்ஷேத்ரத்துக்கு மூர்த்தி, தீர்த்தம், ஸ்தலம் என்ற மூன்றினுலும் பெருமையுண்டு. இந்த ஸ்தலத்துக்கு 'வீக்ஷாரண்யம்' என்று பெயர். இது தென்னுட்டில் தொண்டை மண்டலத்தில் உள்ளது. புண்யாவர்த்தம் என்ற க்ஷேத்ரம் பாலாற்றின் வடக்குக்கரையில் குசஸ்தலீ ஆற்றின் அருகில் உள்ளது. இப்பகுதியில் செய்யும் நற்காரியங்கள் மிகுந்த புண்யத்தைத் தருவதால் இதற்கு புண்யாவர்த்தம் என்ற பெயராயிற்று. இதில் சந்தனம், தேவதாரு முதலிய உயர்ந்த ஜாதிமரங்கள் அடர்ந்து கதிரவனும் நுழையாத அடர்ந்த காடு உள்ளது. இதுவே வீக்ஷாரண்யம் என்று அழைக்கப்பெறுகிறது. ''கட்கிலீ'' என்று கண்ணுலே

காணமுடியாத எம்பெருமான் எல்லார்கண்ணுக்கும் தெரியக் கூடிய வகையில் எழுந்தருளியிருப்பதால் இதற்கு ''வீக்ஷாரண்யம்'' என்று பெயராயிற்று.

தீர்த்தமாவது – ஹ்ருத்தாப நாசநதீர்த்தம். பாலாற்றின் வடகரையில் குசஸ்தலிக்கருகில் தாமரை, செங்கழுநீர் முதலிய மலர்களால் மணம் பெற்ற மடு ஒன்று உளது. இதுவே ஹ்ருத்தாபநாசந தீர்த்தம் என்று அழைக்கப்படுகிறது. மக்களது இதயத்திலுள்ள தாபங்களேயெல்லாம் போக்குவதோடு இதில் ஸ்நாநம் பண்ணுமவர்களது ஸகல பாபங்களும் தொலேவதுடன், இம்மை மறுமைப் பயன்கள் அனேத்தும் கிட்டுகின்றன. இதன் பெருமை இந்நூலில் பல அத்யாயங்களில் பல நிகழ்ச்சிகள் மூலம் பரக்கப்பேசப்படுகிறது.

இத்திருப்பதி ''கிம்க்ருஹம்'' என்றும், ''எவ்வுள்'' என்றும் பேசப்படுகிறது. மதுகைடபர்களேக் கொன்று பிரமனுக்கு வேதத்தை மீட்டுக் கொடுத்த களேப்பு தீரவும், ஸ்ரீராமாவதார க்ருஷ்ணுவதாரங்களில் ஏற்பட்ட அல்லல்கள் தீரவும், இங்கே பாம்பணேமெத்தையில் பள்ளி கொண்டிருக்கும் ஸ்ரீவீரராகவனே மூர்த்தியாவார். சாலிஹோத்ரமகரிஷியின் தலேயில் கைவைத்து அநுக்ரஹம் பண்ணிக்கொண்டும், நாபியில் நான்முகனேக் கொண்டும் சயனித்துக்கொண்டிருக்கிருர். பக்தர்களது சகலதாபங்களேயும் போக்கக்கூடிய எம்பெருமானுக்கும் களேப்பு உண்டோ என விஞ எழுப்பிக்கொண்டு இந்நூலில் அருமையாக விடையளிக்கப்பட்டுள்ளது.

பாண்டவர்களின் பேரனும், கரிக்கட்டையாகப் போனவன் கண்ணனுலே உயிர்ப்பிக்கப்பெற்றதனுல் ''விஷ்ணுராதன்'' என்று பெயர்பெற்றவனுமான பரிக்ஷித்து மன்னனின் புதல்வர்களில் மூத்தவன் ஜனமேஜயன். அவனது புதல்வன் சதாநீகன். இவன்தான் சௌநகர் பக்கல் பகவந்நாமப்ரபாவத்தைக் கேட்டவன். சதாநீகன் புதல்வன் ஸஹஸ்ராநீகன். மார்க்கண்டேயர் இந்த ஸஹஸ்ராநீகனுக்கு சாலிஹோத்ர மகரிஷி தேவபாகருக்குச் சொன்னதைத்தான் விவரிக்கின்ருர்.

# IV

முதல் அத்யாயத்தில் வீக்ஷாரண்யக்ஷேத்ரம் அமைந்திருக்கும் அழகு, ஹ்ருத்தாபநாசநதீர்த்த மகிமை ஆகியவை விரிவாகக் கூறப்பட்டுள்ளன. அதன் கரையில் விஜயகோடிவிமானத்தின் கீழ் ஸ்ரீவீரராகவன் சயனத்திருக் கோலத்தில் உள்ள அழகு முதலியவை கவினுற வருணிக்கப் பெற்றுள்ளன. இத்தீர்த்தத்தில் ஸ்நாநம் பண்ணி இந்த எம்பெருமானை ஸேவிப்பவர்கள் அடையும் பயன்களையெல்லாம் பரக்கப்பேசியுள்ளார். அரக்கன் ஒருவன் பெருமானை மனிதன் என எண்ணி அவரைக் கொன்று மாமிசத்தை உண்ணும் நோக்கத்தில் வந்தபோது தேஜஸ்ஸினால் நெருங்கமுடியாதவனா னான். அந்த க்ஷேத்ரத்தின் குகைகளில் தவம் செய்து கொண்டிருக்கும் முனிவர்களை இம்ஸிக்க முற்படவே ஸ்ரீவீரராகவப்பெருமானிடமிருந்து தோன்றிய திவ்யபுருஷன் அவ்வரக்கனைக் கொன்றுவிட்டார். இறந்த அவனுயிரை எடுத்துச் செல்ல யமகிங்கரர்கள் வந்தபோது அந்த ராக்ஷஸன் இந்த க்ஷேத்ரத்தில் மாண்டதால் அவன் பாபங்களெல்லாம் தொலைந்துவிட்டன என்று விஷ்ணுதூதர்கள் யமதூதர்களைத் தடுத்துவிட்டார்கள். இருவருக்கும் நடந்த வாக்குவாதம் அத்யத்புதமாக இந்நூலில் விவரிக்கப்பட்டுள்ளது. பரஹிம்ஸையே பண்ணித்திரிந்தாலும் அவ்வரக்கன் அந்த க்ஷேத்ரத்தில் மரணமடைந்ததால் முக்திபெற்றான்.

இரண்டாவது அத்யாயத்தில் தேவாசுர யுத்தத்தில் அசுரர்கள் தேவர்களை வென்று சுவர்க்கத்தை ஆக்ரமித்துக் கொண்டுவிட்டார்கள். இழந்த தேவர்கள் நான்முகனிடம் முறையிட அவரது ஆலோசனையின்பேரில் வீக்ஷாரண்ய க்ஷேத்ரத்துக்கு வந்து ஸ்ரீவீரராகவப் பெருமாளிடம் முறையிடுகிறார்கள். இந்தத் துதி வெகு அழகாக விவரிக்கப்பட்டுள்ளது. பரன் கருணைகொண்டு தனது ஒரு அம்சத்தை இந்திரனுக்குக் கொடுத்தார். அதனால் இந்திரன் அசுரர்களைப் போரில் வென்று சுவர்க்கத்தை மீண்டும் பெற்றான்.

மூன்றாவது அத்யாயத்தில் திலீபமகாராஜாவின் மரபில் தர்மஸேநன் என்ற அரசன் அறநெறிவழுவாது ஆட்சிபுரிந்து

வந்ததுடன் இந்த புண்யதீர்த்தத்தில் ஸ்நாநம் பண்ணி ஸ்ரீவீரராகவனை தர்சித்து வந்தான். அவனுக்கு ''வஸுமதி'' என்ற பெண் குழந்தை ஸாக்ஷாத் மஹாலக்ஷ்மி போன்று பிறந்தது. ஈடிணையற்ற அவளழகைக்கண்டு மன்னவர் பலர் மணம் பேசிவர, மகளது மனதிற்குகந்த மணாளனுக்கே மணம்செய்து தருவேன் என்று சொல்லிவிட்டான். ஒருநாள் வஸுமதி உத்யான வனத்திற்குத் தன் தோழிகளுடன் வந்தபோது, பெருமானும் ஒப்பற்ற அழகுபடைத்த அரசகுமாரனாய் வர, இருவரும் ஒருவரையொருவர் விரும்பிய அழகு மரபு தவறாமல் கவினுற வருணிக்கப்பட்டுள்ளது. வஸுமதி தன் தந்தைக்குத் தோழி மூலம் செய்தி சொல்லி அனுப்ப தர்மஸேநன் அசரகுமாரனுடன் அழகுறப்பேசி நல்லதொரு நாளில் விவாஹம் செய்து வைத்தார். யதேஷ்டமான சீர்வரிசைகளுடன் மாப்பிள்ளையாகிய அரசகுமாரன் வஸுமதியை அழைத்துக் கொண்டு கர்ப்பக்ருஹத்தில் மறைந்துவிட்டார். வியந்த மன்னனுக்கு ஸ்ரீவீரராகவன், ஸாக்ஷாத் மகாலக்ஷ்மியாகிய உமது மகளை நாமே மணாளனாக வந்து மணந்து கொண்டோம். எங்கள் இருவரையும் இங்கேயே கண்ணாரக்கண்டு வாழ்ந்து பின் நம் வீடு பெறுவீராக என்று சொல்லி மறைந்தார்.

நான்காவது அத்யாயத்தில் சாலிஹோத்ரர் தேவபாகருக்கு பகவதாராதனத்தில் பலவகைகளை எடுத்துச் சொல்லி பாஞ்சராத்ர ஆகமப்படி பகவதாராதனம் பண்ணுவாயாக என்று அதன் பெருமைகளையும் விவரங்களையும் கவினுற உபதேசித்தார்.

ஐந்தாவது அத்யாயத்தில் கிருதயுகத்தில் கௌசிகன் என்ற அந்தணன் கங்கை முதலிய நதிகளில் நீராட தீர்த்தயாத்திரை புறப்பட்டு வந்தான். வழியில் நள்ளிரவில் துஷ்டமிருகங்கள் அடர்ந்த காட்டில் அஞ்சியவனாய், பசிதாகம் மிக்கவனாய், அடர்ந்தபுதரில் கண்ணிருண்டு பஞ்சடைந்த நிலையிலிருந்தான். அவ்வந்தணனைக் கண்ட சண்டாளன் ஒருவன் இரக்கம்மிக்கவனாய் நடக்க சக்தியற்ற அவனைத் தோளில் சுமந்துகொண்டு தன்வீட்டிற்குச் சென்றான். அவன்

பசிதீர அறுசுவை உணவளித்தான். அந்தணனும் சண்டாளன் என அறியாது வயிருரவுண்டான். சண்டாளன் தனது அருமை யான மாளிகையில் கட்டில் மெத்தை அமைத்துக் கொடுத்தான். வழிநடந்த களைப்பினுலும் உண்ட களைப்பினுலும் அயர்ந்து உறங்கிவிட்டான். அது சமயம் சண்டாளன் தன் அழகிய மகளுக்கு ஆடைஅணிகலன்கள் அணிவித்து, அந்தணர்களுக்கு பணிவிடை செய்வது ஒன்றினுலேயே நாம் நற்கதி பெறலாம் என அவளுக்கு அறிவுரைகூறி, அவ்வந்தணனுக்குக் கால்பிடிக்கச் சொல்கிருன். கடைசி யாமத்தில் களைப்புத் தீர்ந்து கண்விழித்தபோது அவளழகிலே மயங்கி காமவசப்பட்டவனுய் அவளோடு சேர்ந்தான். அவளையே தாரமாகக் கொண்டு பல ஊர்சுற்றிக் கடைசியில் திருஎவ்வுளூருக்கு வந்து ஹ்ருத்தாப நாசந தீர்த்தத்தில் நீராடி அந்த க்ஷேத்ரத்தில் நித்யவாசம் பண்ணலானுன். மரணமடைந்த போது ஒழுக்கம் கெட்ட அவ்வந்தணனை யமகிங்கரர்கள் யமனிடம் அழைத்துச் சென்றனர். அந்த க்ஷேத்ரவாசம் பண்ணி அந்த தீர்த்தத்தில் ஸ்நாநம் பண்ணி வந்ததால் அவனது பாபங்கள் அனைத்தும் தொலைந்துவிட்டன என்று யமன் தனது கிங்கரர்களுக்குப் பலவாறு அறிவுரை கூறி அப்பார்ப்பனனை தேவயானத்தின் மூலம் வைகுந்தம் புகச்செய்தான். என்னே க்ஷேத்ரதீர்த்த மாஹாத்ம்யம்!

ஆருவது அத்யாயத்தில் தக்ஷன் சிவனை அழைக்காது யாகம் பண்ணுகிருன். ருத்ரபத்நி ஸதி கணவன் சொல்லைமீறி யாகத்திற்குச் சென்றபோது தக்ஷன் பண்ணிய அலட்சியத்தால் சினம் கொண்டவளாய் தந்தையைப் பலவாறு பழித்துப்பேசி தன் பூதஉடலை யோகரீதியில் எரித்துக்கொண்டுவிட்டாள். செய்தியறிந்த சிவன் சினங்கொண்டு வீரபத்ரனை அனுப்ப போரில் வீரபத்ரன் தக்ஷன் தலையை அறுத்துவிட்டான். அதனுல் ப்ரம்மஹத்தி சாபம் தொடரப்பெற்ற சிவன் கடைசியில் வீக்ஷாரண்யக்ஷேத்ரம் வந்து ஹ்ருத்தாபநாசந தீர்த்தத்தில் ஸ்நாநம் பண்ணணியதால் சாபம் நீங்கப்பெற்ருர்.

பரமசிவன் கங்கையைத் தலையிலேயே வைத்துக்

கொண்டிருக்கிருரே. அந்த கங்கை முதலிய புண்யதீர்த்தங்கள் போக்காத சாபத்தை ஹ்ருத்தாபநாசந தீர்த்தம் போக்கியதா என வினவிய தேவபாகருக்கு சாலிஹோத்ரர், ஹ்ருத்தாபநாசந தீர்த்தமகிமையை மேலும் கூறுகிருர். ஒருசமயம் தை அமாவாசை யன்று இந்த தீர்த்தத்தில் வசிஷ்டர், புலஹர், புலஸ்த்யர் முதலிய பெரியபெரிய மகரிஷிகளெல்லாம் வந்து ஸ்நாநம் பண்ணிக் கொண்டிருந்தார்கள். அப்போது அங்கு வந்த நாரதர் அம்முனிவர்களைப் பார்த்து கங்கை முதலிய புண்யதீர்த்தங்களி ருக்கச் செய்தே இங்கே வந்து இப்புண்யதினத்தில் இந்த ஹ்ருத்தாபநாசநதீர்த்தத்தில் ஸ்நாநம் பண்ணுவதென் என்று வினவினர். அவர்கள் அனைவரும் ஒருமிடருக நாரதரே! இதன் பெருமையை எங்களால் சொல்லிமுடியாது. இதன் ப்ரபாவத்தை உமது தந்தையாகிய ப்ரம்மாவினிடத்திலேயே போய்க் கேளும் என்ருர்கள். அவரும் நான்முகனிடம் சென்று வினவினர். அவர் கூறியதாவது – தை மாதம் அமாவாசையன்று மற்ற எல்லா புண்யதீர்த்தங்களைக்காட்டிலும் ஹ்ருத்தாபநாசநதீர்த்தத்தில் ஸ்நாநம் பண்ணுவதன் பலனை என்னுலும் சொல்லிமாளாது. ஸகலபாபாங்களையும் போக்குவதுடன் இம்மை மறுமைப் பயன்களை ஒருங்கே தருவது உலகிலேயே இந்த தீர்த்தம் தான் என்று அதன் பெருமைகளை விரிவாக எடுத்துரைத்தார்.

மேலும் ப்ரம்மா கூறியதாவது – முன்பு க்ருதயுகத்தில் ஸ்வாயம்புவமனுவின் வம்சத்தில் ப்ரத்யும்நன் என்ற அரசன் இருந்தான். அறநெறி வழுவாது ஆட்சிபுரிந்த அவனுக்குப் புத்திர பாக்யம் இல்லை. அதனுல் அவன் ஹ்ருத்தாபநாசநதீர்த்தத்தில் நீராடிவிட்டு அதன் கரையில் ஸ்ரீமகாவிஷ்ணுவைக்குறித்துப் பலஆயிரம் ஆண்டுகள் தவம் செய்தும் பலன் கிட்டவில்லை. அதனுல் விடா முயற்சியுடன் இடது கால் கட்டை விரலைத் தரையில் ஊன்றிக்கொண்டு வலது காலை மடித்துக்கொண்டு, நூறுவருஷம் தவம் செய்தான். புருஷோத்தமன் ப்ரத்யக்ஷமானுர். தனக்கு ஸத்புத்ரர்கள் பலர் பிறக்கவேண்டும் என்றும், தை அமாவாசையன்று இந்த தீர்த்தம் கங்கை முதலிய எல்லாதீர்த்தங்களிலும் சிறந்ததாயும், ஸகலதாபங்களையும்

போக்கி, ஆயுஸ் ஆரோக்யம், ஐச்வர்யம் முதலிய இம்மைப் பயன்களேயும், மறுமைப்பயன்களேயும் அளிக்கக்கூடியதாக விளங்கவேண்டும் என்றும் வரம் கேட்டான். பகவான் அவ்வாறே அருளினுர். (ப்ரத்யும்நன் பண்ணிய ஸ்தோத்ரம் விரிவாக அழகுற கூறப்பட்டுள்ளது.) ஆதலால் நாரதா! இந்த தீர்த்த மகிமையை ஆயிரம் நாவுபடைத்த ஆதிசேஷனுலும் சொல்லிமாளாது என்று ப்ரம்மா கூறினுர்.

ஏழாவது அத்யாயத்தில் சாலிஹோத்ரர் ஈச்வரன் ஜகத்தை ஸ்ருஷ்டித்த ப்ரகாரங்களேயெல்லாம் விரிவாகக் கூறியுள்ளார்.

எட்டாவது அத்யாயத்தில் அம்பரீஷ சரித்ரம் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. துர்வாசர், அம்பரீஷனே வ்ரதபங்கம் செய்யச் செய்வதற்காக விருந்துண்ண காலம் தாழ்த்தி வந்தார். அம்பரீஷன் வ்ரதபங்கம் வரலாகாது, அதேசமயம் விருந்தினரையும் உபசரிக்கவேண்டும் என்ற எண்ணத்தில் துளசி தீர்த்தத்தைப் பருகினுன். சினம் கொண்ட துர்வாசர் சபிக்க ஜலத்தை எடுத்தபோது அம்பரீஷன், ஸர்வலோகசரண்யனுன ஸ்ரீமந்நாராயணனேச் சரண்புகுந்தான். பக்தபராதீனனுனபரமன், அம்பரீஷனேக்காக்க சக்ராயுதத்தை ஏவினுர். அதுகண்டு அஞ்சி ஓடிய துர்வாசர், ருத்ரன் பிரமன் இந்திரன் ஆகியோரைக் காப்பாற்றுமாறுவேண்ட அவர்கள் அஞ்சி கைவிட்டுவிட்டனர். பின் ஸ்ரீமந்நாராயணனேச் சரண் புகுந்தார். அவர், ''நான் பக்த பராதீனன், பாகவதாபசாரத்தை என்னுல் பரிஹரிக்கமுடியாது; என்பக்தனுகிய அம்பரீஷனேயே வேண்டுவீராக'' என்ருர். பின்னர் அம்பரீஷன்பால் வந்து அபராதக்ஷாபணம் பண்ணிக் கொள்ள ஸுதர்சனம் ஸ்வஸ்தானம் சேர்ந்தது. பாகவதாபசாரத்தின் கொடுமை இதில் அழகுற விவரிக்கப்பட்டுள்ளது.

ஒன்பதாவது அத்யாயத்தில் சாலிஹோத்ரர் தேவபாகருக்கு அத்யாத்ம வித்யையை (வேதாந்த காலக்ஷேபம்) விரித்துரைக்கிருர்.

பத்தாவது அத்யாயத்தில் சாலிஹோத்ரர் அஷ்டாங்க யோகத்தை உபதேசிக்கிருர். யமம், நியமம், ஆஸநம்,

ப்ராணுயாமம், ப்ரத்யாஹாரம், தாரணை, த்யானம், சமாதி என்ற எட்டையும் விஸ்தாரமாக விரித்துரைத்தார். சரணுகதியைப் போன்று இந்த அஷ்டாங்க யோகத்தின் மூலம் பகவானை அடையலாம் என்கிருர்.

பதிஞேராவது அத்யாயத்தில் தேவாபாகர் சாலிஹோத்ரர் அருளியபடி ஸ்ரீவீரராகவனை ஆராதித்து முக்திபெற்ருர். பின்னர் மார்க்கண்டேயரிடம் ஸஹஸ்ராநீக மகாராஜன் வினவுகிருர். ஸ்வாமீ! இத்தகைய பெருமை படைத்த சாலிஹோத்ர மகரிஷியின் பிறப்பை அறியவிரும்புகிறேன் என்ருர். மன்னவா! முன்பு கிருதயுகத்தில் புருபுண்யர் என்ற மகாதபஸ்வியான மகர்ஷி இருந்தார். அவருக்கு ஸத்யவதி என்ற மனைவி இருந்தாள். க்ருஹஸ்தாச்ரம தர்மங்களைக் குறையற நடத்திவந்த அவருக்கு புத்ரபாக்யமில்லை. அதனுல் பதரிகாச்ரமத்தில் ஒரு யாகம் செய்தார். இருபத்தெட்டு நெல்லைக் கொண்டு அக்னியில் ஒரு ஆகுதி பண்ணுவது என்கிற முறையில் ஒருநாளைக்கு ஆயிரம் ஆகுதி பண்ணிவந்தார். வருஷக்கடைசியில் பூர்ணுகுதி பண்ணிய போது ஹோமகுண்டத்தில் சங்கசக்ரகதாதாரியாய் பகவான் ப்ரத்யக்ஷமானுர். பெருமானிடம் புத்ரப்பேறுகிட்டுமாறு வரம் வேண்டினுர். எம்பெருமானும், புருபுண்யரே! உமக்குச் சிறந்த ஞானம் படைத்த புதல்வன் பிறப்பான். நெல்லினுலே நீர் ஹோமம் பண்ணியதால் அப்புதல்வன் ‘சாலிஹோத்ரன்’’ என்ற பெயரால் விளங்குவான் என்று சொல்லிமறைந்தார். (சாலி என்ருர் நெல் என்பதாகும்).

அக்னியைச் சுற்றி சிதறிக்கிடந்த நெல்லைத் தன் மனைவிக்குக் கொடுத்தார். அதனுல் அவள் கருவுற்று சாலிஹோத்ரர் பிறந்தார். சாலிஹோத்ரர் உரியகாலத்தில் உபநயனம் செய்விக்கப்பெற்று குணவதியான பத்நியை விவாஹம் செய்துகொண்டு தகப்பனுருக்கு சுச்ரூஷை செய்தவாறு பதரிகாச்ரமத்தில் வாழ்ந்துவந்தார். தகப்பனுரது காலத்துக்குப்பின் குடும்பத்துடன் க்ஷேத்ராடனம் பண்ணிக் கடைசியில் வீக்ஷாரண்யக்ஷேத்ரம் வந்து அங்கேயே வசித்து வரலானுர். ஒரு தை அமாவாசையன்று அப்புனிதநீரில் நீராடி

ஸ்ரீவீரராகவனைக் குறித்து ஓராண்டுகாலம் தவம் புரிந்தார். ஆண்டு முடிவில் புனிதநீரில் நீராடிய பின் வயல்களில் கதிர் அறுத்தபின் சிந்திய நெல்லைப்பொறுக்கி (இதற்குத் தான் உஞ்சவ்ருத்தி என்றுபெயர்) அதனை அரிசியாக்கி அதனால் அன்னம் சமைத்தார். அக்னிஹோத்ர ஔபாஸநம் பகவதாராதனம் எல்லாம் முடிந்தபிறகு வைஶ்வதேவத்திற்குப் பின் பக்வமான அன்னத்தை நான்கு பாகமாகப் பிரித்தார். அதிதிகள் வருவார்களா என வழிமேல் விழிவைத்துக் காத்திருந்தார். அதுசமயம் தண்டுகாலா ஊன்றிஊன்றி தள்ளாத வயதினராய் ஒரு கிழட்டு பிராமணன் மிக்க பசியுடன் வந்தார். மேகத்தைக் கண்ட பயிர்போலே சாலிஹோத்ரர் அவ்வந்தணரை வரவேற்று அர்க்ய பாத்ய ஆசமனீயாதிகளால் உபசரித்து இலையில் அதிதிக்குண்டான பாகத்தை இட்டு உண்பித்தார். பசிநீங்கப்பெறாத அவர் முகத்தைக் கண்டு மற்றைய மூன்று பாகத்தையும் அளித்தார். அனைத்தையும் உண்ட அவர் வந்த வழியே சென்று விட்டார்.

பிறகு சாலிஹோத்ரர் உண்ணாமலேயே மீண்டும் ஓராண்டு தவம் செய்தார். தை அமாவாசை அன்று தேவர் முனிவர் மாந்தர் அனைவரும் நீராடியபின் தான் நீராடி முன்பே போலே உதிர் நெல் பொறுக்கி அன்னமாக்கி பகவதாராதனம் முடித்தபிறகு அதிதியை எதிர்பார்த்திருந்தார். முன்போலவே அக்கிழவர் வந்து எல்லா பாகங்களையும் உண்ட பிறது நீரருந்தி எனக்கு உண்ட களைப்புமிகுதியாகவுள்ளது. சற்றே சயனித்துக் கொள்ள இடம் தருவீராக என்றார். வந்தவர் ஸாக்ஷாத் ஸ்ரீவீரராகவப்பெருமானேயாவார். உடனே ஆதிசேஷன் முதலிய பரிவாரங்களுடன் சாலிஹோத்ரருக்கு ஸேவை ஸாதித்தார். ‘‘எனக்குப் படுக்க இடம் எங்கே’’ என்று கேட்டதால் ‘‘கிம் க்ருஹம்’’ ‘‘எவ்வுள்’’ என்று பேர் பெற்றது. அதுவே ஆழ்வார்களாலும் இடப்பட்ட பெயராயிற்று. அதுவே இன்று திருஎவ்வுளூர் என்பது திருவள்ளூர் என்று மருவிவந்துள்ளது. சாலிஹோத்ரருக்கு முக்தி அளித்ததோடன்றி இன்றும் அவரது சிரஸ்ஸில் கைவைத்துக்கொண்டு சயனித்துக்கொண்டிருக்கிறார்.

வாயு மூலையில் பரமசிவன் வீற்றிருக்கிறார். உபயநாய்ச்சிமார்களுடன் உத்ஸவமூர்த்தியாக எழுந்தருளி கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாக வேண்டுவார்க்கு வேண்டியவரங்களை வாரி வாரி வழங்கிக்கொண்டு **வீற்றிருக்கிறார்.** கண்ணாலே காணமுடியாத பரம்பொருள் எல்லார் கண்ணுக்கும் தோற்றும் வகையில் விளங்குவதால் ''வீக்ஷாரண்யக்ஷேத்ரம்'' என்று வழங்கப்படுகிறது. அனைவரது இதயத்திலுள்ள தாபத்தையெல்லாம் போக்குவதுடன் இம்மை மறுமைப் பயன்களை அளிப்பதாய், புண்யதீர்த்தங்கள் எல்லாவற்றிலும் சிறந்துவிளங்குவதால் ''ஹ்ருத்தாபநாசநதீர்த்தம்'' என்று போற்றப்படுகின்றது.

மூர்த்தி, தீர்த்தம், ஸ்தலம் என்ற மூன்றும் ஏற்றமுள்ளதான இந்த க்ஷேத்ரம், ஸாத்விகபுராணமான மார்க்கண்டேய புராணத்தில் 11 அத்யாயங்கள் மூலம் விவரிக்கப்பட்டுள்ளது. இதற்கு கீர்த்தி மூர்த்தியான 35வது பட்டம் அத்திப்பட்டு அழகியசிங்கரால் தேனும் பாலும் கன்னலும் அமுதும் ஒத்த விபுலமான வ்யாக்யானம் அருளிச் செய்யப்பட்டுள்ளது. வேதசாஸ்த்ர இதிஹாஸபுராணங்களிலிருந்தும், ஆழ்வார்களது அருளிச்செயல்களிலிருந்தும், பாஷ்யகாரர், கூரத்தாழ்வான், பட்டர், வேதாந்ததேசிகர் முதலிய ஆசார்யர்களிடமிருந்தும் பல ப்ரமாணங்கள் எடுத்துக் கூறி பொன்மலர் நாற்றமுடைத்தாக ஆக்கியுள்ளார். இவரது வாக் வைபவத்துக்கு ''ப்ரபஞ்ஜநதநயபாவுகபாஷிதரஞ்ஜிதஹ்ருதய'' என்ற திருவடியை ஒப்பாகச் சொல்லலாமேயொழிய வேறுவிதமாகச் சொல்லமுடியாது. 43வது பட்டம் அழகிய சிங்கரான தேவனார்வளாகம் ஸ்வாமி இந்தக்ரந்தத்துக்கு நாலாயிரப்படி என்று பெயர் சூட்டியுள்ளார். ஒரு க்ரந்தம் என்பது 32 எழுத்துக்கள் கொண்டதாகும். இதுவே 'படி' என்று கூறப்படுகிறது. இதனை ஸதாசார்யன் மூலமாக காலக்ஷேபக்ரந்தமாகக் கருதி கேட்கவேண்டுமென்று அநுக்ரஹித்தாராயிற்று.

இத்தகைய அருமையான க்ரந்தம் மணிப்ரவாள நடையில் அமைந்திருப்பதால் தற்காலத்தவர் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் எளியமுறையில் தமிழாக்கம் செய்து

பதிப்பிக்கவேண்டுமென்று பங்களூரிலுள்ள மகாபெரியவாள் அறக்கட்டளை நிர்வாஹகரான ஸ்ரீ.உ.வே.M.D.கோபால் அடியேனுக்கு நியமித்தார். சீலமில்லாச்சிறியேன் சிற்றறிவுக்கு எட்டியவகையில் இயன்றவரை தமிழாக்கம் செய்துள்ளேன். கருத்துச்சிதைவு இருக்குமானால் அடியேனை மன்னித்துத் திருத்திப்பணிகொள்ளவேண்டுகிறேன். இந்நூல் வெளிவர முழுபொறுப்பேற்றுப் பொருளுதவி செய்த ''மகா பெரியவாள் ட்ரஸ்ட்'' நிர்வாகிகள் அனைவருக்கும், குறிப்பாக ஸ்ரீமான் M.D.கோபால் அவர்கட்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இதற்கு உறுதுணையாகவிருந்து உதவிய ஸ்ரீமான். ராஜகோபாலன் அவர்கட்கும், ஸாம வேதி ஸ்ரீ.உ.வே.பார்த்த சாரதி அவர்கட்கும், எனது நன்றி உரித்தாகுக. இதனைக் கணினி முறையில் தயாரித்துக் கொடுத்த திருச்சி புத்தூர் அக்ரஹாரம் க்ரந்தபரிபாலநட்ரஸ்ட் நிர்வாகி, ஸ்ரீமான். ஆராவமுதன் அவர்கட்கும், அச்சிட்டு புத்தகவடிவில் அருமையாக ஆக்கித் தந்த சென்னை R.N.R ப்ரிண்டர்ஸ் அவர்கட்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூலில் கடைசியில் இப்புத்தகத்தை பூஜை அறையில் வைத்துப்போற்றினாலே ஸகலஸௌபாக்யங்களும் கிட்டும் என்று கூறப்பட்டுள்ளது. எனவே இப்புத்தகத்தை அனைவரும் வாங்கிப்படித்து திருவள்ளூர் ஸ்ரீவீரராகவப் பெருமானது இன்னருளுக்கு இலக்காகி ஸகலஸௌபாக்யங்களும் பெற்று இன்புற்று வாழ வேண்டுகிறேன்.

ஸ்ரீரங்கம் — தொண்டர் தொண்டன்
திருக்கார்த்திகை — R.கண்ணன்.
2–12–2009

A

## ஸ்ரீவீக்ஷாரண்யக்ஷேத்ர மாஹாத்ம்யம்
## பொருளடக்கம்

**—சுபமஸ்து—**

# श्रीः



# श्रीकनकवल्ली समेत श्रीवीरराघव परब्रह्मणे नमः
# श्रीमते लक्ष्मीनृसिंह परब्रह्मणे नमः
# श्रीवीक्षारण्यक्षेत्रमाहात्म्यम्

श्रीमद्वेदमार्गप्रतिष्ठापनाचार्य परमहंस परिव्राजकाचार्य सर्वतन्त्र स्वतन्त्रोभयवेदान्ताचार्य श्रीभगवद्रामानुज सिद्धान्त निर्धारण सार्वभौमेत्यादि बिरुदावली समलंकृतैः श्रीलक्ष्मी नृसिंह दिव्य पादुकासेवक श्रीवण्शठकोप श्रीशठकोप रामानुज यतीन्द्र महादेशिकैः अनुगृहीतया मणिप्रवाल ब्याख्यया सहितम्।

श्रीमद्वेदमार्गेत्यादि बिरुदावली समलंकृतानां श्रीवण् शठकोप श्रीलक्ष्मीनृसिंह शठकोप यतीन्द्र महादेशिकानां नियमनानुसारेण तदीय चरण नलिन सेवा समधिगतात्मलाभेन न्याय शिरोमणिना तेवनार् विळाकं वङ्गीपुरं प.श्री.लक्ष्मीनृसिंहाचार्येण संशोध्य श्रीकुंभकोणे श्रीगोपालविलास मुद्राक्षर शालायां मुद्रयित्वा प्रकाशितञ्च।। 1934

முத்ரகர்த்தா ஸ்ரீ.உ.வே.அழகுசெய்யூர் ஹஸ்திகிரிநாத முடும்பை வித்வான் கல்யாணவரதாசாரியார்ஸ்வாமி நியமனப் படி கொத்திமங்கலம் கோபாலசக்ரவர்த்தியால் ஆங்கிரஸ மார்கழி மீ 24 (8–1–93) தொடங்கி மாசி மீ 14 (25–2–93) ல் எழுதிமுடிக்கப்பட்டது.

ஶுபம்.

**ஸ்ரீ:**



**முகவுரை**

## श्री लक्ष्मीनृसिंह परब्रह्मणे नमः

**(ஸ்ரீஅஹோபிலமடம் 34வது பட்டம் ஸ்ரீஅழகியசிங்கர் தனியன்)**

‘‘श्रीमद्वीर रघूद्वह श्रुतिशिरो रङ्गेशकार्यात्मज
श्रीवासश्रुति मौलि योगि शठजिद्योगीश वीक्षास्पदम्।
विख्यातं शमधी दमादि सुगुणैराढ्यं विपश्चित्तमम्
वन्दे श्रीशठकोप लक्ष्मणमुनिं वैराग्य वाराकरम्।।

**(41வது பட்ட அழகிய சிங்கர் தனியன்)**

‘‘श्रीमच्छठारि शठकोप यतीन्द्ररङ्गि
कार्यात्मजात मुनिभिर्गुरु सार्वभौमैः।
संप्रेक्षितं करुणया परिपूर्णबोधं
लक्ष्मीनृसिंह शठकोप मुनिं भजामः।।

‘‘प्रमाणञ्च प्रमेयश्च प्रमातारश्च सात्विकाः।
जयन्तु क्षपितारिष्टं सहसर्वत्र सर्वदा’’

ஸ்ரீமந்நாதமுநியால் தொடங்கப்பெற்ற நமது ஸித்தாந்தத்தில் ப்ரமாணங்கள் மூன்று. ப்ரத்யக்ஷம், அநுமாநம், ஶாப்தம் என்று. சப்தப்ரமாணம் என்பது வேதங்கள், ஸ்ம்ருதிகள் இவற்றுடன் புராணங்களுமாகும். அப்புராணங்கள் ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என மூவகைப்படும். அவற்றுள் ஸாத்விகபுராணங்கள் தான் ஏற்றுக்கொள்ளத்தக்கவை என்றும் அவை வேதத்தின் பொருளை விளக்குமவை என்றும்

கூறப்படுகின்றன. அப்படிப்பட்ட ஸாத்விக புராணங்களுள் சிறந்ததாயிருப்பது ''மார்க்கண்டேய புராணமாகும்''. அதில் க்ஷேத்ரகாண்டத்தில் நூறு அத்யாயத்திற்கு மேல் பதினோரத்யாயங்களால் ''ஸ்ரீவீக்ஷாரண்யக்ஷேத்ர மாஹாத்ம்யம்'' சொல்லப்பட்டிருக்கின்றது.

இந்த திவ்யக்ஷேத்ரத்துக்கு ஆழ்வார்களுடைய ஸ்ரீஸூக்திகளில் ''திருவெவ்வுள்'' என்றும், ஸ்ரீஆசார்யர்களு டைய வடமொழி ஸ்தோத்ரங்களில் ''கிம்க்ருஹபுரீ'' என்றும் புராணங்களில் ''ஸ்ரீவீக்ஷாரண்யம்'' என்றும் உலகநடவடிக்கை யில் ''திருவள்ளூர்'' என்றும் பெயர்கள் வழங்கப்பட்டிருக் கின்றன.

அந்த திவ்யதேசத்தெம்பெருமான் தன்னை ஒருக்கால் ஸேவித்த மாத்திரத்திலேயே பாக்யவிசேஷத்தாலே வேதாந்த ஞானத்தினுல் ஏற்படக்கூடிய பரதத்வ நிர்ணயம் ஸாமான்ய மனிதனுக்கும் கூட எளிதில் கிட்டிவிடுகிறது. விபவாவதார மாகிய ஸ்ரீராமாவதாரத்தில் வேள்விகாப்பதற்கென்று அழைத்துச் சென்ற விச்வாமித்ரர் அமைத்துக்கொடுத்த புல்படுக்கையிலே ஸ்ரீராமன் சயனித்துக்கொண்டு திருக்கண்வளர்ந்தருளிய அழகை அன்று விச்வாமித்ரர் மட்டிலும் தான் கண்டு அனுபவிக்கும்படி இருந்தது. அவ்வாறின்றி, ஸ்ரீசாலிஹோத்ர மஹர்ஷியின் பிரார்த்தனைக்கிணங்க எல்லாக்காலத்திலும் எல்லாமக்களுக்கும் அனுபவிக்கும் வண்ணம் அழகிய சயனத்திருக்கோலத்திலும், நின்றதிருக்கோலத்திலும் ஸேவை ஸாதிக்கிருர். ஸ்ரீராமாவதாரத்தில் தசரதசக்ரவர்த்தியும் அயோத்தி மக்களும் அனுபவித்த திவ்ய அவயவசோபையோடு கூடின திவ்யமங்களவிக்ரஹத்துக்கு நிகரான திவ்யமங்கள விக்ரஹத் தோடுகூடியவராய் ஸேவைஸாதித்து வருகின்றுர். இப்படி ஸாமான்யமான மக்கள் அனைவர்க்குமே இவ்வனுபவம் வருமென்றுல் கேவலம் பகவதனுபவபரர்களுக்கு வரும் பகவதனுபவமாகிய பெருவெள்ளம் வாக்கிற்கு எட்டாததாயிருக் கும். ஆனுல் அவ்வனுபவப்பெருக்கினுல் வெளிவரும் அவர்களது சொற்களாலும் செயல்களாலும் அவ்வனுபவம்

பெருகிவருவதை மட்டும் நாம் அனுபவிக்கலாம்.

அப்படிப்பட்ட அனுபவம் வாய்ந்தவர்களுள் நம் ஆசார்யஸார்வபௌமரான ஸ்ரீஅத்திப்பட்டு அழகியசிங்கரின் அனுபவமானது பெருக்கெடுத்து அந்த எம்பெருமான் மஹிமையைச் சொல்லுகிறதாகவும், அந்த க்ஷேத்ரத்திலுள்ள தீர்த்தத்தின் மாஹாத்ம்யத்தைச் சொல்லுகிறதாயும் உள்ள இந்த புராணத்தின் வ்யாக்யானத்தின் வடிவில் பெருக்கெடுத்தது. இதற்கு ''நாலாயிரப்படி'' என்று திருநாமம். (32எழுத்துக்கள் கொண்டது ஒருக்ரந்தம்(படி) என்று கூறப்படும். அவ்வாறு நாலாயிரம் க்ரந்தங்கள் கொண்டது இந்நூல்). மேலும் இவ்வழகிய சிங்கர் அந்த எம்பெருமானிடம் உள்ள ஈடுபாடே திருத்தேர்,திருச்சிவிகை, கண்ணுடித்திருப்பல்லக்கு முதலிய கைங்கர்யங்களைச் செய்யும்படி தூண்டியது. கவிதார்க்கிக சிங்கர் ஸ்ரீஹஸ்திகிரி மாஹாத்ம்யத்தைப் பண்ணும் இசையும் திகழும் படி அனுபவித்தமாதிரி நம் அழகிய சிங்கரும் ஸ்ரீவீக்ஷாரண்ய மாஹாத்ம்யத்தை வ்யாக்யானம் இயற்றுவதன் மூலம் அனுபவித்தார். அத்துடன் புராணங்கள் வேதாந்தோப ப்ரும்ஹணமாவது எப்படி என்பதும் விளங்குமாறு வ்யாக்யானம் அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. மஹாசார்யர்களின் ஒவ்வொரு க்ருதியிலும் (நூலிலும்) எல்லாம் அடங்கியிருப்பது இயல்பன்றோ? சொல்லுமவிடுசுருதி என்பது இதில் ஒவ்வொரு வாக்கியத்திலும் ஏற்படுகிறது.

ஸதாசார்யன் மூலமாக உபயவேதாந்தகாலக்ஷேபம் செய்தவர்கள் இதை குருவந்தனபூர்வகமாக ஸேவித்தார்களே யாகில் ஸ்ரீஅழகியசிங்கர் அனுபவம் ஆழ்வார் உள்ளிட்டார் களுடைய அனுபவத்திற்குச்சற்றும் குறையாதென்றே தீர்மானிப்பர்கள். ஸ்ரீஅத்திப்பட்டு அழகியசிங்கர் விபவத்தில் ஸ்ரீவீரராகவனையும் ஸ்ரீலக்ஷ்மீந்ருசிம்மனையும் மங்களாசாஸநம் செய்யும் காலங்களில் திருக்கச்சிநம்பி மாதிரி நேரேவார்த்தை யாடி ''என்னதிருவுள்ளம், என்ன திருவுள்ளம்'' என்று கேட்டு திருவுள்ளமறிந்து அந்தப்படியே கைங்கர்யங்கள் செய்வது வழக்கம் என்று அவ்வப்போது நிகழ்ந்த சிலகதைகள் இப்போதும்

பலபெரியோர்களால் சொல்லப்பட்டு வருகின்றன. ஸ்ரீவீரராகவனின் அனுபவம் போலே ஸ்ரீலக்ஷ்மீந்ருசிம்மன் அனுபவமும் அந்த எம்பெருமான் விஷயமான பாசுரங்களாகப் பரிணமித்தன.

ஸ்ரீஅத்திப்பட்டு அழகியசிங்கரை அர்ச்சையில் எழுந்தருளப்பண்ணி ஆராதிக்கத் திருவுள்ளங்கொண்டு நம் அழகியசிங்கர் திவ்யமங்களவிக்ரஹம் எழுந்தருளப்பண்ணும் போது ''வர்தேய ஸதாத்வதந்திகே'' என்கிற தன்னுடைய மநோரதப்படி ஸ்ரீஅத்திப்பட்டு அழகியசிங்கர் எழுந்தருளி யிருந்த நாளில் எம்பெருமான்களை அனுபவிக்கும் போது தானும்கூட இருந்து அனுபவிப்பவரான அழகியசிங்கரையும் அனுபவிக்கப்படுமவரான எம்பெருமானையும் அவ்வனுபவத் தையும் ஆக, இவ்வளவையும் அனுபவித்தாப்போலே அர்ச்சையிலும் ஸ்ரீஅழகியசிங்கர் எம்பெருமான்களை அனுபவிக்கும்போது தானும் அனுபவிக்கவேணும் என்கிற அவாவின் மிகுதியால் ''குறையல்பிரானடிக்கீழ் விள்ளாத அன்பன் இராமாநுசன்'' என்கிறபடி தனக்கு ஸ்ரீஅழகியசிங்கர் திருவடிகளிலே ஏற்ப்பட்ட நிலைநின்ற ஒப்பற்ற பக்திப் பெருக்கை எல்லாரும் அறியும் வண்ணம் திவ்யமங்கள விக்ரஹம் எழுந்தருளப்பண்ணி திருப்பிரதிஷ்டை செய்தருளி யாயிற்று. ஸ்ரீஅத்திப்பட்டு அழகியசிங்கர் திவ்யமங்கள விக்ரஹத்தை ஸேவிக்கும்போது அந்த திவ்யமங்கள விக்ரஹத்தின் பீடத்தில் திருவடிக்கீழ் நம்முடைய அழகியசிங்கர் அர்ச்சாரூபியாக எழுந்தருளியிருப்பதை ஸேவித்தால் அழகியசிங்கருடைய ஆசார்யபக்தியின் பெருக்கு செவ்வனே தோன்றும்.

பிறகு ஸ்ரீஅத்திப்பட்டு அழகியசிங்கர் ஸாதித்த இந்த வ்யாக்யானம் ஒன்றே ''தத்ராலமேக: கலு புக்திமுக்த்யோ:'' (இம்மைப்பயனுக்கும் மறுமைப்பயனுக்கும் இஃதொன்றே போதுமானது) ''ஒரொன்று தானே அமையாதோ'' என்கிறபடியே அமையும் என்பதைக் கணிசித்து நம்ஸம்ப்ரதாயத்திலுள்ளவர்கள் இதை அவசியம் ரஹஸ்யக்ரந்தங்களுடன் காலக்ஷேப க்ரந்தமாக

ஸேவிக்கவேணும் என்று திருவுள்ளம்பற்றி இதை முத்ரணம் பண்ணும்படி ஸ்ரீநியமனமாயிற்று. அந்தப்படியே இது திருக்கள்ளம் ஸ்ரீ.உ.வே.ரங்காசாரியரிடமிருந்து கிடைத்த மாத்ருகையை (கையெழுத்துப்பிரதி) வைத்துக் கொண்டு சோதித்து முத்ரிக்கப்பட்டது.

ஆகையால் நம் ஸித்தாந்த நிஷ்டர்கள் அனைவரும் இதைவாங்கி நம்மஹாதேசிகன் திருவுள்ளப்படி இதை ஸேவித்து க்ருதார்த்தர்களாக ப்ரார்த்திக்கிறேன். அப்படி அவர்கள் செய்தால் அது அவர்களுக்கு இம்மை மறுமையில் நன்மைக்கு சாதனமாவதுடன் ஆசார்யர்கள் அனுக்ரஹித்த க்ரந்தங்களை அச்சிட்டு வெளியிடுவதற்கு ஊக்கமளிப்பதாயும் இருக்கும். இத்துடன் கடைசியில் ஸ்ரீவீரராகவ வேதாந்த யதீந்த்ர மஹாதேசிகன் ஸாதித்த ஸ்ரீவீரராகவஸ்தவமும், ஸ்ரீஹஸ்தீச ஸ்தவமும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஸ்ரீஅத்திப்பட்டு அழகியசிங்கர் ஸாதித்த ‘‘அதிகரணகல்பதரு’’ முதலிய க்ரந்தங்களும் மற்றும் பூர்வாசார்யர்கள் ஸாதித்த ‘‘வேதபாதஸ்தவம்’’ ‘‘ஆசார்யகத்யம்’’ முதலிய ஸ்தோத்ரங்களும் கூடிய சீக்ரம் பதிப்பிக்கப்படும்.

ஸம்ப்ரதாயத்தில் ச்ரத்தை கொண்ட ஆஸ்திகர்கள் இதுவரையில் அச்சில்வராததான பூர்வாசார்ய க்ரந்தங்கள் கிடைத்தால் அவற்றை பதிப்பிப்பதற்குரிய முறையில் அனுப்பிவைத்தால் காலக்ரமத்தில் பதிப்பிக்க ஏற்பாடு செய்யலாம்.

இந்த புஸ்தகத்தில் ஏதாவது பிழைகள் இருந்தால் அவற்றை தெரிவித்தால் இரண்டாம் பதிப்பில் அவற்றை திருத்தி வெளியிடசௌகர்யமாயிருக்கும்.

‘‘श्रीनृसिहशठारादि पदद्वन्द्व समाश्रय:
इति लक्ष्मीनृसिंहोयं विज्ञापयति सादरम्’’

தேவனூர் விளாகம் — 43ம்பட்டம்
ஸ்ரீமுகவூ பங்குனி மீ 28 — அழகியசிங்கர்.
1934வூ

**ஸ்ரீ:**



**ஸ்ரீலக்ஷ்மீ ந்ருசிம்ஹபரப்ரஹ்மணே நம:**
**ஸ்ரீகிம்க்ருஹராஜ பரப்ரஹ்மணே நம:**
**ஸ்ரீவஸுமத்யை நம:**
**ஸ்ரீலக்ஷ்மீ ந்ருசிம்ஹதிவ்யபாதுகாஸேவக ஸ்ரீவண்சடகோப ஸ்ரீசடகோபராமாநுஜ யதீந்த்ர மஹாதேசிகாய நம:**

# ஸ்ரீவீக்ஷாரண் க்ஷேத்ர மாஹாத்ம்ய வ்யாக்யாநம்

यस्तत्वं परमुद्बभौ जगदिदं यस्मान्नपातं स्थितं
संस्थामाप्स्यति यत्र सौक्ष्म्य वशतो योऽर्थश्च तत्साधनम्
अन्तर्याम्यखिलस्य य: करुणयाहृद्यास्थितो भेषुजां
योऽनन्यापरिपाति किंगृहपुरी नाथस्सजीयात्सदा ।।
योहृत्तापहराख्यपुष्करिणिकातीरप्रतिष्ठानत
स्स्थानं कालविकालना विरहितं विस्मृत्य शान्तंशिवा
ब्रह्मक्षत्रमहौदनोत्ति मधुरं पिष्टं प्रदिष्टं जनै:
तेषामिष्टमुपादधाति सुलभस्तस्मै नमस्तन्महे ।।

यतो वा इमानि भूतानि जायन्ते, सदेव सोम्येदमग्र आसीत्, आत्मा वा इदमेक एवाग्र आसीत्, ब्रह्मवा इदमेकमेवाग्र आसीत्, नसन्नचासच्छिव एव केवल:, विष्णुस्तदासीद्धरिरेवनिष्कल:, एकोहवै नारायण आसीन्नब्रह्मा नेशानो नेमेद्यावापृथिवी इत्यादि

''आभूत संप्फवे प्रप्ते प्रलीने प्रकृतौ महान् एकस्तिष्ठति विश्वात्मा सतु नारायण: प्रभु: नष्ठे लोके द्विपरार्धावसाने महा भूतेष्वादि भूतं गतेषु व्यक्ते व्यक्तं कालवेगेनयाते भवानेकशिशष्यते शेष संज्ञ:''

''நில்லாதபெருவெள்ளம் நெடுவிசும்பின் மீதோடி நிமிர்ந்த காலம் – மல்லாண்ட திருக்கையால் பகிரண்ட மகப்படுத்த காலத்தன்று– எல்லாருமறியாரோ எம்பெருமா னுண்டுமிழ்ந்த எச்சில்தேவர்–அல்லாதார் தாமுளரே அவனருளே உலகாவ தறியீர்களே'' (பெரிய.திரு. 11–6–1)

''பேயிருக்குநெடுவெள்ளம் பெருவிசும்பின் மீதோடிப்
பெருகுகாலம்
தாயிருக்கும் வண்ணமே உம்மைத்தான் வயிற்றிருத்தி
உய்யக்கொண்டான்
போயிருக்கமற்றிங்கோர் புதுத்தெய்வம் கொண்டாடும்
தொண்டீர் பெற்ற
தாயிருக்க மணைவெந்நீராட்டுதிரோ மாட்டாத தகவற்றீரே''
(பெரிய.திரு 11–6–6)

''ஒன்றுந்தேவுமுலகுமுயிரும் மற்றும் யாதுமில்லா வன்று
நான்முகன் தன்னொடு தேவருலகோடுயிர் படைத்தான்
குன்றம் போல் மணிமாடநீடு திருக்குருகூரதனுள்
நின்ற ஆதிப்பிரான் நிற்க மற்றைத்தெய்வம் நாடுதிரே''
(திருவாய் 4–10–1)

'' தேவுமெப்பொருளும் படைக்க
பூவில் நான்முகனைப் படைத்த
தேவனெம்பெருமானுக்கல்லால்
பூவும் பூசனையும் தகுமே''

இவை முதலான உபயவேதாந்தங்கள் முறையிடுகின்றபடியே பிரம்மா, சிவன், இந்திரன் முதலான தேவதைகள், மிருகங்கள், மனிதர்கள், தாவரங்கள் முதலானவற்றையும், அனைத்து உலகங்களையும் படைத்துகாத்துஅழிப்பதை விளையாட்டாகக்

கொண்டவன் எம்பெருமான்.

सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म. विज्ञानमानन्दं ब्रह्म आनन्दो ब्रह्म, உணர்முழுநலம், ''முன்னல்யாழ் பயில் நூல் நரம்பின் முதிர் சுவையே கன்னலே அமுதே, கறந்தபால் நெய்யே, நெய்யின் இன்சுவையே, அமலஜோதிபிரான் இவை முதலானவற்றின் படியே, ஸத்ய ஜ்ஞாந அநந்த ஆநந்த அமலஸ்வரூபனாய், यस्सर्वज्ञस्सर्ववित्, यस्य ज्ञानमयं तपः, सत्यकामः सत्यसङ्कल्पः,परास्यशक्ति र्विविधैव श्रूयते स्वाभविकी ज्ञान बल क्रियाच, सर्वज्ञस्सर्वदृक् सर्वशक्ति ज्ञानबलर्धिमान्, तेजोबलैश्वर्य महाववोध संविर्य शक्त्यादि गुणैकराशिः

''ज्ञान शक्तिबलैश्वर्यवीर्यतेजांस्यशेषतः । भगवच्छब्द वाच्यानि विनाहेयैर्गुणादिभिः।।'' ''உயர்வற உயர்நலமுடைய வன்'' இவை முதலானவற்றின்படியே, यः पृथिव्यां तिष्ठन् पृथिव्या अन्तरः यं पृथिवीनवेद यस्य पृथिवीशरीरं, य आत्मनि तिष्ठन् आत्मनोन्तरः यमात्मा नवेद यस्यात्मा शरीरं. जगत्सर्वं शरीरं ते. तत्सर्वं वै हरेस्तनुःஒருயிரேயோ உலகங்கட்கெல்லாம், ஏகமூர்த்தி இருமூர்த்தி மூன்றுமூர்த்தி பலமூர்த்தியாகி, ஐந்து பூதமாம் இரண்டுசுடராய் அருவாகி, ''பூநிலாயவைந்துமாய், புனற்கணின்ற நான்குமாய், தீநிலாய மூன்றுமாய் சிறந்தகாலி ரண்டுமாய், மீநிலாய தொன்றுமாகி, இத்யாதிகளிற்படியே अस्ति नास्ति सदसत् सत्यानृतादि शब्द वाच्य स्थूल सूक्ष्म निखिल नेतनाचेतन शरीरகனாய், तेहनाकं महिमानस्सचंते यत्र पूर्वे साध्यास्सन्ति देवाः, यो अस्या ध्यक्षः परमेव्योमन् तद्विष्णोः परमं पदं सदापश्यन्ति सूरयः, सोध्वनः पारमाप्नोति तद्विष्णोः परमं पदं,

सहस्रस्थूणे विमितेदृढ उग्रे यत्र देवानामधि देव आस्ते, एकान्ति न स्सदा ब्रह्मध्यायिनो योगिनो हि ये । तेषां तत्परमंस्थानं यद्वै पश्यन्ति सूरयः ।। वैकुण्ठेतु परे लोके श्रिया सार्धं जगत्पतिः, ह्रीश्चते लक्ष्मीश्च पत्न्यौ ஒண்டொடியாள் திருமகளும் நீயும், கண்கள் சிவந்து பெரியவாய் வாயும் சிவந்து கனிந்து உள்ளே வெண்பலிலகு சுடரிலகு விலகு மகரகுண்டலத்தன் கொண்டல் வண்ணன் சுடர்முடியன் நான்குதோளன் குனிசார்ங்கன் ஒண்சங்கதை வாளாழியான், பலபலவே ஆபரணம் இவை முதலியவற்றின் படியே, அப்ராக்ருத ஸ்வாஸாதரண திவ்ய ஸ்தான விசேஷ பூஷணுயுத மஹிஷீ பரிஜந பரிசர்யாதி யுக்தனுன ஸ்ரீமந் நாராயணன், हरे विहरसि क्रीडाकन्तुकैरिव जन्तुभिः आसृष्टि सन्ततानां अपराधानां तिरोधिनीं जगतः पद्मासहाय करुणे प्रतिसञ्चर केलिमाचरसि என்கிறபடியே பாபவாஸனையை மாற்றுகைக்காக சிறுவர்கள் மணலால் கட்டின வீட்டை அழிக்குமாப்போலே உலகனைத்தை யும் தனக்குள்ளே அடக்கிக்கொள்ள எண்ணினுன். அதற்கேற்ப அண்டாதிபதி யான நான்முகனும் பகவானிடத்தில் அடங்கிவிட காவல் இல்லாதபழத்தோட்டம சூரையாடப்படுவதுபோலவும், தீயில் கருகின வஸ்த்ரம் போலவும், கலைந்த நீருண்ட மேகம் போலவும், கொழுந்து விட்டெரிகின்ற கற்பூரக்கட்டிபோலவும், பூமி தண்ணீருக்குள் அடங்கியது. தண்ணீர் நெருப்பிலும், தேஜஸ் காற்றிலும், வாயு ஆகாசத்திலும் அடங்கியது. ஆகாசமானது இந்திரியங்களிலும், இந்திரியங்கள் தன் மாத்ரைகளிலும், தன்மாத்திரைகள் பூதாதிகளிலும் பூதாதிகள் மஹத்திலும், மஹான் அவ்யக்தத்திலும், அவ்யக்தம் அக்ஷரத்திலும், அக்ஷரம் தமஸ்ஸிலும் அடங்குகிறது. தமஸ்ஸு பரமாத்மாவினிடத்தில் ஐக்யமாகிறது. ஆக, ப்ருதிவி (பூமி) தொடங்கி மஹத்தத்வத்தின் அளவு இருபத்து மூன்று தத்வங்களும் அவ்யக்த அக்ஷர தமச்சப்தவாச்ய ஸூக்ஷ்ம, ஸூக்ஷ்மதர, ஸூக்ஷ்மதமா வஸ்தமாய்

லயிக்கின்றன. சேதந அசேதனங்கள் அனைத்தும் பழுக்கக் காய்ச்சின இரும்பிலே விழுந்த நீர்போலே இறுகிச்சுவறி தனித்துப் பேசுவதற்குத் தகுதியற்றனவாய் பரமாத்மாவின் ஸ்வரூபத்தோடு ஒன்றிவிடு கின்றன. ஸர்வேச்வரனும் குடிமக்களது பிணக்கினாலே உண்டாகும் தனது திருவிளையாடல்களைத் தவிர்ந்து கவலையற்று உறங்கும் அரசனைப் போலே உறங்குவான் போல் யோகு செய்கிறான்.

பின்னர் உலகையெல்லாம் படைத்தபின்னர் தமது பேரனாகிய பரமசிவன் தமது மூத்த புதல்வனான ப்ரம்மாவின் தலையைக் கிள்ளியதால் ப்ரம்மஹத்தி பாபத்தால் கபாலமும் கையுமாய் எங்கும் திரிந்து வீறிட்டழ, எம்பெருமான் தன் மார்பைக்கீற அந்த ஜலத்தைத் தெளிக்க அக்கபாலம் நிரம்பி அக்கபாலம் கையைவிட்டுக் கீழேவிழ அவனை பாபம் நீங்கப் பெற்றவனாக ஆக்கினார். தமது ஸ்ரீபாததீர்த்தமாகிய கங்கையை தலையிலே தரித்தனாலே மீண்டும் சிவனானான். பின்பொருமுறை தக்ஷன் யாகத்துக்கழைக்காது அவமதித்த காரணத்தினால் சினங்கொண்ட சிவன் யாகத்தை அழித்து க்ரதுத்வம்ஸியாய் தக்ஷனையும் கொன்றதனால் ப்ரம்மஹத்தி பாபத்தால் பீடிக்கப் பெற்றபோது மஹாவிஷ்ணு அப்பரமசிவனை ஒரு குளத்தில் நீராடச் செய்து அப்பாபத்தைப் போக்குவித்தார். வ்யஷ்டி ஸ்ருஷ்டிக்காக தமது நாபீகமலத்தில் தோற்றுவிக்கப்பட்ட நான்முகப்பிரமனுக்கு கைவிளக்காக நான்கு வேதங்களையும் கொடுத்தார். அந்த வேதங்களை மதுகைடபர் அபஹரித்து விட்டனர். அப்போது ப்ரம்மா, ‘வேதோ மே பரமம் சக்ஷு:, வேதோ மே பரமம் தநம்’’ என்கிறபடி தனக்குச் சிறந்த கண்ணாகவும், சிறந்த செல்வமாகவும் உள்ள வேதங்கள் பறிபோய்விட்டனவே என வருந்தினார். உடன் திருமால் பிரமனின் துயரைப் போக்குவதற்காக ‘‘பேயிருக்கும் நெடும் பெருவெள்ளமெல்லாம் தனது கணைக்காலளவு’’ என்னும்படி நெடிதோங்கி வளர்ந்திருந்த மதுகைடபர்களைக் கொன்றார். அவர்களது சரீரத்திலுள்ள எலும்புமாமிசம் இவற்றால் பூமியை மேடுபள்ளமின்றி நிரவி அதனால் பூமிக்கு ‘‘மேதினீ’’ என்ற பெயருண்டாகச் செய்தார்.

பிரம்மாவுக்கு வேதங்களை மீட்டுக் கொடுத்து அவர் துயர் தீர்த்தார்.

மேலும் திருமாலானவர் இரணியகசிபுவிடம் அவன் மகனும் தம்முடைய பக்தனுமான ப்ரஹ்லாதன் ''எங்குமுளன் கண்ணன்'' என்று கூற அவனை மிகவும் கோபித்துக்கொண்டு ''இங்கில்லையா'' என்று தான் அளந்து தட்டின தூணைக்காலாலே உதைக்க ''யஸ்யாபவத் பக்தஜநார்த்தி ஹந்து: பித்ருத்வ மந்யேஷ்வ விசார்ய தூர்ணம்। ஸ்தம்பேவடதார:'' என்கிறபடியே தாம் அவதரிப்பதற்குத் தக்க புண்ணியம் செய்தவர்யார் என்று எண்ணுவதற்குரிய அவகாசம் இல்லாமையால் அத்தூணிலேயே அப்பொழுதே நினைப்பிட்ட சிங்கஉருவும் நரஉருவும் செய்து முழுதும் முடிவதற்கு முன்னமே அவ்வளவில் செய்த இரண்டு பாதிகளையும் ஒன்ருக்கிக்கொண்டு நரங்கலந்த சிங்கமாய் அவதரித்து ''எங்குமுளன்'' என்ற பக்த ப்ரஹ்லாதனது .... வாக்கை நிறைவேற்றினுர். அதுசமயம் அவனைக் கொல்வதற்கு திருவாழியை நினைக்கவும் கூடாத வேகமிகுதியாலே தன் திருக்கை நகங்களாலேயே குலபர்வதம் போன்று வலிமைமிக்கதான இரணியனது உடலைஇரண்டு கூருக்கி அவன் குடலை மாலையாக இட்டுக்கொண்டார். ''ஸ்தம்பைகவர்ஜமகிலம் நரசிம்ஹகர்ப்பம்'' என்று இனிஒரு வரம்பின்றி, ''ஏஷு ஸர்வேஷு கூடோத்மா, தம் துர்தர்சம் கூடம் அநுப்ரவிஷ்டம்'' ''கரந்தசிலிடந்தொறும் இடந்திகழ்பொருள் தொறும் கரந்தெங்கும் பரந்துளன்'' இவைமுதலானவற்றின் படியே அணுவுக்குள் அணுவானவனுயும், மஹதோ மஹீயனுயும் மறைந்து நின்ற தம்உருவை வெளியிட்டு மெய்யாக்கிக் கொள்ள வேண்டும்படி நேர்ந்தமைக்குப் பெரிதும் வருந்தினுர்.

''அவரவர் தமதம தறிவறி வகைவகை
அவரவர் இறையவரென அடியடைவர்கள்
அவரவர் இறையவர் குறைவிலர் இறையவர்
அவரவர் விதிவழி அடைய நின்றனரே'' என்றும்,

இஷ்டாபூர்தம் பஹுதா ஜாதம் ஜாயமாநம் விச்வம் பிபர்த்தி புவநஸ்யநாபி:। சதுர்ஹோதாரோ யத்ர ஸம்பதம் கச்சந்தி

தேவை:'' என்றும் சொல்கிறபடியே அறம் பொருள் இன்பம் ஆகிய மூவகை பலன்களை விரும்புமவர்கள் ஆராதிக்க அவர்கள் விரும்பிய பலன்களைத் தக்கவாறு தரும்படி எம்பெருமானாலே தரப்பட்ட சக்தியை உடையவரான ப்ரம்மா தனது கொள்ளுப்பேரனான ராவணனுக்கு தனது குடல் துவக்காலே அவன் பண்ணின தபஸ்ஸுக்கும், தரப்போகிற பலனுக்கும் உள்ள அளவை எண்ணிப்பாராமல் தோன்றினபடியெல்லாம் வரம் கொடுத்தான். அந்த வரவலிமையாலும், தமோகுணம் மிக்கவன் ஆகையாலும் தன் நிலையை மறந்த ராவணன் தேவர்களைத் துரத்தி அவர்கள் தங்கள் குடியிருப்பை விட்டோடும்படிபண்ணியும், மூன்று உலகங்களது யோகக்ஷேமங்களை நிர்வஹிக்கும் தலைவனாக எம்பெருமானாலே ஸ்தாபிக்கப்பெற்ற தேவேந்திரனைச் சிறைக்கூடத்திலடைத்தும், ரம்பை, புஞ்சிகஸ்தலை முதலிய தேவலோகத்துப் பெண்களையும், கணக்கிட முடியாத மனுஷ்ய யக்ஷ கந்தர்வ கின்னர பன்னகம் முதலிய ஜாதியைச் சார்ந்த பதிவ்ரதைகளையும் பலாத்காரமாகப் பீடித்தான் ராவணன். மேலும் அவர்களது பந்துக்களையெல்லாம் ஹிம்சித்தான். அநேக மஹர்ஷிகளைக் கொன்று தின்றான். ''யஜ்ஞோ ஹி ச்ரேஷ்ட தமம் கர்ம'' என்கிறபடியே பகவானுக்கு ப்ரீதியை உண்டாக்குவதில் மிகச்சிறந்தவைகளான அநேக யஜ்ஞங்களை அழித்தான். இதுகாறும் செய்தவை எல்லாம் ஒரு தட்டும், தம்முடைய விஷயத்தில்பட்ட அபசாரம் ஒருதட்டு என்னலாம்படி பிராட்டியைப் பிரித்தான். அத்துடன் நில்லாது வேற்று ஜாதியைச் சேர்ந்த சிறியதிருவடியும் ''மாமாபிவ்யதிதம் மந:'' என்னும்படி நெஞ்சுருகும் வண்ணம் அளவற்ற ஏகாக்ஷி முதலிய அரக்கிகளைக் கொண்டு, மிரட்டுதல், அச்சுறுத்தல் முதலிய உபத்ரவங்களைச் செய்வித்ததோடன்றி தானும் செய்தான். ''விலாபாச்ரயதுர்வசம்'' புற்றில் தோன்றிய வால்மீகியும் சொல்லவாயெழும்பாதபடி கண்ணீர்விட்டுப் புலம்பிய ஸ்ரீராமர் ''ராஜ்யாத்ப்ரம்ச: வநேவாஸ: ஸீதா நஷ்டா ஹதோத்விஜ: ஈத்ருசீயம் மமாலக்ஷ்மீ: நிர்தஹேதபிபாவகம்'' என்னும்படி அத்துயரத்தின் கொடுமையாலே தன்னிலைதடுமாறி

கதம்பம் அசோகம் கர்ணிகாரம் நாவல், திலகம் முதலான மரங்களையும், மான், புலி, சிங்கம் முதலிய மிருகங்களையும், ஆறு மலை முதலியவற்றையும் விளித்து ''ஸீதையைக்கண்டீர்களா'' என்று கேட்டார். அத்துயரமெல்லாம் மறக்கும்படி கபந்தன் கைகளிரண்டையும் வெட்டியதால் உத்தம கதிபெற்ற அவன் மூலம் மேற்கொண்டு செய்ய வேண்டிய கார்யங்களை அறிந்து கொண்டார். பம்பா ஸரஸ்ஸுக்கருகில் சென்றபோது, எல்லாவிதத்திலும் தனக்குச் சமமில்லாதவனுன ஒருவாநரனை அடுத்து ஸீதையைத்தேடி அவளிருக்குமிடம் அறிந்து கொண்டார். கலையும் கரியும் பரிமாவும் திரியும் கானம் கடந்து போய், மலைகொண்டு அலைநீரணைகட்டி என்கிறபடி குரங்குகள் கூட்டம் கைகளால் கொணர்ந்து போட்ட மலைகளாலே கடலில் அணைகட்டி இலங்கைக்குச் சென்றார். நாகாஸ்த்ரம், ப்ரம்மாஸ்த்ரம், சக்தி ஆயுதம் இவைகளாலே செத்துப் பிழைத்தார். மிக்கபெருமுயற்சியாலே புத்ரமித்ராதிகளுடன் ராவணனுகிய ஸாலவ்ருக்ஷத்தை அடிவேரோடு பிடுங்கி அழித்து சீதையின் துயர்தீர்த்தார். திரும்பவும் சிலநாள் சென்றபின் கொடியவிஷம் போன்ற உலகத்தார்வாயாலே கிளம்பின அபவாத பயத்தாலே பிராட்டியைப் பிரிந்தார். அச்வமேதயாகத்தின் நடுவில் வால்மீகியின் பின்னுலே காஷாய வஸ்த்ரத்துடன் வந்த பிராட்டி ''உத்பத்தி பரிபூதாயா: கிமஸ்யா: பாவநாந்தரை: தீர்த்தோதகஞ்ச வஹ்நிஸ்ச நாந்யத: சுத்திமர்ஹத:'' என்கிறபடியே பிறவியிலேயே பரிசுத்தையான நம்மை இலங்கைத்தீவில் அனைத்துத் தேவர்கள் நரர்கள் வாநரர்கள் கூட்டத்தில் ஸாக்ஷாத் அக்னியில் நான் ப்ரவேசித்தேன். எனது கற்புக்கனலை உண்மையில் அறிந்தவனுன அக்னியும், திரும்பவும் உள்ளது உள்ளபடியே உருக்குலையாமல் கொண்டுவந்து கொடுத்தான். அற்பஜநங்களது பழிச்சொல்லாலே மீண்டும் அஞ்சி நிற்கிற நம் கணவருக்காக இன்னமொருக்கால் தீயில் குதித்தாலும், இப்படியே சிலநாள் சென்றபின் கெட்டலோகம் நம்மை பிழைக்கவொட்டாது. இனி இந்த உலகில் நாம் இருக்கத்தகாது

என்று நினைத்து ''பூமி தேவியே எனக்கு இடமளிப்பாயாக'' என்று தனக்குப் பெற்றதாயான பூமிப்பிராட்டியை ப்ரார்த்திக்க, அவ்வளவில் திவ்யஸிஹாஸநத்தில் பூமிப்பிராட்டி, ''வருக வருக'' என வரவேற்க சீதாப்பிராட்டியை எடுத்துவைத்துக் கொண்டு பாதாளத்திற்குச் சென்றுவிட்டாள்.

இவ்வாறு ஸ்ரீராமாவதாரத்தில் ஏற்பட்ட துக்கத்தையும், ஸ்ரீகிருஷ்ணுவதாரத்தில் ''அவஜாநந்தி மாம்மூடா:'' என்று சொல்லுகிறபடி பலராலும் அலட்சியப்படுத்தப்படுதல், தூதுசெல்லுதல், தேரோட்டுதல் முதலிய கணக்கற்ற சங்கடங்களையெல்லாம் எண்ணிப்பார்த்தார்.

மேலும் உலகை நிர்வஹிப்பதிலுள்ள துன்பங்களையும் நினைத்து, உலகைப் படைப்பது, அதனைக்காப்பது ஆகிய காரியங்களுக்கு ஒரு கும்பிடு. இதுநாம் படத்தக்கதன்று என்று ''க்ருஷ்ண'' என்று ஸ்வரூபாநுபவ மஹாநந்த தத்பரராய் சிலநாள் கிடப்போம் என்று நினைத்தவர் போலே யோக நித்ரையில் மூழ்கியிருந்தார். அப்படி பரார்த்தத்துக்கு ஸமானமான காலம் சென்றது

பின்னர் ஒரு சமயம், தமக்கு லீலாரஸம் அனுபவிக்க வேண்டும் என்று ஆசை உண்டான போது ''ஹரே விஹரஸி க்ரீடா கந்துகைரிவ ஜந்துபி: த்வம் நயஞ்சத்பிருதஞ்சத்பி: கர்மஸூத்ரோபபாதிதை:'' என்றும், ''பால: க்ரீடநகைரிவ'' என்றும் சொல்லுகிறபடியே பழையபடியே எல்லாவற்றையும் தோற்றுவிப்போம் என்கிற எண்ணமுள்ளவராயும் சேர்ந்தாற் போல் எல்லா விஷயமாயும், அப்படியே எல்லாகாலத்திலும் நிலைத்திருப்பதாயும், கண்ணாலே காணலாம்படியாக பரந்தவையாயும், ஸ்வதஸ்ஸித்தமாயுமிருக்கிற பலவிதமான ப்ரஜைகளாகவும் ஆகிறேன்'' என்ற வடிவினதான தம்முடைய மஹாவிஜ்ஞாநமாகிற கண்ணாடியில் ஸமஸ்த சேதநர்களும் ''கர்மாத்யக்ஷ: ஸர்வபூதாதி வாஸ:'' ''யோ அந்தரிக்ஷே ரஜஸோ விமாந:'' என்கிற இவற்றின்படி பரமாத்மா ஒருவனாலேயே அறியத்தக்கவைகளாயும், அநாதிகாலமாக தொடர்வனவாயும் பக்வமானது பக்வமில்லாதது முதலிய அநேக பதங்களாலே

வேறுபட்டவையாயும், ஸூக்ஷ்ம, ஸூக்ஷ்மதர ஸூக்ஷ்மதமங் களாயும், ஸ்தூலஸ்தூலதரஸ்தூலதமங்களாயும் இருக்கிற தம்தாம் கர்மங்களோடும், அதன் வாஸனைகளோடும், கையிலங்கு நெல்லிக்கனிபோல் விளங்க, இரண்டு பரார்த்தத் தின் முடிவான காலத்தில் ஓரண்டத்தை ஸ்ருஷ்டிக்க நினைத்து அதற்கு வேண்டிய சேதநகோடிகளைப்பிரித்து வைத்துக் கொண்டு ஸமபரிணாமசீலையான ப்ரக்ருதியை விஷமபரிணா மோந்முகமாகும்படி தோற்றுவித்து ‘‘மமயோ நிர்மஹத்ப்ரஹ்ம தஸ்மிந் கர்ப்பம் ததாம்யஹம்; ஸம்பவஸ்ஸர்வபூதாநாம் ததோ பவதி பாரத’’ என்கிறபடியே அம்மூலப்ரக்ருதியாகிற காரணத்ரவ்யத்தில் பிரித்துவைத்த சேதநகோடிகளைப் புகுரவிட்டு ஏவிவிட அவ்வளவில் அப்ப்ரக்ருதியில் நின்றும் மஹதஹங்காரதந்மாத்ரைகள் பஞ்சகபூத பூதபஞ்சக பதினொரு இந்திரியரூபங்களான தத்வங்கள் பிறக்க,

नानावीर्याः पृथग्भूताः ततस्तेसंहतिंविना

नाशक्नुवन्प्रजास्स्रष्टुम् असमागम्यकृत्स्नशः

समेत्यान्योन्य संयोगं परस्पर समाश्रयाः

महदाद्या विशेषान्ताद्यण्डमुत्पादयन्ति ते என்றும்

व्योम्नोर्ध्वभागस्चत्वारः वायु तेजः पयोभुवां.

இப்படிப்பட்ட வசனங்களுக்கு மூலமான ‘‘ஸேயம் தேவதைக்ஷத’’ ஹந்தாஹமிமாஸ்திஸ்ரோ தேவதா: அநேந ஜீவேந ஆத்மநாநுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரவாணி, தாஸாம் த்ரிவ்ருதம் த்ரிவ்ருதம் ஏகைகாம் அகரோத்’’ என்கிற ச்ருதி வாக்கியத்தின்படியே வேறுவேறாகிநின்ற அந்த தத்த்வங்களை குயவன் நுண்ணிய மணலையும் மண்ணையும் கலந்து பிசையுமாப்போலே மூன்றாக ஆக்குதல், ஐந்தாக ஆக்குதல் முதலிய முறைகளிலே அண்டம் முதலானவற்றை ஸ்ருஷ்டிப்பதற்குத் தக்கவாறு கலந்து பிசைந்து அண்டத்தை ஸ்ருஷ்டித்து அதனை நிலைநிறுத்துபவராகத் தம்முடைய நாபீகமலத்தில் நான்முகனைப் படைத்து அவருக்கு

அண்டத்திலுள்ள ஸமஸ்த ஜீவராசிகளது வ்யஷ்டி ஸ்ருஷ்டிக்கு உபயோகப்படும்படியான அதனுடைய கர்மவாஸநாசக்திகளை யும் கொடுத்து

योब्रह्माणं विदधाति पूर्वं योवै वेदांश्च प्रहिणोति तस्मै என்றும்

पद्मे दिव्येऽर्कसंकाशे नाभ्यां उत्पाद्य मामपि

प्राजापत्यं त्वया कर्मसर्वं मयि निवेशितम्

என்றும் சொல்லுகிறபடியே அவருக்கு ஸர்வகார்யங்களுக்கும் ப்ரமாணமாக எல்லா வேதங்களையம் உபதேசித்தார். இனி அண்டத்துக்கு உட்பட்ட எல்லா வ்யஷ்டிஸ்ருஷ்டி முதலான வற்றை ப்ரமாணப்படி நடத்தும் என்று நியமித்து தாமும் அவருக்கு பற்றுக்கோடாக இருந்தார். அப்படி பரமபுருஷனாலே நியமிக்கப்பட்ட ப்ரம்மா பூ: புவ முதலிய அனைத்து உலகப்பிரிவு களையும் இந்திரன் முதலிய தேவதைகளையும் அவரவர்களுக் குரிய ஸ்தாநம், அதிகாரம் முதலியவற்றையும் கொடுத்து, மஹர்ஷிகளையும் தோற்றுவித்து அந்த மஹர்ஷிகளுக்கு ஞானம் சக்தி முதலானவற்றையும் கொடுத்து வேதங்களையும் கொடுத்தார். பின்னர் அவர்களைக்கொண்டு ''அங்காநி வேதாஸ் சத்வார: மீமாம்ஸாந்யாய விஸ்தர:; புராணம் தர்ம சாஸ்த்ரஞ்ச வித்யா ஹ்யேதா: சதுர்தச'' என்று சொல்லப் பட்ட பதினான்கு வித்யாஸ்தானங்களையும் தோற்றுவித்தான் எம்பெருமான். அவ்விடத்தில், சிக்ஷா, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பங்களாகிற ஆறு அங்கங்களும், மீமாம்ஸா ந்யாய விஸ்தராதிகளும் வேதத்துக்கு உதவும் விதத்தை கைசிகபுராணத்தில் பட்டர் அருளிச்செய்தார். ''இதிஹாஸ புராணாப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத்'' என்று இதிஹாஸ புராணங்களாலே வேதத்தின் கருத்துக்களை விளக்கமாகத் தெரிந்து கொள்ளும்படி மனுவின் கட்டளை. உபப்ரும்ஹமாவது – ''ஸ்வயோகமஹிமஸாக்ஷாத்க்ருத பராவரதத்த்வ யாதாத்ம்யாநாம் வாக்யை: ஸ்வாவகத வேதவாக்யார்த்த வ்யக்தீ கரணம்'' என்று ஸ்ரீபாஷ்யகாரரருடைய ஸ்ரீஸூக்தியின்படியே தனக்கு ஆசார்யனாலே உபதேசிக்கப்பட்ட வேதவாக்யார்த்

தங்களுக்கு வ்யாஸர், பராசரர், சுகர், சௌனகர் முதலிய ஸாத்விக மஹர்ஷி வசநங்களோடே ஆராய்ந்து கொள்ளுகை, ஒருமைப் பாட்டை நிச்சயித்துக் கொள்ளுகை என்றபடி. புராணம் தர்மசாஸ்த்ரஞ்ச என்றவிடத்தில் இதிஹாஸத்தை தர்மசாஸ்த்தி ரத்திலாவது புராணத்திலாவது சேர்த்துக்கொள்ளவேணும். மேலும் ந்யாய பரிசுத்தியிலுள்ள ஸ்ரீஸூக்தியாவது, ''ததஸ்ச வேதமூலா: ஸ்ம்ருதய: த்ரிவிதா:, தர்மசாஸ்த்ர – இதிஹாஸ– புராணபேதாத் தத்ர ஆத்யயோ: அதூரவிப்ரகர்ஷாத் ஏக வித்யா ஸ்தாநநிவேச:'' என்று. ''இதிஹாஸ புராணுப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத்'' என்கிற வசனத்தில் தர்மப்ரதானமான முன்பகுதியை விளக்குவது இதிஹாஸம் என்றும், ப்ரம்ம ப்ரதானமான உத்தர பாகத்தை விளக்குவது புராணங்கள் என்றும் தாத்பர்யம். தர்மத்தை ப்ரதானமாகக் கொண்டதாயல்லவோ இதிஹாஸமிருப்பது. ஸர்க்கம், பிரதிஸர்க்கம் முதலிய பரப்ரம்மத்தின் செயல்களை விளக்குவதன்மூலம் பரப்ரம்மத்தை விளக்குவதையே ப்ரதானமாகக்கொண்டதாக அல்லவோ புராணமிருப்பது. ஆராய்ந்து பார்த்தால் இதிஹாஸமாவது வம்சங்களையும் அவர்களது சரித்ரங்களையும் விளக்குவதாக புராணமிருக்கிறதேயொழிய வேறில்லை. ஆகையால் மூன்றெழுத்துக்களை கொண்டதான புராண சப்ததைக் காட்டிலும் நான்கெழுத்துக்கள் கொண்டதான இதிஹாஸ பதத்தை முந்துற ப்ரயோகித்தபடியால் ''அப்யர்ஹிதம் பூர்வம்'' என்கிற வ்யாகரண சாஸ்த்ரப்படி அப்யர்ஹிதரூபமான பூஜ்யத்வம் இதிஹாஸத்துக் குச் சொன்னதும் புராணத்துக்கே சொன்னதாய்த்து. ஆகையாலே யன்றோ ஸ்ரீபாஷ்யத்தில் புராணரத்ந (ஸ்ரீவிஷ்ணுபுராணம்) நிர்வாஹமே ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்தது. ஆக வேதாந்தத்தின் அர்த்தங்களையெல்லாம் விளக்குவதற்குப் புராணமே வேண்டுவது.

அவ்விடத்தில் வக்த்ருவைலக்ஷண்யம். ச்ரோத்ரு வைலக்ஷண்யம், ப்ரபந்த வைலக்ஷண்யம், விஷய வைலக்ஷண்யம் ஆகியவை முக்யமானவைகளாகும். இங்கு சொல்பவரது சிறப்பாவது மஹர்ஷிகளாலே தோற்றுவிக்கப்பட்ட

புராணஸம்ஹிதைகளை இயற்றுவதாகிற அநுக்ரஹமும், அதற்கு அநுஸரணையான ஞானம், பகவத்பக்தி, வைராக்யம், சாதுஜனங் களாலே கௌரவிக்கக்கூடிய தன்மைகளும் உலகமே அதிசயிக் கத்தக்க பெருமைகளுமாகும். கேட்பவர்களது சிறப்பாவது – ஸ்ரீமந்நாராயணனிடத்தில் மிகுந்த ஈடுபாடும், அதற்கேற்றவாறு ஞானம், பக்தி, வைராக்யம் குரு சுச்ரூஷை முதலியவைகளும் பரமபாகவதோத்தமரது குலத்தில் பிறப்பும் ஆகும்.

விஷயவைலக்ஷண்யமாவது – மேலானவற்றை அறியத்தக்கதாயும், மேலானவற்றை அடைவிப்பதாயும், பரமாத்மாவை அடையத்தக்க உபாயத்தை அறிவிப்பதாயும், பரனை ஆராதிப்பதற்கான விஷயங்களையும், அவனது அடியார்களது பெருமைகளையும், முமுக்ஷுக்களுக்குண்டான ஸாத்விகமான அர்த்தங்களைத் தெரிவிப்பதுமாகும்.

ப்ரபந்த வைலக்ஷண்யமாவது – ஸாத்விக புராணங்களில் சேர்ந்திருக்கை.

இம்மார்க்கண்டேய புராணத்துக்கு வக்தாவான மார்க்கண்டேயருக்கு மந்த்ரராஜபத ஸ்தோத்ரத்திலே ஸர்வஜ்ஞ ரான ருத்ரன் தானே சொன்னாரென்று ஸர்வதந்த்ரஸ்வதந்த்ர உபயவேதாந்த தேசிகன் பட்டம் கட்டினார். ஸ்ரீவிஷ்ணு புராணத்தை இயற்றியவராகிய பராசரருக்கு, ''புராண ஸம்ஹிதா கர்த்தா பவாந் வத்ஸபவிஷ்யஸி தேவதாபாரமார்த்யஞ்ச யதாவத் வேத்ஸ்யதே பவாந்'' என்று புராணத்தை இயற்றுவதற்குரிய அதிகாரத்தையும், தேவதையின் பெருமையை உள்ளபடி அறியக்கூடிய தன்மையையும் அநுக்ரஹித்தார். புலத்ஸ்த்யர் வசிஷ்டர் இவர்களைக்காட்டிலும் எல்லாவிதத்திலும் வியக்கத்தக்க ஞானம் பக்தி இவற்றை உடையவராயும் ''சங்கராத்ஞானமந்விச்சேத்'' என்று ஞானத்தை அளிப்பதில் முதலானவராயும் விளங்கினார். மறுபடியும் ஸ்ரீமந்நாராயணன் மற்றொரு ஆசையை மனத்தால் எண்ணினார். அப்படி அவர் த்யானித்துக் கொண்டிருக்கும்போது நெற்றியிலிருந்து வியர்வைத்துளி விழுந்தது. அந்த வியர்வையிலிருந்து கொப்பளம் உண்டாயிற்று. அதிலிருந்து மூன்றுகண்ணையும்,

சூலமேந்திய கையையும் உடையஒரு புருஷன் தோன்றினுன். ''ருத்ரஸர்கம் ப்ரவக்ஷ்யாமி தந்மேநிகத: ச்ருணு; கல்பாதௌ ஆத்மநஸ்துல்யம் ஸுதம் ப்ரத்யாயதஸ் தத: ப்ராதுராஸீத் ப்ரபோரங்கே குமாரோ நீலலோஹித:'' என்றும் ஏதேதௌ விபுச்ரேஷ்டௌ ப்ரஸாதக்ரோதாஜௌ ஸ்ம்ருதௌ ததாதர்சிதபந்தாநௌ ஸ்ருஷ்டி ஸம்ஹார காரகௌ'' என்றும் சொல்லுகிற படியே பகவத்புத்ரனுயும் பௌத்ரனுயுமிருக்கிற ''ஸர்வஜ்ஞர்'' என்று போற்றப்படுபவரான, பார்வதியின் கணவரான பரமசிவன் பார்வதியோடு வீற்றிருக்கும்போது மார்க்கண்டேயர் சிவனருகே வந்தார். ''மார்க்கண்டேயரே! உமக்கு வேண்டிய வரத்தைக் கேளும்'' என்ன, மார்க்கண்டேயர், எமக்கு உமது தர்சனமே போதும், இருப்பினும் தேவரீர் அடியேனுக்கு வரம் தருவதாயிருந்தால் கீழ்க்கண்ட வரத்தைத் தாரும். பக்தர்களை ஒருக்காலும் கைவிடாத அச்சுதனிடத்தில் உறுதியான பக்தியையும், அவரது பக்தரான உம்மிடத்திலும் அத்தகைய பக்தி வேண்டும் என்று கேட்டார். உடன் பரமசிவனும், ''மார்க்கண்டேயரே! நீர் பிறந்த நாள் முதல் பகவானிடத்தில் ஒப்பற்ற அசையாத பக்தியுடையவராகையால் உமக்கு ஸ்ரீமந்நாராயணனிடத்தில் பக்தி நான் தரவேண்டியதில்லை. அது காரணமாகவே பராத்பரவஸ்துவாகிய ஸ்ரீமந்நாராயணனது உண்மையான பெருமைகளையெல்லாம் அறியக்கூடிய ஞானமும் உமக்கு இயற்கையாகவே உள்ளது. அதுவும் நாம் தரப்படவேண்டியதில்லை. பின்னர் உமக்கு என்ன வரம் தரப்போகிறேன் என்ருல் கல்பம் முடிகிறவரை உமக்கு மிக்கபுகழும், கிழத்தனமோ மரணமோ இல்லாமையும், முக்காலமும் உணரக்கூடிய ஆற்றலும், பகவானைத்தவிர மற்ற விஷயங்களில் இவை குற்றமுள்ளவை என்ற ஞானமேற்பட்டு அதனுல் அவற்றில் விரக்தியும், ப்ரம்மவர்ச்சஸ்ஸும், ஸாத்விக புராணத்துக்கு ஆசார்யனுக விளங்கும் தன்மையையும் அநுக்ரஹித்துவிட்டு சிவன் மறைந்தார்.

இதனுல் பரமாத்மாவின் சிறப்பையெல்லாம் தெரிவிக்கக்கூடிய புராணத்தை இயற்றக்கூடிய ஆற்றல்

படைத்தவர், அதிலும் பராசரரைக் காட்டிலும் மேலான தன்மை நிரூபிக்கப்பட்டது. அவ்வாறே ஸ்ரீபாகவதத்தில் 12வது ஸ்கந்தத்தில் 10வது அத்யாயத்தில் ஸ்ரீசுகர் கூறியதாவது – ‘‘तमेवं निभृतात्मानं वृषेणदिविपर्यटन् रुद्राण्या भगवान् रुद्रो ददर्श स्वगणैर्वृत:’’ என்று, பார்வதியிடம் பரமசிவன் கூறியது:– नैवेच्छत्याशिष: क्वापि ब्रह्मर्षिर्मोक्षमप्युत भक्तिं परां भगवति लब्धवान् पुरुषेऽव्यये अथापि संवदिष्यामो भवान्येतेन साधुना अयं हि परमोलाभ: नृणां साधुसमागम: என்று ரிஷிக்கிருக்கிற பகவத்பக்தி பூர்த்தியாலே ஒருவரமும் நாம் கொடுக்க வேண்டியதில்லை. அவரது ஸேவையே நமக்கு லாபம் என்று தமது அபிப்ராயத்தை வெளியிட்டார். பின்னர் பரிவாரத்தோடு எதிரே நின்ற போதிலும், ரிஷியானவர் அனைத்து இந்திரியங்களை யும் அடக்கியவராய் சமாதிநிலையில் இருந்தபடியால் நம்மைக் காணவில்லையென்று ருத்ரன் அணிமா முதலிய சக்தி படைத்தவராதலால் அவரது இதயத்துக்குள்ளே புகுந்து தன் ஸ்வரூபத்தை அவருக்குக் காட்ட, அவரும் ஆச்சர்யப்பட்டுக் கண்ணைத்திறந்து பார்த்து ஸேவித்து பூஜைபண்ணி ஸ்தோத்ரம் பண்ணினர். பரமசிவனும், ‘‘नह्यम्मयानि तीर्थानि न देवाश्चेतनोज्झिता: तेपुनन्त्युरुकालेन यूयं दर्शन मात्रत:’’ என்று தோத்தரித்த துடன், நான் உமக்கு என்ன வரம் கொடுக்கவேணும்மென்று கேட்டதையும், ரிஷியின் பிரார்த்தனையையும், ருத்ரன் வரம் கொடுத்த விதத்தையும் விவரிக்கிறர். ‘‘कं वृणेऽत: परंभूमन् वरं त्वद्वर दर्शनात् यद्दर्शनात् पूर्णकाम: सत्यकाम: पुमान् भवेत् वरमेकं वृणेऽथापि पूर्णकामाभि वर्षणात् भगवत्यच्युते भक्तिं तत्परेषु तथात्वपि इत्यर्थितोऽभिष्टुतश्च मुनिनासूक्तया गिरा तमाह भगवान्शर्व: शर्वयाऽचाभिनन्दित: कामं सदा महर्षेऽसि

भक्तिमांस्त्वमधोक्षजे आकल्पान्ताद्यशः पुण्यमजरामरता तथा ज्ञानं त्रैकालिकं ब्रह्मन् विज्ञानञ्च विरक्तिमत् ब्रह्मवर्चस्विता भूयात् पुराणाचार्यता स्तुते, एवं वरान् स मुनये दत्वाऽगात् त्र्यक्षईश्वरः'' இத்தகைய வசநங்களாலே.

இதற்கு முன் எட்டாவது அத்யாயத்தில் ஸ்ரீசௌநகர் ''आहुश्चिरायुषमृषिं मृकण्डुतनयं जनाः यः कल्पान्तेप्युर्वरितो येन ग्रस्तमिदं जगत् स वा अस्मत्कुलोत्पन्नः कल्पेऽस्मिन् भार्गवर्षभः नैवाऽधुनापि भूतानां संप्लवः कोपिज्ञायते एक एवार्णवे भ्राम्यन् ददर्श पुरुषं किल वटपत्रपुटे तोकं शयानञ्चैकमद्भुतम् एषनस्संशयोभूयान् सूत कौतूहलं यतः तन्नश्छिन्धि महायोगिन् पुराणेष्वपि सम्मतः'' என்று பண்ணிய மார்க்கண்டேய கதா ப்ரச்னத்தில் எங்கள் குலத்தில் தோன்றிய ''பார்கவர்ஷப:'' என்று சொன்னபடியால் மார்க்கண்டேயர் ''ப்ருகு'' என்கிற ''வத்ஸஜ ரிஷியின் வம்சத்தைச் சேர்ந்தவரென்றும் மஹாநுபாவரான ஸ்ரீசௌநக பகவானுக்கு முந்தினவரென்பதும் தெளிவாயிற்று. ''கிம் ஸ்விதத்ராந்தரா பூதம்'' இவைமுதலான ஜகத்தாரக மஹாபூதப்ரச்னத்தை உபக்ஷேபித்து ''விஷ்ணு நாவித்ருதே பூமீ இதிவத் ஸஸ்யவேத நா'' என்று ஸ்ரீமஹாவிஷ்ணுவே உலகைத் தாங்கும் மஹாபூதம் என்று ஸ்ரீவத்ஸரிஷியினுடைய ஸித்தாந்தமென்று ஆருணத்தில் ''க்வேதமப்ரம்'' இத்யாதி எட்டாவது அநுவாகத்தில் சொல்லுகிறபடியால் பரதேவதை யைப்பற்றிய உண்மையான ஞானம் ஸ்ரீவத்ஸகோத்ரத்தவர்களான வம்சபரம்பரையாக ஏற்பட்டதல்லவா. அப்படி ஸ்ரீசௌநகரது கேள்வி பதிலான மேல் ஸந்தர்ப்பத்தில் மார்க்கண்டேயரது வர்ணாச்ரம தர்மநிஷ்டையி லுள்ள உறுதிப்பாட்டைக் கண்டு இவர் விஷயத்தில் அச்சம் கொண்டான் இந்த்ரன். அவ்வாறு அஞ்சிய இந்திரன் ஒருவரை மோஹிக்கச்செய்வதற்கான ஸாதநங்கள் பலவற்றுடன் இவரை மயக்குவதற்காகவே

புஞ்சிகஸ்தலே என்கிற அப்ஸரஸ்ஸை அனுப்ப, அவளும் தன்னுலியன்ற அளவு மோஹிக்கச் செய்ய முற்பட, அந்த ஸமயத்தில் வாயு கொங்கைமேல் உள்ள வஸ்த்ரத்தைப் பறித்துவிட இப்படி பல செய்தும் இவர் சிறிதும் சலிக்காமல் இருந்ததால், இந்திரன் முதலியவர்கள் பண்ணியதெல்லாம் வீணுய்போய்விட்டது. பகவானது அவதாரமாகிய நரநாராயணர் களாகிய இருவரும் இவ்வரலாற்றைக் கேட்டுப் பெரிதும் வியப்புற்று இவரது ஆச்ரமத்துக்கு எழுந்தருளினுர்கள். மார்க்கண்டேயரும் அவர்களே வரவேற்றுப் பூஜித்துத் துதித்தார். அவர்கள் இவரை என்னவரம் வேண்டுமென்று கேட்க, அதற்கிவர் தேவரீர்களது ஸேவையைக்காட்டிலும் வேறு என்ன வரம் வேண்டும் என்று சொன்னுர். अथाप्यम्बुज पत्राक्ष पुण्यश्लोकशिखामणे द्रक्ष्ये मायां यथा लोकस्सपालो वेद सद्भिदाम् என்று பகவானது மாயா விநோதத்தைக் காண ஆசைப்பட்டார். நரநாராயணரும், அப்படியே நம்முடைய மாயாவிநோதத்தைக் காணக்கடவீர் என்று அநுக்ரஹித்துவிட்டு மறைந்துவிட்டனர். பின்னர் ஒருநாள் ஸாயங்காலத்தில் பயங்கரமான பெருங்காற்றுடன் பெரியமேகங்கள் ஆடம்பரமாகப் பெருமழை பொழிய உலகனைத்தும் ஒருகடலாக நீரில்மூழ்கிநிற்க மார்க்கண்டேயரும் அந்த ப்ரளயார்ணவத்தில் வரிசைவரிசை யாகப் பேரலைகள் வீச அவ்வலைகளில் தத்தளித்துக்கொண்டு மிதந்து வந்தபோது ஓராலிலேயில், ''ஞாலம் போனகம் பற்றியோர் முற்ருவுருவாகி ஆலம் பேரிலை அன்னவசம்செய்யும் அம்மான்'' என்கிறபடியே வாக்கிற்கெட்டாத பேரழகு படைத்த ஒரு சிசுவைக் கண்டார். அதனருகே சென்றபோது அக்குழந்தை யின் மூச்சுக்காற்ருேடே அதனுள்ளே சென்றுவிட்டார். அங்கே அனைத்துலகையும் கண்டதோடன்றி தன் ஆச்ரமத்தையும் கண்டார். அதிசயக் கடலில் மூழ்கியவராய் சிலகாலம் சென்றபின் அச்சிசுவின் வெளிமூச்சுக்காற்ருலே ப்ரளயார்ணவத் தில் தள்ளப்பட்டார். அக்குழந்தையின் அருகில் சென்று அதனைத்தழுவிக் கொள்வோமென்றெண்ணியபோது அச்சிசுவும்

இவரைக் குளிரக்கடாக்ஷித்துவிட்டு மறைந்துவிட்டது. அதன்பின்பு ப்ரளயார்ணவ ஆடம்பரம் ஏதுமின்றி அடங்க தம்முடைய ஆச்ரமத்தில் தாம் சுகமாயிருந்தார். இவ்வாறு ஸ்ரீமந்நாராயணனு டைய யோகமாயா வைபவத்தைப் பார்த்து வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாத அவனது பெருமைகளை எண்ணி எண்ணி ஆச்சர்யத்துடனும் ஆநந்தத்துடனும் அவன் திருவடிகளையே சரணமாகப்பற்றினார். ஆகையினால் இவரது மஹாத்ம்யம் உலகுக்கு அப்பாற்பட்டது என்பதில் ஐயமில்லை. இப்படியுள்ள இவருக்கு மயக்கம், விபரீத உணர்வு முதலியன உண்டு என்று சொல்ல எவனுக்கும் வாய் எழும்பாது. ஆகையால் உள்ளதை உள்ளபடியே சொல்லக்கூடிய ஆப்தராம்தன்மை இவருக்கே உண்டு. ஆக இதுகாறும் வக்த்ரு வைலக்ஷண்யம் சொன்னோம்.

இனிச்ரோதாவினுடைய சிறப்பைப்பற்றி சொல்லுகிறோம். இப்புராணத்தை மிகுந்த பக்தி ச்ரத்தையுடன் கேட்டார் ஸஹஸ்ராநீகர் என்கிற ராஜா. இவர் பரமபாகவதோத்த மரான பரீக்ஷித்து மகாராஜாவினுடைய பேரனான சதாநீகர் என்கிற ராஜாவினுடைய குமாரர். ஸ்ரீமத் பாகவதத்தை ஸ்ரீசுகர் வாயாலே கேட்டு முக்தியடைந்த பரீக்ஷித்து, ‘‘द्रोण्यस्त्र विप्लुष्टमिदं मदंगं सन्तानबीजं कुरुपाण्डवानाम् जुगोपकुक्षिं गत आत्त चक्रो मातुश्चमे यश्शरणं गताया:।’’ என்கிறபடியே கர்ப்பத்திலே இருந்த நாள்முதல் பகவானாலே ரக்ஷிக்கப்பட்டவராய் பகவானது திருவடிஸ்பர்சத்தாலே ஜீவித்தவரானபடியாலே ‘‘விஷ்ணு ராதன்’’ என்று பெயர்பெற்ற பரீக்ஷித் மகாராஜாவினுடைய குமாரன் தான் ஜநமேஜயன். ஸ்ரீமகாபாரதத்தைக் காதாரக்கேட்டவன். இந்த ஜநமேஜயன், தன் தந்தைக்குத் தக்ஷகன் அபராதம் பண்ணினபடியால் கோபம் கொண்டு பாம்பினத்தையே அழிக்கும் நோக்கில் ஸர்பயாகம் பண்ணினான். அது கண்ட தக்ஷகன் பயத்தினால் தன்னைக் காத்துக்கொள்ள இந்திரனை ஆச்ரயித்தான். அரசன் யஜ்ஞாசார்ய ரான உதங்கர் மூலம் தக்ஷகனை இந்திரனோடுகூட அக்னியில்

விழும்படி பண்ணினார். அதன் நடுவில் வாசுகியின் தௌஹித்ர ரான ஆஸ்தீகர் யாகத்தை நிறுத்துமாறு வரம் கேட்டார். கேட்டதையெல்லாம் தருவதாகச் சொன்னபடியால் அரசன் ஆஸ்திகருக்கு அவ்வரத்தைக் கொடுத்தனால் இந்திரனும் தக்ஷகனும் தப்பினார்கள். அத்தகைய ஜநமேஜயனது குமாரன் தான் சதானீகன். இவன் ஸாக்ஷாத் யாஜ்ஞவல்க்யரிடத்தில் வேதங்களைக் கற்றதுடன் ஸ்ரீசௌநக பகவானிடத்தில் ப்ரம்மஜ்ஞானம் பெற்று மோக்ஷம் பெற்றான். இத்தகைய வருடைய குமாரன் தான் ஸஹஸ்ராநீகன். இதற்கு ப்ரமாணம் ஸ்ரீபாகவதத்தில் 9வது ஸ்கந்தத்தில் 12வது அத்யாயத்தில் ஸ்ரீசௌநகர் பரீக்ஷித்தைக் குறித்துச் சொல்வது.

"तवतातस्तुभद्रायां अभिमन्युरजायत सर्वातिरथजिद्वीर उत्तरायां ततो भवान् परिक्षीणेषु कुरुषु द्रौणेर्ब्रह्मास्त्रतेजसा। त्वं तुकृष्णानुभावेन। त्वं तु कृष्णानुभावेन सजीवोभोचितोऽन्तकात् तवेमेतनयास्तात जनमेजयपूर्वका: जनमेजयस्त्वां ज्ञात्वा तक्षकान्निधनं गतम् सर्पान् वै सर्प यागाग्नौ सहोष्यति रुषान्वित: कावषेयं पुरोधाय मुनिं तुरगमेधयाट् समन्तात्पृथिवीं सर्वां जित्वा यक्ष्यतिचरअवध्वरै: तस्य पुत्रश्शतानीको याज्ञवल्क्यात्त्रयीं पठन् अस्त्र ज्ञानं कृपात् ज्ञानं शौनकात्परमेष्यति सहस्रानीक स्तत्पुत्रस्ततश्चैवाश्वमेधज:". இப்படி பாரதபுராணரத்நாதிகளிலும் கண்டு கொள்வது. ஆகையாலும் ஸ்ரீமார்க்கண்டேயருக்கு ஸச்சிஷ்யரானபடியாலும் இவருக்கு ச்ரோதாவுக்குண்டான குணம் பூர்த்தியாக இருப்பதால் ச்ரோத்ருவைலக்ஷண்யம் ஸித்தம். "अहोमहत् त्वया प्रोक्तं विष्णोराराधनं मम फलश्च तद्विशेषश्च देशकाल विशेषत:" இவை முதலான நாலுச்லோகங்க ளில் ஸஹஸ்ராநீகர் இவ்வத்யாயத் துக்கு முன் தமக்கு ஸ்ரீமார்க்கண்டேயர் அருளிச்செய்ததாக திரும்பச்சொல்லுகிற

அர்த்த விசேஷங்களாவன:–

“नविष्णवाराधनात्पुण्यं विद्यते कर्म वैदिकम् आराधनानां सर्वेषां विष्णोराराधनं परं” இவை முதலான ப்ரமாண ப்ரஸித்தங்களான விஷ்ணுவை ஆராதிப்ப தால் ஏற்படும் பலம், அதன் பெருமைகள் அந்த எம்பெருமானுக்கு கோயில் கோபுரம் விமானம் முதலியன நிர்மாணித்தலாகிய பரமைகாந்திகளாகிய முமுக்ஷுக்களுக்கு உபஜீவ்யமான அர்த்தங்களாகவே இருக்கிற படியாலும், மேலே உள்ள க்ரந்தங்களிலும்யோகங்கள் ஸித்திப்ப தற்கான ஸ்தானங்கள், பகவத் பாகவத மஹிமை முதலிய அர்த்த விசேஷங்களைத் தெரிவிப்பதால் இந்த மார்க்கண்டேய புராணத்துக்கு விஷயவைலக்ஷண்யமுமுண்டு. ப்ரபந்த வைலக்ஷண்யரூபமான ஸாத்விகபுராணமாக இருக்கும் பெருமையும் இப்புராணத்துக்கு உண்டு. எங்ஙனேயென்னில்:

“सात्विकेषुष्वपि कल्पेषु माहात्म्यमधिकं हरे: तामसेषु शिवस्योक्तं राजसेषु प्रजापते:” என்றும், ஸ்தோத்ரபாஷ்யத்தில் கூறப்பட்டிருப்பதாவது:– “सात्विकेष्वपि कल्पेषु माहात्म्यमधिकं हरे: तामसेषु शिवस्योक्तं राजसेषु प्रजापते: तदिह सात्विकानि पुराणानि सत्वैकमूलतया कात्स्न्र्ये नाविप्लुत ज्ञाननिति तेषां प्राबल्यम् । अत्र प्रबलैश्च शास्त्रैरिति प्राबल्योक्त्या बहुवचनेनचा नन्यपरश्रुति स्मृतीनां भारत रामायणादीतिहासानाञ्च तदनुगुणानां पाद्म वैष्णव भागवत नारदीय मार्कण्डेय वराह वामन मात्स्य गारुड ब्रह्माण्ड नारसिंहादि पुराणानां अन्योन्य सामरस्यमपि व्यज्यते”. இதில் சொல்லப்பட்டபடியே பகவானுடைய ஸ்வரூபம், குணங்கள், அவரை ஆராதிப் பது, அதனுல் ஏற்படும் பலன் இவ்வாறு அதன் ப்ரபாவமெல்லா வற்றையும் விளக்குவதனுலே இப்புராணம் ஸாத்விகம் என்பது தெளிவாயிற்று. இவ்வளவோ

டில்லாது, ஜீவாத்ம பரமாத்ம அபேதம், நிர்குணப்ரம்மமுக்தி, ஜீவப்ரம்மைக்யம், ஜகத்தெல்லாம் பொய் என்கிற வாதம் என்கிற இவைபோன்ற மயக்கத்தைத் தரத்தக்க வசநங்கள் ஸ்ரீபாகவதம், ஸ்ரீவிஷ்ணுபுராணம் இவற்றில் காணப்படுவதுபோல இப்புராணத்தில் அத்தகைய வசநங்கள் ஒன்று கூடக்கிடையாது. இதுவல்லவா மோக்ஷத்தை அடையவிரும்பும் அறிவாளிக்கு ப்ரபல விரோதியான அஜ்ஞானம், அந்யதாஜ்ஞானம், விபரீதஜ்ஞானம் இவற்றிக்குக் காரணமாகிறது. ஆகையால் இப்புராணம் எல்லாபுராணங்களைக் காட்டிலும் சிறந்ததாகிறது.



# ஸ்ரீமார்க்கண்டேய புராணத்திலுள்ள ஸ்ரீவீக்ஷாரண்ய க்ஷேத்ர மாஹாத்ம்யம்

ஸஹஸ்ராநீக:

अहो महत् त्वया प्रोक्तं विष्णोराराधनं मम ।
फलंतु तद्विशेषश्च देश काल विशेषत: ।।१ ।।
द्रव्य योग विशेषैश्च तथाकर्तृ विशेषकै: ।
वर्णाश्रमविशेषैश्च तथा भक्ति विशेषकै: ।।२।।
विमान करणैश्चापि गोपुरणां कृतौ तथा ।
मण्टपस्य कृतौ चैव फलमुक्तं त्वयाऽनध ।।३ ।।
वैदिकै: तान्त्रिकैश्चैव व्यामिश्रैश्चैव पूजनै: ।
तत्तत्फल विशेषश्च त्वयोक्तो मुनि सत्तम ।।४ ।।

இங்கு ஹேப்ரஹ்மந் என்றவிளிச்சொல்லை வரவழைத்துக் கொள்ளவேண்டும். ஹே ப்ராம்மணோத்தமரே! எமது ஆசார்யரான மார்க்கண்டேய பகவானே! ஸ்ரீமஹாவிஷ்ணுவின் திருவாராதன விஷயம் சொல்லப்பட்டது. கர்ம, ஜ்ஞான, பக்திகள் மூன்றும் ஒரு வடிவெடுத்தாப்போலே இருக்கின்றவராயும், நான்கு யுகங்களையும், ஈராயிரங்களான அநேகம் ப்ரம்மகல்பங்களையும் கண்டவராய் விளங்குகிறீர். ''கொள்ளக்குறைவிலம் வேண்டிற்றெல்லாம் தரும் கோதிலென வள்ளல்'' என்கிறபடியே ஸகலபுருஷார்த்ததங்களையும் தரக்கூடிய வள்ளலான புஷஷோத்தமன், ''த்விர்பத்தம் ஸுபத்தம்'' என்கிறபடியே இரண்டு உருவங்கொண்டு ஸ்வயமாய் தேவரீர் முன்னே எழுந்தருளி வேண்டின வரம்

கேட்கச் சொல்லியும், ''கிமலப்யம் பகவதி ப்ரஸந்நே ஸ்ரீநிகேதநே; ததாபி தத்பரா ராஜன் நாபிவாஞ்சதிகிஞ்சந'' என்கிறபடியே தேவரீரை நேரில் ஸேவித்ததைக்காட்டிலும் அடியேனுக்கு வேறு என்ன பலம் வேண்டும். இருந்தாலும் தேவரீரது யோகமாயா விநோதத்தை நேரிலே காணவேணு மென்று ப்ரார்த்தித்தேன். அதன்படியே தேவரீரது மாயையைக் காண்பிக்கக்கண்டேன். ஆலிலேமேல் பள்ளிகொண்ட பெருமானையும் ஸேவித்து அவருக்குள்ளே புகுந்து அங்குள்ள பூலோகம் முதலிய அனைத்து உலகங்களுடைய அமைப்பையும் கண்டேன். திரும்ப வெளியேவந்து அடியேனது ஆச்ரமத்துக்கு வந்தேன். ஆச்சர்யமான அம்ருதக்கடலிலே அமிழ்ந்து உம்மையே சரணமடைந்தேன்'' என்று கூறினர் மார்க்கண்டேயர். அத்தகைய மார்க்கண்டேயரைப் பார்த்த ஸஹஸ்ராநீகராகிய ராஜா மேலும் கூறினர்– வசிஷ்டர், விச்வாமித்ரர் முதலிய மஹரிஷிகளெல்லாரும் ஒரு தட்டு தேவரீரும் ஒரு தட்டிலுமாக நிற்கத்தக்க ப்ரபாவம் உள்ளவராவீர் தேவரீர். பரமபாகவதோத்தமரான பரீக்ஷித்து மஹாராஜாவுக்கு பேரப்பிள்ளையாயும், ஸாக்ஷாத் யாஜ்ஞவல்க்யரிடத்தில் வேதங்களைக்கற்றும், க்ருபாசாரியரிடத்தில் வில்வித்தையை அப்யஸித்தும், ஸ்ரீசௌநக பகவானிடத்தில் பூர்த்தியாக ப்ரம்மஜ்ஞானத்தைப் பெற்று மோக்ஷத்தை அடைந்தவரான சதாநீக மகாராஜாவுக்கு புத்ரனுகவும் பிறந்துள்ளேன். இத்தகைய உயர்ந்தவம்சத்தில் பிறந்தவனுயிருந்தபோதிலும், அந்த வம்சத்துக்கேற்ற ஜ்ஞாநாநுஷ்டானங்கள் சிறிதும் இல்லாதவனுக உள்ளேன். ''அதோத: பாபாத்மா'' என்றும் அஹமஸ்ம்யபராதாநாம் ஆலய:'' என்றும், அமர்யாத: க்ஷுத்ர: சலமதி: பாபிஷ்ட:'' என்றும் ''மறப்பும் ஞானமும் நானென்றுணர்ந்திலன், நானே நாநாவித நரகம் புகும்பாவம் செய்தேன்'' என்றும் சொல்லுகிறபடியே தேவரீர் அனுக்ரஹிப் பதற்கு விரோதிகளான பாபவர்க்கங்களாலேயும் கூறுகொண்டி ருக்கிறேன். இத்தகைய அடியேனுக்கு ஸ்வரூபத்தாலும், பலத்தாலும் நன்மை தரக்கூடிய எல்லா சாதனங்களைக் காட்டிலும்

பகவதாராதனமாகிய ஸாதனத்தை அனுக்ரஹித்துள்ளீர். ''ந விஷ்ண்வாராதநாத் புண்யம் வித்யதே கர்ம வைதிகம்; ஆராதநாநாம் ஸர்வேஷாம் விஷ்ணோராராதநம் பரம்'' என்று ப்ரமாணங்களில் முழங்கப்பெற்றுள்ளன. ''அங்குஷ்டமாத்ர: புருஷோ மத்ய ஆத்மநி திஷ்டதி; ஈசாநோ பூதபவ்யஸ்ய ந ததோ விஜிகுப்ஸதே:. ''ய: ப்ருதிவ்யாம் திஷ்டந்'' ''ய: ஆத்மநி திஷ்டந்'' ''ப்ரசாஸிதாரம் ஸர்வேஷாம் அணீயாம்ஸம் அணீயஸாம்; ருக்மாபா ஸ்வப்நதீ கம்யம் வித்யாத்து புருஷம் பரம்'' இவை முதலானவற்றின்படியே பகவானது வாத்ஸல்யம் காருண்யம் இவற்ருலே அவனைக் காணவேண்டும் என்று ஆசை பிறந்தபோதே நான் அவரிருக்குமிடம் தேடிவரவேண்டாதபடி 'அடியேனுள்ளான் உடலுள்ளான்' என்று எனக்கு அந்தர்யாமி யாக இருந்த ஸ்ரீவிஷ்ணுவினுடைய ஆராதனவிஷயத்தில் சொல்லவேண்டிய ஸமஸ்த விசேஷங்களையும் அனுக்ரஹித்தீர்.

இப்படிப்பட்ட பகவதாராதனத்தில் எனக்கு விருப்பம் உண்டாக வேண்டுமென்பதற்காக, துக்கத்துக்குக் காரணமா னது, அல்பமானது, நிலையற்றது, துக்கத்தையே தரக்கூடியது, துயரம் கலந்திருப்பது, விபரீதமான அபிமானத்துக்கு மூலகாரணமாயிருப்பது; இயல்பான ஆநந்தத்திற்கு விருத்த மாயிருப்பது ஆகிய ஏழு விதமான தோஷங்களுக்கு அப்பாற் பட்டதான எல்லா பலன்களைக் காட்டிலும் சிறந்ததான பகவதாராதனத்தின் பலனைச் சொன்னீர். ''आद्यं त्विदं स्वयं व्यक्तं विमानं रङ्गसंज्ञिकम् श्रीमुष्णं वेङ्कटाद्रिश्च सालग्रामञ्च नैमिशम् तोताद्रिं पुष्करञ्चैव नरनारायणाश्रमम् अष्टौ मे मूर्तयस्सन्ति स्वयं व्यक्ता महीतले'' இவை முதலான ப்ரபஞ்சிதங்களாய் ஸ்வயம் வ்யக்தம் சித்தர்களாலே ரிஷிகளாலே உண்டாக்கப்பெற்றவை யான பலவகைளான விஷ்ணுவின் திவ்யக்ஷேத்ரங்களிலும் गंगा गंगेति यो ब्रूयात् योजनानां शतत्रये पुनाति पुरुषान् पूर्वान् उत्तरांश्च शतं शतम्'' என்றும், ''கங்கை கங்கை என்ற வாசகத்தாலே

கடுவினைகளைந்திடகிற்கும்'' என்றும் ''தாம்ரபர்ணீ நதீயத்ர க்ருதமாலா பயஸ்விநீ; காவேரீ ச மஹாபாகா ப்ரதீசீச மஹாநதீ'' என்றும் ப்ரமாணங்களில் எடுத்த புண்யநதீ தடாகம் முதலிய தீர்த்தங்களின் கரைகளிலும், ஏகாதசீ, ச்ரவணத்வாதசீ, ஸங்கராந்தி, சந்த்ரசூர்யக்ரஹணகாலம், அர்த்தோதயம் மஹோதயம் முதலிய புண்யகாலங்களிலும், ஆராதனம் செய்தால் வருகிற விசேஷங்களும். ''अह्नोद्वितीय भागेन कृष्णाराधन तत्परः द्रव्याण्याराधनार्थानि शास्त्रीयाणि समार्जयेत् प्रभूतानि विशुद्धानि शुद्धदेशोद्भवानिच अरौद्राण्यनिषिद्धानि संगृहीतानि वैष्णवैः सुगन्धीनि मनोज्ञानि पुण्यान्यभिनवानिच दधिक्षीराज्यमुख्यानि द्रव्यानिच विशेषतः उत्तमानुपदंशांश्च मुद्गमाषादिकान्यपि ताम्बूलादीनि चान्यानि सर्वाण्यादाय सादरम् यथार्ह तानि संस्कृत्य प्रक्रमेतार्चनं ततः'' என்றும் ''उपादद्याद्यथा पूजा साधनानि यथातथम् पुष्पाणि फलमूलानि विविधान्योषधीरपि दध्यादिच हविर्योग्य तण्डुलानि गुडानिच स्नानीयान्यपि वस्त्राणि स्वादूनि सलिलानि च दर्भान्पात्राणि समिधो यथाशक्ति यथावसु आहृत्ययाच्ञयार्थैर्वा पूजास्थाने निवेशयेत्'' என்றும் ''அத புஷ்பாணி த்ரிவிதாநி – ஸாத்விகாநி ராஜஸாநி தாமஸாநி– வெளுப்பாயுள்ளவை ஸாத்விகங்கள், சிவப்பாயுள்ளவை ராஜஸம் கறுப்பாயுள்ளவை தாமஸம் ஆகியவற்ருலும்'', ''கதளீபத்ம மஹாபத்ம லக்ஷ்மீ ஸிந்துவார த்ரோண ப்ரியங்கு மாலதீ பாடல கேதகீ ஜாதிமல்லிகா, மஹாஜாதி பலாச அச்வத்த பத்ராணி திதீநாம் ஆநுபூர்வ்யேண புஷ்பாணி'' என்றும், ஸங்கராந்தியில் நந்தியாவட்டை பூவால் பகவானை பூஜிக்க வேண்டியது. அயந காலங்களில் அடுக்கு நந்தியாவட்டை மலர்களாலும், விஷுவில் திருத்துழாயாலும் வ்யதீபாதத்தில் பணிஜ்ஜகங்களாலும் அர்ச்சித்தலையும், சந்தனம், புஷ்பம், தூபம்

தீபம் முதலிய உபசார சாதன த்ரவ்யங்களை சம்பாதிப்பதன் பெருமைகளையும் பல விசேஷங்களையும் கூறினீர். ஸாத்விக ராஜஸ தாமஸ குணங்களால் வேறுபட்டவர்களாயும், உலகவாழ்வில் மூழ்கியிருப்பவர், மோக்ஷத்தை அடைய விரும்புமவர்களாகிய வெவ்வேறுபட்ட மனிதர்களால் செய்யப் படுகின்ற ஆராதனங்களில் உள்ள வேறுபட்ட பலன்களையும், அந்தணன், அரசன், வணிகன், வேளாளன், ப்ரமமசாரி இல்லறத்தான், வாநப்ரஸ்தன், ஸந்யாசி ஆகிய வேறுபட்ட பிரிவினர்களாயும், मद्भक्त जनवात्सल्यं पूजायां चानुमोदनम् मत्कथाश्रवणेरक्ति: स्वरनेत्रांगविक्रिया स्वयमाराधने यत्नो ममार्थे डंभवर्जितम् ममानुस्मरणं नित्यं यच्चमां नोपजीवति भक्तिरष्टविधाह्येषा यस्मिन् म्लेच्छेपि वर्तते सविप्रेन्द्रोमुनि: श्रीमान् स यतिस्सच पण्डित: இவை முதலானவற்றில் சொல்லப்படு கின்ற விசேஷ பக்திமான்களாக இருக்கிற அதிகாரிகள் செய்கிற ஆராதனங்களிலுள்ள பலவிசேஷங்களும் அனுக்ரஹிக்கப் பெற்றன.

இது தவிர ஸாத்விக ராஜஸ தாமஸ ரூபங்களாயும், நாகர த்ராவில வேஸா ஆகிய பெயர்களை உடையதாயும், பலவித தங்கமயமான சிகரகலசங்களினுல் அலங்கரிக்கப்பட்டதாயும், பாஞ்சராத்ர வைகாநஸ சாஸ்த்ரங்களிலும், பகவானுடைய ஸ்தூல மூர்த்திகளாகச் சொல்லப்பட்டவைகளாயும், தர்சித்தமாத்ரத்திலேயே மஹாபாதகங்களையும் போக்குமவை யாயிருக்கிற விமானங்களைக் கட்டிவைக்குமவர்களுக்கும், ஒன்று இரண்டு மூன்று நான்கு ஐந்து ஆறு ஏழ ஆகிய ப்ரகாரங்களையும், அவற்றின் நடுவிலுள்ள வாயில்களை அலங்காரம் மிக்கதாகவும், விமானத்துக்கு ஸமமான அளவுள்ளதாயும், விமானத்தைக் காட்டிலும், 2,3,4,5,6,7,8,9,10,12 மடங்கு அதிக அளவுள்ளதாயும், அனேகம் வாயில்களைக் கொண்டதாயும், ஒவ்வொரு வாசலுக்கும் த்வாரபாலகர்களோடு கூடியதாயும்,

பக்கங்களிலும், முன்பின் புறங்களிலும் பலவிதமான சிற்பங்களாலே அலங்கரிக்கப்பட்டதாயும், 5,7,9,11 முதலிய தங்கம், தாம்ரம், சுதை ஆகியவற்ருலான கலசங்களால் அலங்கரிக்கப்பட்டதாயும், கோபுரத்தின் இரு பக்கங்களிலும் அழகுற்று விளங்கக்கூடிய பெரியசிங்கத்தின் தலையையும் பயங்கரமான பெரியசரீரத்துடன் கோபுரத்தைத் தாங்கக் கூடிய மஹாசிகரங்களையுடைத்தான கோபுரங்களைக் கட்டிவைத்தவர் களுக்கும், 4,8,16,நூறு, ஆயிரம் என்ற கணக்கில் சித்ர விசித்ரங்களான சிற்பங்களைக் கொண்ட தூண்களையுடைய மண்டபங்களையும், ஸ்நாந மண்டபம், அலங்கார மண்டபம், நாட்யம், சங்கீதம் இவைநிகழக்கூடிய மண்டபம், சயந மண்டபம், யாகமண்டபம், முதலிய அநேக வித மண்டபங்களைக் கட்டுவித்தவர்களுக்கு வரும் பலன்களை யெல்லாம் நல்ல சிஷ்யர்களுக்குக் குறையறஅருளிச்செய்யக் கூடிய தேவரீரால் அடியேனுக்கு அநுக்ரஹிக்கப்பட்டது. அப்படியே ''வைதிகம் தாந்த்ரிகம் சைவ ததா வைதிக தாந்த்ரிகம் த்ரிவிதம் கர்ம ஸம்ப்ரோக்தம் பஞ்சராத்ராம்ரு தார்ணவே'' ''வைதிகம் ப்ராஹ்மணாநாம் து ராஜ்ஞாம் வைதிக தாந்த்ரிகம்। தாந்த்ரிகம் வைச்ய சூத்ராணாம் ஸர்வேஷாம் தாந்த்ரிகம் து வா॥'' என்று சொல்லுகிறபடியே வேதமந்த்ரங்களைக் கொண்டு நடத்துகிற ஆராதனங்களாலும், பாஞ்சராத்ரத்தில் மட்டிலும் சொல்லப்பட்ட மந்த்ரங்களைக்கொண்டு நடத்துகிற ஆராதனங்களாலும் பெறத்தக்க நன்மைகளை எப்போதும் பகவானைச் சிந்திப்பதிலேயே ஈடுபட்டிருக்கக்கூடிய தேவரீரால் ஸாதித்தருளப்பட்டது.

कर्म भूमिरियं तात स्वर्ग मोक्षफलप्रदा
ब्रह्मादि देवतास्सर्वे ऋषयश्च तपोधना: ।।५ ।।
अस्मिन् भारतवर्षेतु स्वर्गमोक्षफलप्रदान्
वर्णाश्रमान्वितान्धर्मान् अधिकारानुरूपत: ।।६ ।।
कुर्वन्ति मुनिशार्दूल येजना: स यथाद्विजा:

गच्छन्ति परमं स्थानं अनन्तं निरपेक्षका: ।।७।।

एतत्सर्वं समाख्यातं त्वया धर्मभृतां वर

''ஸஹிவித்யாத: தம் ஜநயதி தத்ச்ரேஷ்டம் ஜன்ம'' என்கிற படியே உயர்ந்த வித்தைக்கும் ஜன்மத்துக்கும் காரணபூதராகை யாலே தகப்பஞராக விளங்கும் மார்க்கண்டேய பகவானே! நாமிருவரும் இப்போது இருக்கின்ற இடம் பலனை விரும்புவர்களுக்கு ஸ்வர்க்கம் முதலிய பலன்களேயும், நிஷ்காமர்களுக்கு மோக்ஷபலனேயும் தரவல்ல கர்மபூமியன்றோ. ஆகையால் தான் ப்ரம்மா முதலான தேவர்களும் தவத்தையே பெருஞ்செல்வ மாகக் கொண்ட அனைத்து ரிஷிகளும் கர்மபூமியான இந்த பாரததேசத்தில் ஸ்வர்க்கம், மோக்ஷம் ஆகிய பலன்களேத் தரக்கூடியதாயும், ப்ராம்மணன் முதலிய ஜாதிகளோடும், ப்ரம்மசர்யம் முதலிய ஆச்ரமங்களோடும் கூடியிருக்கிற தர்மங்களேத் தங்கள் தங்கள் விரும்பும் பலனேப் பெறுவதற்காக அநுஷ்டிக்கிருர்கள். அவர்களுக்குள்ளே அந்தணர் முதலிய எந்த ஜனங்கள் மோக்ஷத்தைத் தவிர மற்ற பலன்களே விரும்புகிருர்களோ அவை அல்பமாயும், நிலேயற்ற தாயுமுள்ள குற்றங்கள் உள்ளவை. ஆகையாலே அவற்றில் தெளிவு பிறந்து வைராக்யசாலிகளாய் அல்பபலன்களில் ஆசையில்லாதவர்களாக எவர் இருக்கின்ருர்களோ அவர்கள், என்றும் அழியாததாயும் எல்லா ஸ்தானங்களுக்கும் மேம்பட்டதான மோக்ஷசாம்ராஜ்யத்தை அடைகிருர்கள். அனைத்து ரிஷிகளிலும் சிறந்தவராயும், எல்லா தர்மங்களேயும் அநுஷ்டிப்பவர்களுக்குள் சிறந்தவராயுமிருக்கிற தேவரீராலே இவையெல்லாம் ஐயந்திரிபற அடியேனுக்கு அருளிச் செய்யப்பட்டதன்றோ.

योगसिद्धि: कथं कुत्र कदा केन भवेन्मम

कृपया तत्व माचक्ष्व सर्वज्ञ भृगुनन्दन

''மஹர்ஷீணும் ப்ருகுரஹம்'' என்கிறபடி பார்கவகுலத்தில் ஜனித்தவராயும், ''ஸ்வாத்யாயவ்ரதசாலிநாம்'' என்று

பகவானிடத்தில் நிலைத்து நிற்கும் சிறப்புப்பெற்றவராயும், அது காரணமாக ஞானத்திலும் தபஸ்ஸிலும் எப்போதும் நழுவாதவ ராயும், உள்ள ப்ருகுமஹரிஷியின் திருவம்சத்தில் அவதரித்து, முக்காலத்திலும் உள்ள அனைத்து வஸ்த்துக்களையும் கையிலங்கு நெல்லிக்கனியாகப் பார்ப்பவராயும் உள்ள மார்க்கண்டேயரே! ''ஆவிக்கோர் பற்றுக் கொம்பு நின்னலால் அறிகிறிலேன்'' தேவரீரையே அண்டியிருக்கக்கூடிய அடியேனுக்கு, யம, நியம, ஆஸந, ப்ராணாயாம, ப்ரத்யாஹார, த்யாந, தாரண, சமாதி ரூபமான அஷ்டாங்கயோகம் கைவரப்பெறுவது எவ்விடத்திலேயோ? எவ்வளவு காலத்திலேயோ? அது ஸித்திக்கும்போது கர்மயோகத்தினாலோ, ஞானயோகத்தினாலோ எப்படி ஸித்திக்கும்? முக்யமாக அப்படிப்பட்ட புண்யக்ஷேத்ரம் தெரியவேண்டும். இதன் உண்மைகளை எளியேனது சுச்ரூஷை முதலியவற்றை கருத்தில் கொள்ளாமல் தேவரீரது இய்றைகையான கிருபையினாலேயே ஸாதித்தருளவேணும்.

मार्कण्डेय:

रहस्यं तु त्वया पृष्टं राजन् कुरुकुलोद्वह ।।९।।

ऋतेदेवप्रसादाच्च वक्तुमेतन्मयानध

अशक्यं तव राजेन्द्र तत्प्रसादात् ब्रवीम्यहम् ।।१०।।

अत्रैवोदाहरन्ती ममितिहासं पुरातनम्

देवभागस्य संवादं शालिहोत्रेण वैपुरा ।।११।।

உமது குணங்களாலே ஜனங்களை மகிழச் செய்பவராயும், எல்லா க்ஷேத்ரங்களைக் காட்டிலும் மிகச்சிறந்ததான குருக்ஷேத்ரத்தில் ராஜ்ய பரிபாலனம் செய்து அதன்மூலமாக ''குரு'' என்று பெயர்பெற்ற மஹாராஜருடைய திருக்குலத்தை மற்ற குலங்களைக் காட்டிலும் உமது பிறப்பினாலே மேலோங்கச் செய்பவராயும், உறங்கும் போதும் விழித்திருக்கும் போதும் ''துளியும் பாபமில்லாதவராயும், ''அடிசேர் முடியினராகி அரசர்கள் தாம் தொழ'' என்கிறபடியே அநேக மன்னர்களை

ஆள்கின்ற ஐச்வர்யம் உடையவருமான ஸஹஸ்ராநீகரே! இப்போது நீர் வினவிய விஷயமானது ''यो गोपायत्ययोग्यानां योग्मानां संप्रयच्छति इममर्थं स मान्यो मे स्वस्ति वोऽस्तु व्रजाम्यहम्'' என்கிறபடியே சிஷ்யகுணபூர்த்தி இல்லாதவர்களுக்குச் சொல்லக்கூடாததாகும். यस्य देवे पराभक्तिर्यथादेवे तथागुरौ तस्यैते कथिताह्यर्था:प्रकाशन्ते महात्मन: என்றும், तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया आस्तिका याति ऋजवे शास्त्र भक्ति परायच न्यायेन पृच्छते धर्मं वक्तव्यं शौच योगिने என்றும் இப்படிப்பட்ட குணங்கள் நிறைந்த அதிகாரிக்குத்தான் ரகசியமாக உபதேசிக்கத்தக்கது. ''धातु: प्रसादान्महिमानमीशम् यमेवैषवृणुते तेनलभ्य: तस्यैष आत्मा विवृणुते तनूं स्वां'' என்கிறபடியே உலகைப் படைத்தல் முதலிய விளையாட்டை உடையவனுய் பரதேவதையான திருமகள் கேள்வனது அநுக்ரஹத்தினுலே நான் உமக்குச் சொல்கிறேன். ''தேவ பாகோஹ ச்ரௌதர்ஷ:'' ''ஸாவித்ரம் விதாம் சகார'' என்று வேதத்தில் புகழப்பட்ட தேவபாகருக்கு ஸ்ரீசாலிஹோத்ர மஹர்ஷியோடு முற்காலத்தில் நடந்த உரையாடல் வடிவில் உள்ள ப்ராசீனமான முன்னோர்கள் நடவடிக்கையையே இவ்வர்த்தத்தின் விஷயத்தில் உதாஹரணமாகக் கூறுகிருர்கள். இவ்வாறு அருளிச்செய்த மார்க்கண்டேய ரது வார்த்தையைக் கேட்ட ஸஹஸ்ராநீகர் திரும்பவும் வினவுகிருர்

''कथं तयोश्च संवाद: स्थाने कुत्राभवत्पुरा
तत् ब्रूहि मुनिशार्दूल ज्ञात्वा मोक्षमवाप्नुयात् ।।१२।।''

எல்லா ரிஷிகளிலும் சிறந்தவரான மார்க்கண்டேய பகவானே! தேவபாகருக்கும் ஸ்ரீசாலிஹோத்ர மஹர்ஷிக்கும் ஸம்பாஷணம் எந்த இடத்தில் எப்படி உண்டாயிற்று? அதை அடியேனுக்கு

விவரமாக அருளிச்செய்யவேண்டும். அந்த உரையாடலே தேவரீர் முகத்தால் அடியேன் கேட்டறிந்து அதனை அநுஷ்டித்து மோக்ஷத்தை அடையவேண்டும்.

ஸ்ரீமார்க்கண்டேயர்

''पुण्ये पुण्य जनाकीर्णे रम्ये बदरिकाश्रमे
आसीनं सर्वधर्मज्ञं शालिहोत्रं तपोधनम् ।।१३ ।।
देवभागो महाभागः प्रणिपत्य प्रपूज्य च
समाहितमनाश्शान्तं पुनः पप्रच्छ तापसम् ।।१४ ।।

தேனமர் சோலை கற்பகம் பயந்த தெய்வநன்னறுமலர் கொணர்ந்து வானவர் வணங்கும் கங்கையின் கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளானே'' என்றும் ''வலங்கொள் தொண்டர் பாடியாடும் வதரி'' என்றும், ''அணிமலர்க்குழலார் அரம்பையர் துகிலும் ஆரமும் வாரிவந்து, அணிநீர் மணிகொழித்திழிந்த கங்கையின் கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளனே'' என்றும் சொல்லுகிறபடியே புனிதமாயும், பாவனர்களான நரன், நாராயணன், நாரதர், வ்யாஸர், பராசரர், சுகர், சௌனகர் முதலிய மஹர்ஷிகளுக்கு இருப்பிடமாயும், பரமபோக்யமாயுமிருக்கிற பதரிகாச்ரமத்தில் எழுந்தருளியிருப்பவராயும் எல்லா தர்மங்களையும் கையிலங்கு நெல்லிக்கனியென உள்ளபடி அறிந்தவராயும், வேண்டியதை அடைவதும், வேண்டாததை விலக்குவதுமாகிற எல்லாப்பலன்களுக்கும் காரணமாகவிளங்கு பவராயும், கண் முதலிய ஐந்து இந்த்ரியங்களையும் சப்தாதி விஷயங்களிலிருந்து திருப்பி பரமாத்ம ஸ்வரூபத்தில் ஈடுபட்டவராயும் ''பஹ்வை தது பாஸ்யைதத்தப:'' என்கிற படியே பரமாத்மாவினிடத்தில் ஈடுபடுத்துவதாகிற தபஸ்ஸையே தொழிலாகக் கொண்டிருப்பவரான சாலிஹோத்ர பகவானை ''ஈச்வரஸ்ய ச ஸௌஹார்த்தம் யத்ருச்சா ஸுக்ருதம் ததா। விஷ்ணோ: கடாக்ஷமத்வேஷம் ஆபிமுக்யஞ்ச ஸாத்விகை:। ஸம்பாஷணம் ஷடேதாநி ஆசார்யப்ராப்தி ஹேதவ:'' என்கிறபடியே நல்ல ஆசார்யனை அடைவதற்குக்

காரணங்களான மஹாபாக்யங்களை உடையவரான தேவபாகர், ''மஹோபுத்த்யபிமாநேந ஸஹந்யஸ்ய தராதலே கூர்மவச்சதுர: பாதான்சிரஸ்தத்ரைவ பஞ்சமம்'' என்கிறபடியே ஸாஷ்டாங்க மாக நமஸ்கரித்து 'ப்ரத்யக்ஷே குரவ: ஸ்துத்யா:'' என்கிறபடி துதித்து ஒருமித்த மனத்தராய் திரும்பவும் வினவினர்

देवभाग:

पुण्यमायतनं तीर्थं वनं भुवनपावनम्

यत्र त्रयं समुदितं तत्रमुक्तिरितिस्मृता ।।१५ ।।

वदस्व तादृशंक्षेत्रं दुर्लभं मुनिसत्तम

त्वमेव सकलं वेत्सि नान्योस्ति भुवि कश्चन

केवलं कृपया प्रोक्तास्सर्वेधर्मास्त्वयामम

कृतकृत्य स्तथाप्येत च्छ्रोतु मिच्छा प्रवर्तते ।।१७ ।।

அனைத்து ரிஷிகளுக்குள்ளே சிறந்தவரான ஸ்ரீமார்க்கண்டேய பகவானே! எந்த தேசத்தில் ''सन्दर्शनादकस्माच्च पुंसां संमूढचेतसाम् कुवासनाकुबुद्धिश्च नास्तिकत्वं लयं व्रजेत् आपीठान्मौलि पर्यन्तं पश्यत: पुरुषोत्तमम् । पातकान्याशुनश्यन्ति किंपुनस्तूपपातकम्'' என்றும் ''கருந்தடமுகில் வண்ணனைக் கடைக் கொண்டு கை தொழும் பக்தர்கள் இருந்த ஊரிலிருக்கும் மானிடர் எத்தவங்கள் செய்தார்கொலோ'' என்றும் சொல்லுகிறபடியே மனப்பூர்வமாக இல்லாது தர்சித்தாலும் அனைத்துப்பாபங்களையும் போக்கக்கூடிய பகவானது கோயிலும், பார்ப்பதனாலும், தொடுவதாலும், நீராடுவதனாலும் அனைத்துப் பாபங்களையும் போக்கக்கூடியதான தீர்த்தமும், ஒருமுறை ஒரு தர்மத்தை அநுஷ்டித்தாலும் பலமுறை அநுஷ்டித்த தன் பலத்தைத் தரும்படியான உலகையே புனிதமாக்கக்கூடிய தபோவனமும், இம்மூன்றும் எங்கே சேர்ந்திருக்கின்றதோ அவ்விடத்தில் இம்மைப்பயன்கள் ஸித்திப்பது போல அனைத்து

பலன்களோடு மோக்ஷமும் ஸித்திப்பதாக மஹர்ஷிகளாலே அறுதியிடப்பட்டது. நானே அனைத்து மக்களது பாபங்களையும் போக்குகிறேனென்ற பகவானது விமானமும், நானே அப்படிச்செய்கிறேன் என்ற புண்யதீர்த்தமும், நானே அவ்வாறு செய்கிறேன் என்கிற தபோவநமும், ஒன்றுக்கொன்று மேல் விழுந்து ஜனங்களுடைய உடலிலும் உள்ளத்திலுமுள்ள நோய்களையெல்லாம் போக்குகின்றதோ அத்தகையப்ரதேசம் கிடைத்தற்கரியதன்றோ? அப்படிப்பட்ட ப்ரதேசத்தை ஞானக்கண்ணாலே அனைத்தையும் பார்க்கும்படி தேவரீர் அடியேனுக்கு ஸாதிக்க வேண்டும். உலகில் உள்ள எல்லா க்ஷேத்திரங்களின் வைபவங்களையும் தேவரீர் ஒருவரே அறிவீரேயொழிய இப்படி அறிபவர் இவ்வுலகில் வேறு எவருமில்லை. எக்காரணமுமின்றி தானே பெருகுகின்ற க்ருபையினாலே அடியேனுக்கு எல்லா தர்மங்களையும் அருளிச் செய்தீர். ஆதலால் அடியேன் க்ருதார்த்தனானேன். ஆனாலும் பகவானது விமானம் தீர்த்தம் தபோவநம் ஆகிய மூன்றும் பெருமைபெற்ற இடத்தைக் கேட்கவேண்டுமென்று ஆசையுள்ளது. ஆகையாலதை அருளிச்செய்யவேண்டும்.

சாலிஹோத்ரர்

श्रुणु पुण्य कथां भूयः कथयामि तपोधन
यस्याः श्रवणमात्रेण परां सिद्धिं अवाप्स्यसि ।।१८।।

தவத்தின் மூலம் எல்லா அர்த்தங்களையும் பெறமுற்பட்ட தேவபாகரே! எந்தக் கதையைக் கேட்ட மாத்ரத்தில் அனைத்துப் புருஷார்த்தங்களையும் அடையப்போகிறீரோ அப்படிப்பட்ட புண்யகதையை உமக்குச் சொல்லுகிறேன். கவனமாகக் கேளும்.

अस्तिक्षीरवहापुण्या नदी परमपावनी
अग स्त्याश्रमसंभूता रजतादि निषेविता ।।१९।।
पुण्यनिर्झर संकीर्णा विचित्रासागरंगमा
देवर्षि सिद्धगन्धर्वैः सेविता सर्वदेवतैः ।।२०।।

चूतकेसर पुन्नाग चम्पकाद्यैरलंकृता
हंसकारण्डवाकीर्णा पद्मकल्हारशोभिता ।।२१ ।।

தித்திப்பிலுலே பாலுக்குச் சமமான நீர் பெருக்கெடுத்தோடுவதாயும், வேண்டுவார்வேண்டுவனவற்றையெல்லாம் தரவல்லதாயும், அனைத்துப்பாபங்களையும் போக்கடிக்கத்தக்கதாயும், அகஸ்த்யரது ஆச்ரமத்திலிருந்தும் உண்டானதாயும் ''தேசாரதாப்ரப்ரதிமம் ஸ்ரீமத் ரஜதபர்வதம் ச்ருங்கவந்தம் தரீமந்தம் அதிருஹ்ய ச வாநரா:'' என்று ஸ்ரீமத் ராமாயணத்தில் சொல்லப்பட்டபடி விந்தியமலைக்குத் தெற்கே உள்ளதாயும், சரத்காலத்து மேகக்கூட்டத்தின் நிழல் படிந்ததாயும், மிகுந்த ஒளிவீசித்திகழ்வதாயும், அநேகம் கொடுமுடிகளையும் குகைகளையும் உடையதாயும், வெள்ளிமலையில் மூழ்கிவருவதாயும், புனிதங்களான மலையருவிகளிலே கலந்து வருவதாயும், தனது பரப்பிலுலும், அழகிலுலும் பார்ப்பவர்களுக்கு வியப்பூட்டுவதாயும், யமுநை, ஸரஸ்வதி, துங்கபத்ரா முதலிய நதிகள் போன்று மற்ற நதிகளில் கலந்து தன் பெருமையை இழக்காததாயும், தானே நேரடியாக தன்பர்த்தாவான ஸமுத்ரராஜனை அடைவதாயும், ப்ரம்மா முதலிய ப்ரஸித்திபெற்ற தேவர்களாலும் ரிஷிகளாலும், சித்தர்கள் என்கிற தேவஜாதி விசேஷங்களாலும், கந்தர்வர்களாலும், மற்றுமுள்ள எல்லா தேவதைகளாலும் பூஜிக்கப்பட்டதாயும், மாமரங்கள், தேவபுந்நாகமரங்கள், சாதாரணபுந்நாகமரங்கள், சண்பக மரங்கள், இவை முதலிய மரங்களாலே இருகரைகளிலும் அலங்கரிக்கப்பட்டதாயும், அன்னப்பறவைகளாலும் நீர்க்காக்கைகளாலும், சூழப்பட்டதாயும், தாமரைப்பூ செங்கழுநீர்ப்பூ ஆகியவற்றுல் அலங்கரிக்கப்பட்டதாயும் இருக்கிற க்ஷீரநதீ என்று ப்ரஸித்தமான நதியொன்று இருக்கிறதன்றே. நீர் கேள்விப்பட்டிருக்கிறீரல்லவா.

तस्याश्चोत्तर दिग्भागे देवखातो महाह्रदुः
फुल्लपद्मवनाकीर्णः वीचिमालासमाकुलः ।।२२ ।।

அத்தகைய பாலாற்றின் வடக்குக்கரையில் உண்டானதாயும் மலர்ந்ததாமரை மலர்கள் பலவற்ருலே சூழப்பட்டதாயும் உள்ள பெரியமடுஒன்று உள்ளது.

दर्शनात् स्पर्शनात् स्नानात् सर्वहृत्तापनाशनः

अतस्सर्वेषु लोकेषु नाम्नाहृत्तापनाशनः ।।२३ ।।

''त्रिरात्रं जाह्नवीतीरे सप्त रात्रं तु यामुने'' என்றும் ''गंगायां मैसल स्नानात् शुद्धिमाप्नोति दैहि कीम् रेवायांतु तथा स्नात्वा शुद्धिमाप्नोति पौर्विकीम् प्रातरारभ्य गंडक्यामासायं स्नानमाचरेत् वर्ष द्वयेन पूतात्मा ह्युभयोर्लोकयो श्शुचिः गौतम्यां नियतस्स्नात्वा नित्यकर्म परायणः विंशत्यामौसलस्नानैः अब्दमात्रेणशुध्यति धनुष्कोट्यं तुलादीनां गृहीता धनलोभतः स्नात्वामध्याह्नवेलायां गत्वा रामेश्वरालयम् औपासनाग्नौ जुहुयात् विरजाहोममादृतः अधश्शायीभवेन्नित्यं मासमेकं निरन्तरम्'' இத்யாதிகளில் மற்ற புண்யதீர்த்த விஷயங்களில் சொன்னது போலல்ல. இந்த தீர்த்தத்தின் வைபவம் எப்படிப்பட்டதென்ருல்? ''தர்சநாத் ஸர்வஹ்ருத்தாப நாசந:'' கண்ணைத்திறந்து பார்த்தாலே இத்தீர்த்தமானதுநான்கு புருஷாத்தங்களை அடைவதற்குண்டான விரோதிகளாய் ஹ்ருதயத்திலுள்ள எல்லாத்தாபங்களுக்கும் காரணமான பாபங்களையும், ''சும்மெனுதே கைவிட்டோடி'' என்றும், ''தீயினில் தூசாகும்'' என்றும் சொல்லுகிறபடியே உருவே இல்லாதபடி போக்கிவிடும். ''அவித்யா நிவ்ருத்திரேவ மோக்ஷ:'' என்று சொன்னபடி ஸாதநாநுஷ்டானத்தாலே இடையூறுகள் அழிந்தால், ''यथा न क्रियते ज्योत्स्नामलप्रक्षाल नान्मणेः दोषप्रहाणान्नज्ञानमात्मनः क्रियते तथा'' ''यथो दपानकरणात् क्रियते नजलाम्बरम् सदेव नीयते व्यक्ति मसतस्संभवः

कुतः'' ''तथा हेयगुणध्वंसा दवबोधादयोगुणाः प्रकाश्यन्ते नजन्यन्ते नित्या एवात्मनो हिते''என்கிறபடியே இயற்கையான ஞானம் மேன்மேலும் மலர்வதாகிற பலம் தன்னடையே ஸித்திக்கும். பக்கத்தில் செல்லாமல் கண்ணுக் கெட்டியதூரத்திலிருந்து பார்த்தவர்களான சண்டாளர்களும் கூட ஜ்வரம் முதலிய வியாதிகளிலிருந்தும் மற்ற துன்பங்களிலிருந்தும் விடுபடுகிறார் களென்றால் மற்றவர்களைப்பற்றி சொல்லவேண்டுமோ? ''ஸ்பர்சநாத் ஸர்வஹ்ருத்தாபநாசந:'' என்று கீழே சொன்ன அசக்தர்களான அதிகாரிகளைப்போலில் லாமல் அருகேசென்று இப்புண்யதீர்த்தத்தைக் கையால் தொட்டாலும் அனைத்துத் துன்பங்களையும் விரோதிகளையும் போக்கும். ஸ்நாநம் பண்ண அசக்தர்களாய் துயருற்றவர்களான அதிகாரிகள் பக்கல் கண்டு கொள்ளவேண்டும். இவ்விரண்டு அதிகாரிகளைப்போலல்லாமல் இத்தீர்த்தத்தில் மௌஸலஸ்நாந மாத்ரம் பண்ணினாலும் அனைத்து விரோதிகளையும் போக்கடிக்கும். ''ஹ்ருத்தாபநாசந:'' என்ற இடத்தில் தாபமாவது ''ஏதகும்ஹவாவந தபதி; கிமஹகும்ஸாதுநாகரவம்; கிமஹம் பாபமகரவமிதி'' என்றும், ''குளித்து மூன்றனலையோம்பும் குறிகொளந்தணமை தன்னை யொளித்திட்டேன்'', ''ந தர்மநிஷ்டோஸ்மி'', ''நானே நானாவித நரகம் புகும் பாவம் செய்தேன்'' என்றும் சொல்லுகிறபடியே செய்யவேண்டிய எந்தகார்யத்தைச் செய்யாமல் விட்டேனோ, எந்த செய்யக்கூடாத கார்யத்தைச் செய்தேனோ, என்ற இத்தகைய பலரும் இந்த தீர்த்தத்தில் தர்சனம் பண்ணினால்கூட இத்தகைய துயரங்கள் அடைய வேண்டியதில்லை.

இப்படி சக்தர்கள், அசக்தர்கள் முதலிய அனைத்து அதிகாரிகளுடையவும் அக்ருத்யகரண க்ருத்யாகரண ரூபமான பாபங்களாகிய அனைவரது தாபங்களையும் போக்கிவிடுவதால் எல்லாலோகங்களிலும் ''ஹ்ருத்தாபநாசநம்'' என்கிற பெயராலே இம்மடு ப்ரஸித்தமாயுள்ளது. கங்காநதிக்கு, மேல் உலகத்தினின்றும் கீழ் உலகத்துக்கு வந்தமையால் ''கங்கை'' யென்று பெயராயிற்று. யமுநை என்று நியமம் உடைமையைச்

சொல்லிற்று. ஸரஸ்வதி என்று அந்தர்கதி(உள்ளே செல்வது)யைச் சொல்லிற்று. ''மருத்வ்ருதை'' என்று வாயுவை வ்ருத்தியுறச் செய்வதால் அப்பெயராயிற்று. வாயுவினுல் வ்ருத்தி அடைவதாவது தேவதைகளாலே வளர்ச்சியுறச் செய்யப்பெற்றதைச் சொல்லிற்று. ''காவேரி'' கவேரன் என்பவனுடைய பெண் என்பதைச் சொல்லிற்று. ''தாம்ரபர்ணீ'' என்று செம்மை உண்டாகும் தண்ணீரை உடைமையைச் சொல்லிற்று. தாம்ரபர்ணீ ஜலத்தில் தாம்ரம் உண்டாக்குவது ப்ரஸித்தம். ''கோதாவரி'' என்று பூமியைப் பிளந்து கொண்டு வருகிற ப்ரவாஹம் உடைமையைச் சொல்லிற்று. ''நர்மதை'' என்று தேவதைகளுக்கு விளையாட்டைத் தருவதைச் சொல்லிற்று. ''சந்த்ரபுஷ்கரிணீ'' என்று சந்திரனுக்கு உதவியதைச் சொல்லிற்று. ''ஸ்வாமி புஷ்கரிணீ'' என்று புஷ்கரிணீகளுக்குள்ளே அரசனுனமையைச் சொல்லிற்று. ''அநந்தஸரஸ்'' என்று திருஅநந்தாழ்வான் ஒருவனுக்கு உதவினமையைச் சொல்லிற்று. ''திருக்கல்யாணீ'' என்று மங்களமான வடிவத்தைச் சொல்லிற்று. ''நித்யபுஷ்கரிணீ'' என்று என்றும் வற்ருத நீருடைமையைச் சொல்லிற்று. இவ்வளவே தவிர இன்னருக்கென்று ஒருவரையறையில்லாமல் அனைத்து உலகங்களுடைய பாபங்களையும் போக்குகிறேனென்று பெயர் வைத்துக்கொண்டு கொடிகட்டின புண்யதீர்த்தம் வேறு எங்கும் இல்லை.

விரஜா நதியும் ''வைகுண்ட ஸீம்நவிரஜாம் ஸ்யந்தமாநாம் மஹாநதீம்'' என்கிறபடியே எல்லை ஓரத்திலே போய்விழுந்து ஸம்ஸாரிகளுக்கு உதவப்பெற்றதில்லை. ''புஷ்கராத்யாநி தீர்த்தாநி'' என்று ஸ்தாவரதீர்த்தங்களுக்குள்ளே ப்ரதாநமான ''புஷ்கரமும்'' ஸ்நாநம் பண்ணுபவர்களுக்கு புஷ்டியைத்தருமே தவிர சொல்லப்பட்ட தாபங்களைப் போக்க முற்பட்டதில்லை. ''ஹ்ருத்தாபநாசநம்'' என்ற இப்பெயர் வெறும் பெயர் என்று சொல்லாதவகையில் அநாதிகாலம் தொடங்கி ஸமஸ்த ஜனங்களுடையவும் பாபதாபங்களைப் போக்கடித்து அவர்கள் செய்கிற ப்ரதக்ஷிண நமஸ்காராதிகளையும், திருவிளக்கு

வரிசைகளேயும், கணக்கில்லாத கர்ப்பூரஹாரத்திகளேயும், அநேகபாரம் வெல்லக்கட்டிகளேயும் வாங்கிக்கொண்டு செல்கையால் இந்தக் கலியுகத்திலும் இதன் வைபவம் வளர்ந்து வருவதால் எப்படிப்பட்ட முட்டாளும் இந்தத் தீர்த்தத்துக்கு ஸமானமாக மற்ருெரு தீர்த்தத்தைச் சொல்லமுடியாது.

तत्तीरे पुलिने रम्ये सर्वभूतमनोहरे।

सर्वाश्रय: सर्वसुहृत् पद्मपत्रनिभेक्षण: ।।२४।।

अनन्त भोगशयने योगनिद्रां निषेवते।

அந்த ஹ்ருத்தாபநாசனம் என்ற புண்யதீர்த்ததின் கரையிலே எல்லாப்ராணிகளுடைய மநஸ்ஸையும், தன்னழகாலே ஈர்க்கக்கூடியதாயுள்ள மணல் குன்றிலே, ''ஸர்வஸ்ய சரணம் ஸுஹ்ருத்'' என்றும், ''ஸர்வலோக சரண்யாய'' என்றும், ''ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா மாதா ச மாதவ:'' என்றும் சொல்கிறபடி பல்வகையான பலன்களே விரும்பும் எல்லா ஜனங்களுக்கும் அஞ்சாமல் அணுகி ஆச்ரயிக்கத்தக்கவனுய், ''ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்'' என்கிற படியே எல்லா ஜனங்களிடத்திலும் ஐயோ! இப்படித் துன்பப்படுகின்ருர்களே'' என்று இயற்கையான இரக்க குணமுடையவனுயும், ''தம்பத்மதல பத்ராக்ஷம்,'' ''புண்டரீக விசாலாக்ஷெள'' ''க்ஷதஜோபமாக்ஷ:'', ''கரியவாகி புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப்பெரியவாய கண்கள்'', ''தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகம் ஏவமக்ஷிணீ'', இவற்றின் படியே, ''கம்பீராம்பஸ் ஸமுத்பூத ஸும்ருஷ்ட நாலவிகரவிகரவிகஸித புண்டரீகதலாமலாயதலோசனனுமான ஸ்ரீமந்நாராயணன், கணக்கற்ற ப்ரம்மாண்டங்களேத் தன் வயிற்றில் அடக்கிக்கொண்டவனுய், ஸ்வரூபத்தாலும், குணத்தாலும், அநந்தனுய் உள்ள எம்பெருமானேத் தன் மடியில் ஏகதேசம் வைத்துக்கொள்ளும்படி, ப்ரக்ருஷ்ட விஜ்ஞான பலேகதாமா வாயும், பணுமணிவ்ராத மயூக மண்டல ப்ரகாசமாநோதர திவ்யதாமாவாயும், ''விடங்கொண்ட வெண்பல்கருந்துத்தி செங்கண் தழலுமிழ்வாய்ப்

படங்கொண்டபாம்பு''மான, திருவநந்தாழ்வானுடைய திருமேனியாகிற திருப்பள்ளி மெத்தையில், அனைத்து மக்களுடைய துயரங்களைப் போக்குவதுபற்றியும், அவர்களுக்கு அருள்புரியவேண்டியது பற்றியும், நினைந்துகொண்டு யோக நித்ரையில் ஆழ்ந்துநிற்கிறார்.

देवर्षि सिद्धगन्धर्व मनुष्यास्तत्र संगताः ।।२५ ।।

ज्ञातुं तमर्चितुं द्रष्टुं अवकाशं न लेभिरे ।

தேவர்களும், ரிஷிகளும், சித்தர்களும், கந்தர்வர்களும், மனுஷ்யர்களும் அந்த ஹ்ருத்தாபநாசநதீர்த்தத்தின் கரையிலே எல்லாரும் ஒரேகாலத்தில் நான்முந்தி நான்முந்தி என்று வந்து சேர்ந்தவர்களாய், வரிசை க்ரமமாக வந்து ஸேவிக்காமல் மேலேமேலே வந்து விழுந்தார்கள். அப்போது ''விஷ்வக்ஸேந விஹார வேத்ரலதிகாகம்பஸ்சிரால்லும்பதி'' என்றும், ''யத்வேத்ர சிகரஸ்பந்தே விச்வமேதத் வ்யவஸ்திதம்'' என்றும் சொல்லுகிறபடியே ஸ்ரீசேனைமுதலியாருடைய திருப்பிரம்பி னாலே வெளியே தள்ளப்பட்டு ஒழுங்குபடுத்தப்பட்டார்கள். பின்னர் அவர்கள் திருஎவ்வுள்ளப்பனை பெருமாளின் ஸ்வரூபரூபகுணங்கள் இப்படிப்பட்டவை என்று அறிந்து கொள்ளவும், ''சுமந்து மாமலர் நீர் சுடர் தூபங்கொண்டு அமர்ந்து வானவர் வானவர் கோனோடும்'' என்கிறபடியே தாங்கள் நந்தனவனம் முதலிய தோட்டங்களின்றும் கொண்டு வந்த திவ்யபுஷ்பங்களாலும், பரமசிவனது சடையின் சம்பந்தமில்லாததேவலோகத்து நதீதீர்த்ததங்களாலும், வையந்தகளியா வார்கடலே நெய்யாக வெய்ய கதிரோன் விளக்காலும், பெருமைமிக்க அகில் புகையினாலும், புனைந்த கண்ணி, சந்தனம் முதலியவற்றாலும் பூஜித்தனர்.

मुखेन लोकार्ति हरस्मितेन परिस्फुरत्कुण्डलमण्डितेन

शोणायितेनाधरबिम्बभासा प्रत्यर्हयन्तं सुनसेन सुभ्र्वा

என்கிறபடியே பலகோடி வருஷங்கள் சமாதிநிலையில் இருந்தவர்களுக்கும் கூட ஒருக்கால் காட்டி மறைந்திடும்

எம்பெருமான், கண்கள் சிவந்து பெரியவாய் வாயும் சிவந்து கனிந்து உள்ளே வெண்பல்லிலகு சுடரிலகு விலகு மகரகுண்டலத்தனுமான எவ்வுள் கிடந்தானது திருமுகமண்ட லத்தைக் கண்ணுலே கண்டு களிக்கவும் இடம் பெறவில்லை. பின்பு அவர்கள் பேரார்வத்துடன் ஒழுங்காக வரிசைக்ரமமாக முற்பட சேனைமுதலியாரும் குளிர கடாக்ஷித்து ஒருவர் இருவர் மூவராக திருவடிகளின் அருகே சேர்ப்பிக்க அவர்கள் பெருமாளை சேவித்தார்கள்.

पुण्यावर्तमितिख्यातं तत्क्षेत्रं पुण्यवर्धनम् ।।२६।।

यत्र शेते जगन्नाथः पुराणपुरुषोत्तमः

''பதிம்விச்வஸ்ய'' என்றும், ''வீற்றிருந்தேழுலகும் தனிக்கோல் செல்ல வீவில் சீராற்றல் மிக்காளுமம்மானை'' என்றும் சொல்லுகிறபடியே உலகுக்கெல்லாம் ஒப்பற்ற தலைவனும், அவ்வுலகமக்களாலே எல்லாப்பயன்களும் பெற யாசிக்கப்படும வனும், ''ஸதைகரூபரூபாய'' என்கிறபடியே எப்போதும் குமரப்பருவம் முடிந்து யௌவநப்பருவத்தின் துவக்க நிலையில் இருப்பவராயும், பக்தர்கள் முக்தர்கள் நித்யர்கள் ஆகியவர்களைத் தன்னகத்தே கொண்டிருப்பவராயும் உள்ள புருஷோத்தமன், ஹ்ருத்தாபநாசந மடுவின் அழகினுலும், மென்மை குளிர்த்தி நறுமணம் இவற்ரேடு கூடிய காற்றின் இனிமையாலும் பரவசமிக்கவராய், உலகைப்பாதுகாப்பதாகிய யோகசிந்தனை மறந்து, நிம்மதியாக தன்னுடம்பையும் மறந்து தூங்குகின்ருர். அப்படி நித்யஸர்வஜ்ஞனை எம்பெருமானையும் தூங்கப் பண்ணக்கூடிய அந்த க்ஷேத்ரத்துக்கு ''புண்யாவர்த்தம்'' என்ற பெயர் உலகில் ப்ரஸித்தமானது. அது எப்படியென்ருல், ஒருவன் ஒரு புண்யம் செய்தால் அதை இந்த க்ஷேத்ரத்தின் சக்தி பலவாக்கிக் கொடுக்கின்ற காரணத்தால் இந்த க்ஷேத்ரத்திற்கு ''புண்யாவர்த்தம்'' என்ற பெயராயிற்று.

''த்வதங்க்ரி முத்திச்ய கதாபிகேநசித்
யதாததாவாபி ஸக்ருத்க்ருதோஞ்ஜலி:
ததைவமுஷ்ணத்ய சுபாந்யசேஷத:

சுபாநி புஷ்ணுதி ந ஜாது ஹீயதே''

என்கிறபடியே ஒரு அஞ்ஜலியானது எல்லா அசுபங்களேயும் போக்கி ஸர்வச்ரேயஸ்ஸுக்களேயும் தரக்கூடியதாயும், ''ந ஜாது ஹீயதே'' என்று முதலுக்கு மோசமில்லாமல் நிலேத்து நிற்குமாப்போலே இந்த க்ஷேத்ரதில் செய்த ஒவ்வொரு புண்யமும் பலவாக வளர்ந்து எவ்வளவு மடங்கு பலன் கொடுத்தாலும் கொடுக்கப்பட்ட பலன்கள் கர்மவர்க்கத்தில் சேராது. ''யஜ்ஞோந்ருதேந க்ஷரதி தப: க்ஷரதி விஸ்மயாத்'' என்று சாஸ்த்ரத்தில் சொன்னபடியே புண்யத்தை அழிப்பதைத் தவிர்க்கச் செய்து அதற்குரிய பலனேக் கொடுத்தே தீரும். இப்படியானுல் இந்த க்ஷேத்ரத்தில் செய்கின்ற பாபமும் ஒன்று நூருயிரமாக வேண்டாவோ என்னில் அது கூடாது. இந்த க்ஷேத்ரத்தின் சக்தியினுலல்லவா பாபம் வ்ருத்தியடைய வேண்டும். இந்த க்ஷேத்ரம் புண்யத்தை வளர்க்குமேயொழிய பாபத்தை வளர்க்காது. மேலும் கணக்கற்ற பாபங்களேயும் அடியோடு அழிக்கும். எவ்வாறெனின்

''துஷ்டேந்த்ரியவசாத் சித்தம் ந்ருணும் யத்கில்பிஷைர்வ்ருதம் ததந்தகாலே ஸம்சுத்திம் யாதி நாராயணுலயே'' பகவானது க்ஷேத்ரங்களின் மகிமையைச் சொல்லக்கூடிய வசனத்தாலும், இப்புராணத்தில் ''கௌசிகோபாக்யானத்தில்'' சொல்லுகிற சிறப்புமிக்க மஹாபாதகங்களேயும் போக்கக்கூடிய சக்தியினுலும், தன்னே தர்சிப்பதாலும் தொடுவதாலும் எல்லாப்பாபங்களேயும் தாபங்களேயும் போக்கக்கூடிய தீர்த்த ஸாந்நித்யத்தாலும், எதிர்பாராது தர்சித்தாலும் கூடகெட்டஸஹவாஸம் தொடங்கி நாஸ்திகனுக ஆகிற வரையிலுமுள்ள எல்லாப் பாபங்களேயும் போக்கி நன்மையளிக்கக்கூடியதாயுமுள்ளது இந்த க்ஷேத்ரம். மேலும், ''தத்யதைஷிகாதூலம் அக்நௌப்ரரோதம் ப்ரதூயேத: ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே'' என்கிறபடியே பாபமெல்லாம் நசித்தே போகும். இக்கருத்து ''நாஸ்திதத் ஸத்ருசம் க்ஷேத்ரம் லோகேபரமபாவநம்। அபுத்தி பூர்வஜாதாநி புத்திபூர்வக்ருதாநி ச। ஹ்ருத்தாபநாசநஸ்நாநம் பாபாந்யாசு வ்யபோஹதி'' இவை முதலியன இந்த அத்யாயத்தின் வார்த்தையினுலும், ''அதிபாபப்ரஸக்தோபி விப்ர: தீர்த்தாநு

பாவத: அகமத் பரமம் தாம கிம்புந: புண்யக்ருஜ்ஜந:'' என்கிற கௌசிகோபாக்யானத்தாலும் தெளிவாயுள்ளது.

महद्वनमभूत्तत्र सिंहव्याघ्र समाकुलम् ॥२७॥
चन्द्रादित्य प्रभास्तत्र नव्यगाहन्त भूतले
बहुपुण्यसमाकीर्णं महापादपसंकुलम् ॥२८॥
वृतं याज्ञिक वृक्षैश्च पलाशखदिरादिभिः

அந்த ஹ்ருத்தாபநாசந தீர்த்தத்தின் கரையில் உள்ள புண்யாவர்த்த க்ஷேத்ரத்தில் சிங்கம் புலி முதலிய பெரிய மிருகங்கள் தங்களுக்குண்டான பகைமையை விட்டு ஒரு திரளாக வாசம் பண்ணுவதாயும், வசந்தம் முதலிய ருது நியமமின்றிக்கே எல்லா ருதுக்களிலும் எல்லாவிதமான புஷ்பங்களின் ஸம்ருத்தியை உடையதாயும், ''ந்யக்ரோதாநிவ காங்கேயாந் ஸாலான்ஹைம வநாநி ச '' என்கிறபடியே கங்கைக்கரையிலுள்ள ஆலமரங்கள்போலவும், இமயமலையிலுண்டான தேக்குமரங்கள்போலவும் சிலமரங்கள் உயர்ந்தவைகளாகவும், சில மரங்கள் குட்டைகளானவைகளாயுமிராமல் அனைத்து மரங்களும் ஓங்கி உலகளந்த உத்தமன் திருவடிபோல் உள்ளன. ஸத்யலோகத்தில் ப்ரம்மாவின் முகமாகிய தாமரையில் வசிப்பவளான ஸரஸ்வதி, அம்மரங்களிலுள்ள தளிர்களையும், மலர்களையும் தன்கையாலே கிள்ளிநுகரும்படியான உயர்ச்சியை உடையனவாய் உள்ளன. அவ்வனத்தில் வாழும் மஹர்ஷிகள் ஸமித்துக்காக வேறொரு காட்டை நோக்கிச்செல்லவேண்டாத படியும், கர்மாநுஷ்டான பரர்களான பிராம்மணர்கள் எல்லாரும் கட்டுச்சோறு கட்டிக்கொண்டு இலை ஸமித்துக்களுக்காக இவ்விடத்து எக்காலத்திலும் வரும்படியான மிகுந்தபரப்புடைய புரசமரக்காடுகள் உள்ளன. ''ஷட்காதிரா: தேஜஸோவருத்யை'' ''பைல்வோகாதிரோவா பலாசோவா அந்யேஷாம் யஜ்ஞ க்ரதூநாம் யூபாபவந்தி'' என்கிறபடியே யாகத்தில் யூபஸ்தம்பத்துக்குரியதாயும், யஸ்யகாதிர: ஸ்ருவோ பவதி। ச்சந்தஸாமேவர ஸேநாவத் யதி – என்கிறபடியே ஸ்ருவம் முதலிய செய்வதற்

குரிய கருங்காலி மரங்களாலும்,''வைகங்கதா: பரிதயோ பவந்தி'' – என்றும் ஆச்வத்த்யுபப்ருத் என்றும், ஔதும்பரோ பூபோபவதி – என்றும், ஆஜ்யஸ்யபூர்ணும் கார்ஷ்மர்த்தமர்யாம் தத்ந: பூர்ணும் ஔதும்பரீம்– என்று சமீதர்பாதக்நிம்மந்ததி – என்றும் சமீமயஸ்ஸம்பாரோ பவதி – என்றும், இவ்வாருக எடுத்து ச்ரௌத ஸ்மார்த்த யஜ்ஞாதி கார்யங்களுக்கு உபயோகப்படும்படியான மரங்களின் வகைகளால் சூழ்ந்திடப்பட்டதாயுமுள்ள பெரிய வனம் ஒன்று உண்டாயிருந்தது. அவ்வனத்தில் திருஎவ்வுள் கிடந்த அப்பனுடைய கையாலே தொடுவது கண்ணுலே காண்பது ஆகிய உபகாரங்களுக்குத் தக்கவைகளான தண்ணீரில் உண்டானவைகளாயும், தரையில் உண்டானவை களாயும் உள்ள புஷ்பங்கள் தளிர்கள் இவற்றிற்கு என்ன வந்துவிடுமோ என்ற அச்சத்திஞல் வெளிப்புறத்தில் ப்ரகாசிக்கக் கூடிய சந்திரன் சூர்யன் ஆகிய இவர்களது கிரணங்கள் அவ்வனத்தினுள் நுழையாமல் ஒதுங்கியுள்ளன.

पुराकल्पेतु मुनयस्तपः तप्यन्ति चात्रवै ।।२९ ।।
यज्ञैश्च बहवो देवा यजन्ति पुरुषोत्तमम्
राजानश्चात्र बहवः हयमेधेनवै हरिम् ।। ३० ।।
इष्ट्वा च त्रिदिवं याता दृश्यन्ते चात्र योगिभिः
योगिनो मुनयश्चात्र निवसन्ति गुहाश्रयाः ।।३१ ।।

''ச்ரோதவ்யோமந்தவ்யோநிதித்யாஸிதவ்ய:'' தஸ்மாத் ப்ரமாஹ்மண: பாண்டித்யம் நிர்வித்ய பால்யேந திஷ்டாஸேத்'' பால்யஞ்ச பாண்டித்யஞ்ச நிர்வித்யாதமுநி:'' ஆலம்பந ஸம்சீலநம் புந: புநரப்யாஸ: । தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு மாமநுஸ்மர'' இத்யாதிகளில் கட்டளையிட்ட ச்ரவண பூர்வக ஸாத்ய ஸாதந ரூப மநந நிஷ்டர்களான ரிஷிகள் முன் கல்பத்தில் ப்ரம்மோபாஸந ரூபமான தபஸ் பண்ணினதெல்லாம் இந்த க்ஷேத்ரத்திலேயே அன்ருே. இந்த அர்த்தம் உலகில் ப்ரஸித்தமாயன்ருே இருக்கிறது. ப்ரம்மா முதலான பல

தேவர்களும் ‘‘युग कोटि सहस्राणि विष्णुमाराध्य पद्मभूः पुनस्त्रैलोक्य धातृत्वं प्राप्तवानितिशुश्रुम स ब्रह्मक स्सरुद्राश्च सेन्द्रदेवा महर्षयः अर्चयन्ति सुरश्रेष्ठं देवं नारायणं प्रभुम् सर्वे देवा वासुदेवं यजन्ते’’ இவை முதலானவற்றில் சொன்னபடி தங்கள் தங்கள் பதவிகளைப் பெறுவதற்காகவும், ‘‘இந்த்ரோஹவை தேவாநாம் அபிப்ரவவ்ராஜ’’ என்று தொடங்கி ‘‘மகவன்மர்த்யம் வா இதம் சரீரம்’’ இவைமுதலான ப்ரகரணங்களால் விளக்கப்பட்டவை களான ப்ரத்யகாத்மாவினுடைய ஸாக்ஷாத்காரமாகிய கைவல்யத்துக்கு ‘‘ஆத்மத்ருஷ்டே: த்ரயோப்யேதே யோகத்வாரேண ஸாதகா:। ஆத்மார்த்தீ சேத் த்ரயோப்யேதே தத்கைவல்யஸ்ய ஸாதகா:॥’’ என்று இவற்றின்படியே ஸாதனமாகவும், அதிகாரத்தின் முடிவில் பெற இருக்கின்ற மோக்ஷத்திற்கு ஸாதனமாக இப்போது அநுஷ்டிக்கிற பகவத் பக்திக்கு அங்கமாகவும், அக்நிஷ்டோமம் முதலிய யாகங்களைச் செய்து அவைகளாலே, ‘‘அஹம் ஹி ஸர்வயஜ்ஞா நாம் போக்தாச ப்ரபுரேவச’’ என்கிறபடி ஸர்வகர்மஸமாராத்யனையும் அனைத்து கர்மங்களுக்கும் பலனைத் தருமவனையுள்ள புருஷோத்தமனை ஆராதித்ததும் இந்த க்ஷேத்ரத்திலே தான். இதுவும் தவிர அநேக மஹாராஜாக்கள் ‘‘ராஜா ஸார்வபௌம: அச்வமேதேந யஜதே’’ என்றும், ஸர்வம் பாப்மாநம் தரதிதரதி ப்ரஹ்மஹத்யாம்’’ என்றும் ‘‘ய: அச்வமேதே நயஜதே – தேவாநாமேவாயநேநைதி’’ என்றபடி ப்ரம்மஹத்தி முதலான அனைத்துப் பாபங்களும் நீங்கவும், மோக்ஷம் முதலிய எல்லா பலன்களும் கிட்டுவதற்காக வும் இந்த க்ஷேத்ரத்திலேயே அச்வமேதத்தாலே அண்டினவர் களது பாபங்களையெல்லாம் போக்குபவனை ச்ரிய:பதியை ஆராதித்து ஸ்வர்க்காதி ஸ்தானங்களைப் பெற்றபின்பும், திருஎவ்வுளப்பனை ஸேவிப்பதற்காக இந்த க்ஷேத்ரத்திற்கு வந்தவர்களை யோகிகள் காண்கிருர்கள். இந்த க்ஷேத்ரத்தில் யோகிகள் உண்டோவெனில் கர்மயோக நிஷ்டர்களாயும், ஜ்ஞானயோகநிஷ்டர்களாயும், பக்தியோக நிஷ்டர்களாயும் இந்த

க்ஷேத்ரத்தில் குஹைகளில் இருக்கின்ற மஹர்ஷிகளுக்கு கணக்கே கிடையாது. பாபி ஜனங்களது கண்களுக்கு இலக்காகாதகாரணத்தால் அவர்களை இல்லையென்று சொல்லி விடலாமா?

वीक्ष्यते भगवांस्तत्र मानुषेणापि चक्षुषा

अतस्तद्विपिनं लोकेवीक्षारण्यमितिश्रुतम् ।।३२ ।।

அவ்வரண்யத்தின் பெயர் சொல்லுகிறேன் கேளுங்கள். அவ்வரண்யத்தில் ज्ञानशक्ति बलैश्वर्य वीर्यतेजांस्यशेषत: भगवच्छब्दवाच्यानि विनाहेयैर्गुणादिभि: एव मेष महाशब्दो मैत्रेय भगवानिति। परमब्रह्मभूतस्य वासुदेवस्य नान्यग: ।तत्र पूज्य पदार्थोक्ति परिभाषा समन्वित: शब्दोऽयं नोपचारेण ह्यन्यत्रह्युपचारत: என்கிறபடி. அருவருக்கத்தக்க குணங்களுக்கு நேர்மாருன ஆறுகுணங்கள் நிறைந்தவனுகையாலே பகவான் என்ற சப்தத்துக்கு முக்யப்பொருளாக விளங்கக்கூடிய ஸ்ரீமந் நாராயணன். ''न संदृशेतिष्ठति रूपमस्य न चक्षुषा पश्यति कश्चनैनं'' என்றும், ''तं दुर्दर्शं गूढमनु प्रविष्टं'' என்றும், ''अद्रेश्यं'' என்றும், ''नमांसचक्षुरभिवीक्षतेतं'' என்றும், ''न तु मांशक्ष्यसे द्रष्टुं अनेनैव स्वचक्षुषा'' என்றும் சொல்லுகிறபடியே இயல்பாக கண்ணுலே காணமுடியாதவனுக இருந்தபோதிலும், எங்கும் எப்போதும் காணப்படாமல் நின்றேமானுல் நம்மை எல்லாரும் இல்லை என்று சொல்லிவிடுவார்கள். யௌக்திகர்கள் ''யதிஸ்யாத் உபலப்யேத'' என்றன்றே சொல்கிருர்கள். ஆப்தர்களது சொல்லான சப்தமேப்ரமாணம் என்ற தருக்கச் சமணருடைய புதிய கட்டுப்பாட்டினுலே அபௌருஷேயமான வேதமானது ப்ரமாணமாக ஆவது அரிதாயன்றே உள்ளது. நம்முடைய ஸத்தையை ஸாதிக்கத்தக்கதான நல்லகாரணம் இல்லையே. ''க்ஷித்யங்குராதிகம் கர்த்ருஜந்யம் கார்யத்வாத்'' என்ற குருட்டுத்

தார்க்கிகருடைய அன்னலும் துன்னலுமான அநுமானத்தையும், ''சாஸ்த்ரயோநித்வாத்'' என்று ப்ரம்மவாதி கண்டித்துவிட்டாரே. ஆகவே நம்முடைய ஸ்வரூபத்தை ஓரிடத்தில் சிலருடைய கண்ணுக்கு இலக்காக்கித்தர வேண்டும் என்று நினைத்து அப்படிச் செய்தருளினார். அப்படிச் செய்தருளின இடம் இந்த க்ஷேத்ரம் தான். ஆகையால் இந்த க்ஷேத்ரத்தில் அந்த பகவான் மனிதர்களது ஊனக்கண்ணாலும் காணத்தக்கவனாயுள்ளான். ஆகையால் தான் இவ்வரண்யம் ''வீக்ஷாரண்யம்'' என்று ப்ரஸித்தமாயுள்ளது.

विजयं नाम तत्प्रोक्तं दिव्यमायतनं हरेः

यत्र स्थित्वा जगन्नाथः जितवान् मधुकैटभौ ।।३३ ।।

पुरा राजन् हरिस्साक्षाद्भक्तानुग्रहकारकः ।

இந்த கல்பத்தின் ஆதியில் ரூபத்தாலும், குணங்களாலும், விபூதி(ஐச்வர்யம்)களாலும் ப்ரகாசிப்பவராயும், ஸர்வலோகஸ்வாமியாயும், தன்னை அண்டினவர்களது விரோதிகளைப் போக்குவதில் வல்லவராயுமிருக்கின்ற ஸ்ரீமந் நாராயணன்,

ददृशातेऽरविन्दस्थं ब्रह्माणममित प्रभुम्

सृजन्तं प्रथमं वेदां श्चतुरश्चारुविक्रमम्

ततो विग्रहिणस्तांस्तु दृष्ट्वा तावसुरोत्तमौ

वेदान् जगृहतू राजन् ब्रह्मणः पश्यतस्तदा

अथ तौ दानवश्रेष्ठौ गृहीत्वातान् सनातनात्

र सां विविशतुस्तूर्णं उदपूर्णे महोदधौ। ततो हृतेषु वेदेषु

ब्रह्मा कश्मलमाविशत्। ततो वचनमीशानं प्राह वेदैर्विनाकृतः ।

ब्रह्मा - वेदामे परमं चक्षुः वेदामे परमं धनम् वेदा मे परमं धाम

वेदा मे ब्रह्मचोत्तमम् मम वेदा हृतास्सर्वे दानवाभ्यां बलादितः

अन्धकारा इमे लोका जाता वेदैर्विवर्जिता: ।।
वेदै: ऋतोऽहं किं कुर्यां लोकान्वै सृष्टुमुद्यत:
अहो बत महद्दु:खं वेदनाशनजं मम
प्राप्तो धुनोति हृदयं तीव्रश्शोको ममस्वयम्
कोहिशोकार्णविमग्नं मामिहाद्य समुद्धरेत्
इत्येवं भाषमाणस्य ब्रह्मणो नृप सत्तम
हरे: स्तोत्रार्थमुद्भूता बुद्धि: बुद्धि मतांवर
ततो जगौ परं जप्यं प्राञ्जलि: प्रग्रह: प्रभुमित्यादि
एतस्मिन्नन्तरे राजन् देवो हयशिरोधर:
जग्राह वेदानखिलान् रसातल गतान् हरि: प्रादाश्च ब्रह्मणे राजन्
तत: स्वां प्रकृतिं ययौ ततस्त योर्वधेनाऽशु वेदोपहरणेनच
शोकापनयनं चक्रे ब्रह्मण: पुरुषोत्तम: இத்யாதிகளில் பகவானது நாபீகமலத்திலுள்ளவரான ப்ரம்மா வேதபுருஷர்கள் நால்வரையும் விக்ரஹரூபத்தில் ஆக்கிக் கொண்டு வாழ்ந்து வந்தார். பேய் போன்ற பெருவெள்ளம் கணுக்காலளவு என்னும் படி நெடிதோங்கி வளர்ந்த மது கைடவன் என்ற இரண்டு அசுரர்கள் ப்ரம்மா பார்த்துக் கொண்டிருக்கும் போதே அவரை லக்ஷ்யம் பண்ணுமல் அந்த வேதபுருஷர்கள் நால்வரையும் அபஹரித்துக்கொண்டு நீர்நிறைந்த ப்ரளயஸமுத்ரத்தின் உள்ளே புகுந்துவிட்டனர். அப்போது ப்ரம்மா பெருந்துயரத்து டன் ‘‘எனக்கு வேதங்கள் தானே கண்கள். வேதங்கள் தானே செல்வம். வேதங்கள் தான் எனக்கு எல்லாவித அர்த்தங்களையும் காட்டித்தரக்கூடிய விளக்கு. பகவான் எனக்கு அளித்த ஸர்வ ஸாதநங்களான வேதங்களை இந்த அஸுரர்கள் அபஹரித்துக் கொண்டு போனபடியால் எனக்கு இவ்வுலகெல்லாம் இருளாய் போயின. இனி வேதங்களில்லாமல் நான் எவ்வாறு ஸ்ருஷ்டி

பண்ணுவேன் என் துயரத்தை இனி யார் நீக்கப்போகிறார்கள். ஆகிலும் அண்டியவர்களது விரோதிகளைப் போக்குவதில் வல்லவரான ச்ரிய:பதியை ஸ்தோத்திரம் பண்ணுகிறேன் என்று எண்ணி ஸ்ரீஹயக்ரீவ அநுஷ்டுப் மந்த்ரராஜனை ஜபித்தார். அப்போது ஹ்யக்ரீவரூபியான புருஷோத்தமன் அந்த மதுகைடபர்களாகிய அசுரர்களை ஸம்ஹரித்துவிட்டு வேதங்களை ப்ரம்மாவுக்குத் தந்தருளி அவர் துயரத்தைத் தீர்த்தார். அந்த அசுரனைக்கொன்ற சிரமம் தீர்வதற்காக எந்த இடத்தில் எழுந்தருளியிருந்து ஊனக்கண்ணுள்ளவர்களுக்கும் நேரில் காணத்தக்கவராய் பக்தர்களுக்கு அனுக்ரஹம் செய்தாரோ, அத்தகைய அடியார்களது விரோதிகளைக் கொன்றவராய ஸ்வாமிக்கு இருப்பிடமாயும், சாமான்யமான கண்ணுள்ளவர் களுக்கும் காணும்படி நின்றதேயாகிலும் உண்மையில் சுத்தஸத்வமயமாயிருக்கிற அந்த விமானம் எம்பெருமானுக்கு விஜயஸ்தானமாக விளங்குவதால் விஜயம் என்கிற பெயராலே வழங்கப்பட்டு ''ஸ்ரீவிஜயகோடிவிமானம்'' என்றே பெயர் பெற்றது.

विष्णोरायतनं तत्र वनं तीर्थं च संगतम् ।।३४ ।।

तत्र गत्वा मुनिश्रेष्ठ यजस्वार्थ सिद्धये ।

ममापि गेहं त्यक्त्वापि निवासस्तत्रहिध्रुवम् ।।३५ ।।

भवेत्समाधि सिध्यर्थं सर्वपापक्षयायच ।

ஸதா ஸர்வகாலம் பகவானையே எண்ணிக்கொண்டிருப்பதில் வல்லவராகிய தேவபாகரே! நீர் நம்மை வினவியபடி வீக்ஷாரண்ய ப்ரதேசத்தில் அனைத்துப்பாபங்களையும் போக்கக்கூடிய பகவானது விமானமும், அரண்யமும், இவ்விரண்டையும் விஞ்சக்கூடிய புண்யதீர்த்தமும் சேர்ந்திருககின்றது. ஆகையால் தேவரீரும் அந்த க்ஷேத்ரத்தில் சென்று உமது எண்ணங்களெல்லாம் நிறைவேறுவதற்குரிய யாகம், தாநம், ஹோமம் முதலியவற்றாலே ஆராதிப்பீராக. இது காறும் பதரிகாச்ரமத்தில் இருந்த நம்முடைய க்ருஹத்தை விட்டு எல்லாபாபங்களும் தொலைந்து பகவத்த்யானம் ஸித்திப்பதற்காக

इत्युक्तः शालिहोत्रेण सर्वज्ञेन तपस्विना ।।३६ ।।
नारायणं जगन्नाथं प्रणम्यार्चितुमिच्छया
देवभागः प्रसन्नात्मा देवदेवं प्रसादितुम् ।।३७ ।।
स्तुति पूजानमस्का रैः द्रष्टुं तत्रागतस्तदा ।

இவ்வாறு எல்லாவிதமான கலக்கத்தையும் போக்கக்கூடிய உயர்ந்த தபஸ்ஸினுலே உலகிள்ள எல்லா வஸ்துக்களேயும் கையிலங்கு நெல்லிக்கனியாக ப்ரத்யக்ஷமாகப்பார்த்துக் கொண்டிருக்கிற ஶ்ரீசாலிஹோத்ர பகவானேலே அறிய வேண்டிய அர்த்தங்களேயெல்லாம் அறிவிக்கப்பட்டவராயும் ஐயந்திரிபற தத்வார்த்தங்களே உபதேசிக்கப்பெற்றதனுலே தேவபாகர் தெளிந்த மனத்தினராக விளங்கினுர். அத்தகைய தேவபாகர் ஸர்வலோகங்களுக்கும் ஸ்வாமியாய், ஶ்ரீவிஜயகோடி விமானத்தின் மத்தியில் எழுந்தருளியிருப்பவராயும், திருஅநந்தாழ்வான்மேலே சயனித்திருப்பவராயும், ''சீருயிரேயோ மனிசர்க்குத் தேவர்போலே தேவர்க்கும் தேவாவோ'' என்கிற படியே திவ்யலாவண்யம் நிறைந்த சரீரமுடையவர்களான இந்திரன், சிவன், பிரம்மா, பன்னிரு கண்ணனுன ஆறுமுகன் முதலான தேவர்களெல்லாம் மனுஷ்யர்களேப் போலே நிற்கும்படி. ''ரூபஸம்ஹநநம் லக்ஷ்மீம் ஸௌகுமார்யம் ஸுவேஷதாம் ததர்ச விஸ்மிதாகாரா ராமஸ்ய வநவாஸிந:''. இவ்வாறு சொல்லப்பட்ட ஸௌலப்யம், ஸௌகுமார்யம், லாவண்யம், யௌவனம் முதலிய கணக்கற்ற கல்யாண குணங்களோடு கூடியவராகிய ஶ்ரீமந்நாராயணனே காலதத்வமுள்ளதனேயும் ப்ரத்யக்ஷமாக அநுபவிப்பதற்கும், அந்த அனுபவத்தினுலுண்டான எல்லேயற்ற அதிசயத்தை யுடைய ப்ரீதியினுலுண்டான கூப்பிய கையினராய் நமஸ்கரித்துக்கொண்டே இருப்பவர்களாய், ''மாளுமோரிடத் திலும் வணக்கொடு மாள்வது வலமே'' என்றும், சொல்லுகிற

படியே, ‘‘ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தாநுவ்ருத்த நிரந்தரராய் நிரத்யய நித்ய கிங்கரவ்ருத்தி தன்னாலே, ‘‘கதாஹமைகாந்திக நித்யகிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி’’ என்று ஆசைப்பட்டபடியே பூஜிப்பதற்குண்டான ஆசையினாலே, ‘‘செந்தாமரைக்கண் என்னம்மான்’’ ‘‘பொங்கேழ் புகழ்கள் வாயவாய், புலன்கொள்வடிவென்மனத்ததாய், ‘‘அங்கேய் மலர்கள் கையவாய் வழிபட்டோடவருளிலே’’ என்றும், ‘‘தாமுளரே தம்முள்ளமுள்ளுளதே தாமரையின் பூவுளதே ஏத்தும் பொழுதுண்டே வாமனன் திருமருவு தாள் மருவு சென்னியரே செவ்வே அருநரகம் சேர்வதரிது’’ என்றும், ‘‘வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது’’ என்றும், ‘‘அரண்யே ஸந்தி பத்ராணி நத்யாம் ஸ்வாதூதகாநிச ஸந்திஹஸ் தௌ ச பாதௌ ச கதம் நாராதயேத் ஹரிம்’’ என்றும் சொல்லுகிற படியே துதித்தல், பூஜித்தல், நமஸ்கரித்தல்,முதலிய இடையருது சிந்தித்தலாகிய பக்தியினாலே ‘‘சாந்தநிக்ரஹ ஸங்கல்பனாய் வழிநின்ற வல்வினைமாள்வித்து அழிவின்றி ஆக்கம் தருமவனுக்கிக்கொள்ளுகைக்காக அந்த புண்யாவர்த க்ஷேத்ரத்தை நோக்கி எழுந்தருள்வர்.

शालिहोत्रोऽपि धर्मात्मा तस्मादत्रागतस्तदा ।।३८।।

‘‘யேச வேதவிதோ விப்ரா யேசாத்யாத்ம விதோ ஜநா:
தேவதந்திமஹாத்மாந: க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்’’ என்றும், ‘‘ராமோவிக்ரஹவாந் தர்ம:’’ என்றும் சொல்லுகிறபடியே அனைத்துப் புருஷார்த்தங்களை விரும்புமவர்களுக்கும் ச்ரேயஸ்ஸுக்குக் காரணரான ச்ரிய:பதியினிடத்திலேயே ‘‘ப்ராப்யமும், ப்ராபகமும் அவனே’’ என்று முழுநம்பிக்கை யுடையவராய், ‘‘ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்’’ என்கிறபடியே உலகங்களுக்கெல்லாம் ஓருயிரான பரமாத்மாவுக்கும் அந்தர்யாமியானவரான ஸ்ரீசாலிஹோத்ரபகவானும் அப்பொழுதே நரநாராயணர்கள் நித்யவாஸம் பண்ணக்கூடிய ‘‘வதரிவணங்குதுமே’’ என்று எல்லாரும் வணங்கும்படியான பதரிகாச்ரமத்தைவிட்டு புண்யாவர்த்த க்ஷேத்ரத்திற்கு

எழுந்தருளினுர். இப்படி குருசிஷ்யர்களான சாலிஹோத்ர தேவபாகர்கள் இருவரும் ''தேனமர்சோலைக் கற்பகம்பயந்த தெய்வநன்நறுமலர் கொணர்ந்து வானவர் வணங்கும் கங்கையின் கரைமேல் வதரியாச்சிரமத்தில் நின்றும் இந்த க்ஷேத்ரத்துக்கு எழுந்தருளியதாகச் சொன்னீரே? இது கூடுமோ? விட்ட இடத்தைக்காட்டிலும் பற்றுமிடத்துக்கு என்ன அதிசயமென்றுல் அருளிச்செய்கிறுர்

नास्ति तत्सदृशं क्षेत्रं लोके परम पावनम्।

''பாவநஸ்ஸர்வலோகாநாம் த்வமேவ ரகுநந்தன'' என்றும் புண்யாநாமபிபுண்யோSஸௌ'' என்றும், ''பவித்ராணும் பவித்ரம்'' என்றும், ''தீர்த்தீகுர்வந்தி தீர்த்தாநி ஸ்வாந்தஸ்தேந கதாப்ருதா'' என்றும் சொல்லுகிறபடியே தன் சம்பந்தத்தாலே புண்யதீத்தாதிகளுக்கும் கூட பாவனத்வம் உண்டாக்கினவனை பரவிவானவரேத்த நின்ற பரமனைக் காட்டிலும், ''பக்த்யா பரமயா வாபிப்ரபத்யா வா மஹாமதே ப்ராப்யோஹம் நாந்யதாப்ராப்ய: மமகைங்கர்ய லிப்ஸுபி:'' என்றுப்போலே எந்தவிதமான நிர்பந்தமுமில்லாமல் கௌசிகோபாக்யானத்தின்படியே ஸர்வபாவநமாக எந்த புண்யாவர்த்தக்ஷேத்ரம் உமக்கு உபதேசிக்கப்பட்டதோ அந்த க்ஷேத்ரத்துக்கு ஸமமான க்ஷேத்ரம் எல்லா உலகிலும் ஆராய்ந்தாலும் காணப்படவில்லை. பதரிகாச்ரமத்தைக் காட்டிலும் இதன் அதிசயத்தை எடுத்துரைக்க வேண்டுமோ? இந்த க்ஷேத்ரத்திலுள்ள தீர்த்தத்தின் வைபவத்தை உண்மையாகச் சொல்லுகிறேன் கேளும்

अबुद्धिपूर्वजातानि बुद्धिपूर्व कृतानि च ।।३९ ।।

रहस्यानि प्रकाशानि गुरूणिच लघूनिच

हृत्ताप नाशन स्नानं पापान्याशुव्यपोहति ।।४० ।।

மனிதனது காமம், க்ரோதம், லோபம் ஆகிய மூன்று சத்ருக்கள் மிக்க பயங்கரமானவைகள். இம்மூன்றின் காரணமாகவே இவன் மஹாபாதகம், அதிபாதகம், ஸம்பாதகம், உபபாதகம் ஆகியவற்றில் ஈடுபடுகிருன். ஸங்கீர்ணகரணம் மலாவஹம்

அபாத்ரீகரணம் ஆகியவற்றைச் செய்கிருன்.

''பரம்மஹத்யா ஸுராபாநம் ஸ்தேயம் குர்வங்கநாகம:।

மஹாந்தி பாதகாந்யாஹு; ஸம்யோகஸ்சைவ தைஸ்ஸஹ– என்றும் இவ்வாறு விஷ்ணு மந்வாதி தர்ம சாஸ்த்ரங்களில், மஹாபாதக, ஸம்பாதக, உபபாதக, ஸங்கலீகரண, மலிநீகரண, அபாத்ரீகரண, ஜாதிப்ரம்சகர ப்ரகீர்ணங்கள் பாபங்கள் ஒன்பது விதமாகக் கூறப்பட்டுள்ளன. அவற்றை ஒருமுறையோ பலமுறையோ செய்வதனுலும், ரஹஸ்யமாகவும், வெளிப் படையாகவும் தெரிந்தும் தெரியாமலும் செய்துள்ள பாபங்களும், அவ்வவற்றிற்கநுகுணமான பெரியசிறியப்ராயச்சித்தங்களும், தப்பிப்போகக்கூடும். அப்படி அவை தப்பிப்போனுல் யாதநா சரீரத்தின் மூலம் பொறுக்கமுடியாத நரகாநுபவம் பண்ண வேண்டிவரும். பின்னர் பல ஆயிரம் ஜன்மங்கள் புழுபூச்சி ம்ருகம் சண்டாளபர்யந்தமாகப் பிறந்து உழலவேண்டிவரும். பின் பைத்தியம், ஜடம், குருடு, செவிடு, நொண்டிகளாயும், ஆஸ்த்மா, க்ஷயம் முதலிய மஹாரோகங்களால் பீடிக்கப்பட்டு மீண்டும் மீண்டும் பிறப்பார் என்று கூறப்பட்டிருந்தாலும் அவைபற்றி அஞ்சவேண்டுவதில்லே. ப்ரளயகால அக்னிக்கு முன்னுலே புல்கொடி புதர் அடர்ந்த மரங்கள் காடுகள் எதிர்த்து நிற்கமுடியுமோ? அஞ்ஜலியின் பெருமைபற்றி விளக்கவந்த ''த்வதங்க்ரிமுத்திச்ய'' என்ற ச்லோகத்தில் சொல்லப்பட்ட ''முஷ்ணத்யசுபாந்யசேஷத:'' என்பதன் பொருள் தெரிந்தது தானே. அதுபோலத் தான் இந்த தீர்த்தத்தின் வைபவமிருக்கும் படியும் ஒருமுறை ஹ்ருத்தாபநாசத்தில் மௌஸலஸ்நாநம் செய்தாலும்கூட அச்சேதனனிடத்திலுள்ள பாபங்கள் அறியாமல் செய்தனவும், அறிந்துசெய்தனவும், ரகசியமாகவோ வெளிப்படையாகவோ செய்தனவும், சிறியனவும், பெரியனவும் உள்ள அனேத்துப் பாபங்களேயும் போக்குகிறது. எது போலவென் ருல், வீடுகள், மடங்கள் கோபுரங்கள் பெரியமலே, குகை முதலியவற்றிலுள்ள சிறிய பெரிய இருட்டுகளே இளஞ்சூரியன் போக்கடிக்குமாப்போலே அனேத்துப் பாபங்களேயும் மறுகணத்தி லேயே உருமாய்ந்து போம்படி அந்தஸ்நாந வைபவம்

செய்திடும். இவ்விஷயத்தில் ஆஸ்திகன் துளியும் சந்தேஹப் படக்கூடாது. ‘‘देवतातीर्थ तपसां भारताद्यस्य निश्चय: न नास्तिक्यं भवेत्तस्य महामीमांसकैरपि देवगुह्येषुचान्येषु हेतुर्देवि निरर्थक: बधिरान्धवदेवात्र वर्तितव्यं हितैषिणा’’ என்று மஹர்ஷி நியமித்தபடியே இருப்பது தான் உசிதம். ஸந்தேஹப்படுமவன் ‘‘ஸம்சயாத்மாவிநச்யதி’’ என்று பலமிழப்பதோடன்றி போகமோக்ஷங்களுக்குரிய மார்க்கத்தினின்றும் தவறியவனுய்ப் போவான்.

அப்படியானுல் பெருமைமிக்க ஸ்ரீராமஸேதுவை தர்சிப்பது முதலிய ப்ராயச்சித்தங்களுக்குக் குறைவு வாராதோ என்ருல் வராது. எப்படியென்ருல் ‘‘வேதமதீத்ய ஸ்நாஸ்யந்தி’’ முதலானவற்றில் அதிகுருஸ்நாநம் சொல்லப்பட்டுள்ளது. ‘‘அதை தபரம் தூஷ்ணீ மேவ தீர்த்தேஸ்நாத்வா தூஷ்ணீம் ஸமிதம் ஆததாதி’’ என்று லகுஸ்நாநம் சொல்லப்பட்டுள்ளது. ‘‘உத்ஸந்நயஜ்ஞோ வா ஏஷயதச்வமேத:। கஸ்தத் வேதேத்யா ஹுர்யதி। ஸர்வோவா க்ரியதே ந வா ஸர்வ:’’ என்று வேதபுருஷன் கூட கார்த்ஸ்நாநுஷ்டாந ஸந்தேஹப்படும்படி யாகவும், ‘‘ஸர்வம் பாப்மாநம் தரதி தரதி ப்ரஹ்மஹத்யாம் – யோச்வமேதேந யஜதே’’ என்று எல்லா பாபங்களேயும் போக்குவ தாக வேதத்திலே ப்ரஸித்தமாகச் சொல்லப்பட்ட அச்வமேதத்தை பத்துத்தடவை அநுஷ்டிப்பது ஒரு தட்டும், ‘‘ஸுக்ருதப்ரணும’’த் தை ஒருதட்டுமாக வைத்தோமானுல் பத்து அச்வமேதம் பண்ணியவனுக்கும் ஸுக்ருதப்ரணுமிக்கும் உள்ள பலன்களே ஆராய்ந்தோமானுல் முன்னது அழியக்கூடியது . பின்னது நித்யமானது. எனவே இவ்விரண்டையும் ஒரு தராசில் வைக்கலாகாது என்று பெரியோர்கள் தீர்மானித்துள்ளனர். இவ்வாறே கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் இவற்றை அங்கமாகக்கொண்டதான பரபக்தியினுலே ஸாதிக்கக்கூடிய தான பலனேக் குறித்து க்ஷணிகமான ஆத்மஸமர்பணம் சொல்லப்பட்டது. குருலகு ஸ்தலங்கள் பலவுண்டு. அவ்வவ்விடங்களில் சக்தி அசக்தி இவற்றிற்கேற்ற அதிகார

விசேஷங்களால் நிர்வஹிக்கும்போது விச்வாஸம் தான் பலன் தரக்கூடியது என்கிறபடி விச்வாஸத்தில் ஏற்றத்தாழ்வுகள், ஆர்த்தியிலே ஏற்றத்தாழ்வுகள் என்று இப்படி நிர்வாஹ ஹேதுக்களைக் கண்டுகொள்ளலாம். இனி ஐந்து ச்லோகங்களால் இந்த தீர்த்தமானது எல்லா வகையான தீமைகளையும் போக்குவதற்கும், மேலும் அங்குள்ள விஜயகோடி விமானத்தை ஸேவிப்பதால் எல்லாப்பாபங்களும் தொலையும் என்பதற்கும், நான்குவிதமான புருஷார்த்தங்களையும் அளிக்கும் என்பதற்கும் ப்ரத்யக்ஷத்தையும், அநுமானத்தையும் காட்டுகிறார்.

तत्र गत्वा विनश्यन्ति व्याधय: पूर्वसञ्चिता:
हृत्तपनाशन स्नानाद्विष्णोरालय दर्शनात् ।।४१ ।।
हृत्तापनाशने स्नात्वा वत्सरं मासमेव वा
यथेष्टं लभते मर्त्य: ततो याति परां गतिम् ।।४२ ।।
कन्यका सत्पतिं लब्ध्वा चिरंजीविष्यतिध्रुवम्
नारीतु वत्सरं स्नात्वा सत्पुत्रान्लभते बहून् ।।४३ ।।
ब्राह्मण: क्षत्रिया वैश्या: शूद्राश्च द्विजसत्तमा:
तत्र विष्णुं समाश्रित्य गच्छन्ति परमांगतिम् ।।४४ ।।
ब्रह्मचारी गृहस्थश्च वानप्रस्थोऽथ भिक्षुक: ।
तत्र विष्णुं समाश्रित्य गच्छन्ति परमं पदम् ।।४५ ।।

அந்த புண்யாவர்த்த க்ஷேத்ரத்திலே சென்று ஹ்ருத்தாபநாச தீர்த்தத்தில் ஸ்நாநம் பண்ணுவதனாலும், ஸ்ரீவீரராகவரூபியான ச்ரிய:பதியினுடைய திவ்ய விமானத்தை ஸேவிப்பதனாலும், பலஜன்மங்களில் செய்த பாபத்தின் பலன்களான, குஷ்டரோகம், வயிற்றுவலி, தலைவலி, மற்றையபுண்கள், குருடு, செவிடு முதலிய எல்லா வியாதிகளும் அடியோடு நீங்கப்பெற்று அவர்கள் சரீரம் ஆரோக்யமாக விளங்கக் காண்கிறோம். இப்படி ப்ரத்யக்ஷமாக எல்லா வியாதிகளும்,

பாபங்களும் தீருகின்ற காரணத்தினுல் நாஸ்திகர்களுக்கும் நம்பிக்கையூட்டுவதாகவுள்ளது. இதனுல் இந்த க்ஷேத்ரத்தின் மஹிமை பண்டிதர்கள் பாமரர்கள் என்கிறவேறுபாடின்றி அனைவரும் தெளிவாய் தெரிந்துகொள்ளத்தக்கதாக உள்ளது. இப்படி தீமைகள் எல்லாம் விலகிக்காண்கையாலே மோக்ஷபர்யந்தம் ஸகலபுருஷார்த்தங்களும் ஸித்திக்கக் காண்கிறேம்.

பிராம்மணன் முதலிய ஜாதிகளில் எவனெருவன் ஹ்ருத்தாபநாசந தீர்த்தத்தில் தன் சக்திக்குத்தக்கவாறு ஒருவருஷமோ ஒருமாஸமோ ஸ்நாநம் செய்வானுனுல் தான் விரும்பக்கூடிய ஸத்புத்ரன், ஆயுள் ஆரோக்யம், ஐச்வர்யம் முதுலிய பலனை அடைவதோடன்றி சரீரம் முடிந்த பிறகு மோக்ஷஸாம்ராஜ்யத்தையும் அடைகிறுன்.

மோக்ஷம் பெறுவதைக் கண்கூடாகக் காண்பது எப்படி என்றுல் – ஒரு அக்ரஹாரத்தில் ஜடமாயும், ஊனமாயும் உள்ள ஒருவைஷ்ணவர் தமது வர்ணுச்ரமத்துக்குரிய தர்மங்கள் ஒன்றும் செய்யாமலிருந்தாலும், அமாவாசை தோறும் திருஎவ்வுளுக்கு வருவதும், ஹ்ருத்தாபநாச குளத்தில் குளிப்பதும், ஸ்ரீவீரராகவனை ஸேவிப்பதுமாகிய முரட்டு வ்ரதத்தை அநுஷ்டித்து வந்தார். அவர் உயிர் பிரிவதற்கு அரைநாழிகைக்கு முன்னர் புல்புள்ளித்துப்பட்டியுடன் பெருமான் வந்து என்னை அழைத்துக் கொண்டு போகிறுர் என்று கூச்சல் போட்டுவிட்டு மறுகணம் உயிர்நீத்தார். இப்படிப்பட்ட சம்பவங்கள் பலபலவாகக் காண்கையாலே எல்லார்க்கும் கண்கூடாகக் காணக்குறைவில்லை. ஒரு கன்னிப்பெண்ணுன வள் ஒருமாஸமோ, ஒருவருஷமோ இந்த ஹ்ருத்தாபநாசந தீர்த்தத்தில் ஸ்நாநம் பண்ணுவாளாகுள் பந்துக்களெல்லாரும் கொண்டாடக்கூடிய நல்லொழுக்கம் மிக்கவனுயும், நன்குபடித்தவனுயும், நோய்நொடி ஏதுமில்லாதவனுயும் உள்ள கணவனை அடைந்து நூறுவயது வாழ்ந்து சுகமாயிருப்பாள். நல்லகணவனை மணந்து கொண்ட ஒருபெண்மணியானவள் கணவனது அநுமதிபெற்று இந்த தீர்த்தத்தில் ஒருவருஷம்

ஸ்நாநம் பண்ணினுளானுல் ஆயுஷ்மான்களாயும், அழகிய வடிவினராயும், நற்குணம் மிக்கவராயும், சுகமே ஜீவிக்கக் கூடியவர்களாயும், உள்ள நல்ல பிள்ளைகளைப் பெற்று சுகமாய் வாழ்வாள். பிராம்மணனுய் பிறந்து ஜாதகர்மம் முதலிய ஸம்ஸ்காரங்கள் உரியகாலத்தில் செய்விக்கப்பெற்று, நல்லகுடும்பத்தில் பிறந்ததால் நல்ல ஆசாரம் மிக்கவராய், ஆத்மகுணங்கள் நிறைந்தவராய், வேதத்தை நன்கு அறிந்த ஆசார்யனிடத்தில் அழைத்துச்செல்லப்பெற்றவராய், நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் கற்றவராய், பதினுன்கு வித்யைகளிலும் வல்லவராய், மூன்று விதமான தாபங்களால் ஆர்வம் மிக்கவராய், அம்ருதமயமான எம்பெருமானை அடைய விரும்புபவராய், ஸத்ஸம்ப்ரதாய ஞானம் மிக்கவராய், பரதத்வம் எது கீழான தத்வம் எது, மோக்ஷம் எது அதனை அடைவதற்குண் டான உபாயம் என்ன, அதற்கு விரோதிகள் யார் என்பனவற்றை யெல்லாம் அறிந்தவர்களாய், அஹங்காரம், ஆடம்பரம், ஹிம்ஸை ஆகியவை அற்றவர்களாய், பொறுமைமிக்கவர் களாய், ருஜு மார்க்கத்தில் செல்பவர்களாய்,

आचार्योपासनं शौचं स्थैर्यमात्मविनिग्रहः ।
इन्द्रियार्थेषु वैराग्यं अनहंकार एवच ।
जन्ममृत्यु जराव्याधि दुःख दोषानु दर्शनम्
आसक्ति रनभिष्वंगः पुत्रदारगृहादिषु
नित्यञ्च समचित्तत्वं इष्टानिष्टोपपत्तिषु ।
मयिचानन्य योगेन भक्तिरव्यभिचारिणी ।
विविक्त देशसेवित्वं अरतिर्जनसंसदि ।
अध्यात्मज्ञान नित्यत्वं तत्वज्ञानार्थ दर्शनम् ।
एतत् ज्ञानमिति प्रोक्तं अज्ञानं यदतोऽन्यथा ।।

என்று கீதாசார்யன் அருளிச்செய்தபடியே, அமாநித்வம், முதலிய குணங்களைப்பற்றினவர்களாய், ''சுசீநாம் ஸ்ரீமதாம்'' என்றும்,

''தவதாஸ்யைக ஸுகைகஸங்கிநாம்'' ''ஜநித்வாஹம் வம்சே மஹதி ஜகதி க்யாத யசஸாம்'' என்றும் ''ஏழாட்காலும் பழிப்பிலோம்'' என்று கொண்டாடும்படி பழுத்தபரமைகாந்தி குலத்தில் பிறந்து பதினறுவர்ணத்தையுடைய தங்கத்தோ டோடு ஒக்கும்படியான பாரமைகாந்த்யம் உடையவர்களாய் கர்மயோக ஜ்ஞானயோகங்களினலே ஆத்ம ஸாக்ஷாத்காரம் பிறந்தபின் இந்த புண்யாவர்த்தக்ஷேத்ரத்தில் எம்பெருமானை நாள்தோறும் ஸேவிப்பதனல் ஏற்படும் அதிசயத்தை உடையவராய், உயிர்பிரியும் தருவாய் வரையிலும், தைலதாரையைப்போன்று இடையருது நினைந்து கொண்டிருப்பதாகிற பக்தியோகத்தி னலே ஆச்ரயித்து மோக்ஷம் பெறுகிருர்கள்.

இவ்வாறின்றி கேவல ப்ராம்மணர்களாயும், கேவல க்ஷத்ரியர்களாயும், கேவல வைச்யர்களாயும், கேவலசூத்ரர்களா யுள்ளவர்களும், கர்மயோக ஜ்ஞாநயோக பக்தியோகங்களை அறியாததாலும் அசக்தியினலும் சாஸ்த்ரங்களில் விலக்கப்பட்ட தாலும், பகவதனுக்ரஹத்தைப் பெறுவதற்கான காலதாமதத் தைப் பொறுக்காதவர்களாயும், அநதிகாரிகளாய் உள்ளவர்களும் இந்த க்ஷேத்ரத்தில் அனைவர்க்கும் அபயமளிப்பதற்காக நித்யவாஸமாய் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீவீரராகவனுடைய திருவடித்தாமரைகளையே உபாயமாகப்பற்றி, தமது ஸ்வருபத்துக் கேற்ற பலனைத்தரக்கூடியதான பரஸமர்ப்பணம் பண்ணி உத்தமபுருஷார்த்தமான மோக்ஷத்தைப்பெறுகிருர்கள். அவ்வாறே ப்ரம்மசாரி, க்ருஹஸ்தன், வானப்ரஸ்தன், ஸந்யாஸி ஆகிய நான்கு ஆச்ரமத்தவர்களும் கிம்க்ருஹாதீசனுய் தன்னை ஆச்ரயிப்பாரை எதிர்பார்த்து நிற்பவரான ஸ்ரீவிஷ்ணுவை தத்தம் நிலைக்கேற்றவாறு பக்தி ப்ரபத்திகளினல் ஆச்ரயித்து ''तद्विष्णोः परमंपदं सदापश्यन्तिसूरयः'' என்கிறபடி நித்யஸூரிகள் சூழ்ந்த பரமபதம் பெறுவார்கள்.

वीक्षारण्ये जगत्पुण्ये स्नात्वा हृत्तापनाशने<br>
विजयञ्च विमानञ्च दृष्ट्वा येऽर्चन्ति मानवाः ।।४६ ।।

अर्घ्यपुष्पादिभिर्नित्यं शयानं मधुसूदनम् ।
ते यान्ति परमं स्थानं यद्वै पश्यन्ति सूरयः ।।४७।।

நாட்டிலுள்ள புண்யமெல்லாம் ஒருபங்கும், இக்காட்டில் உள்ள பிராணிகள் செய்கின்ற புண்யம் ஒருபங்கு என்னும்படி புண்ணியத்தை வளர்க்கக்கூடிய வீக்ஷாரண்யத்தில் அந்தணர் முதல் திருக்குலத்தார் வரையிலுள்ள மனிதர்கள் எவராயிருந்தாலும், தர்சிப்பதாலும் தொடுவதிஞலும், தை அமாவாசையன்று பதிஞன்கு உலகங்களேயும் ஒருதட்டிலிட்டு மற்றெரு தட்டில் இடவேண்டும்படியான புண்யத்தை விளேவிக்கக்கூடிய ஹ்ருத்தாபநாசநத்தில் நீராடி, விஜயகோடி விமானத்தையும் கண்களாலே ஸேவித்து, மதுகைடபர்களேக் கொன்றதனுல் ஏற்பட்ட சிரமம் தீருவது என்ற வ்யாஜத்தையிட்டு, எல்லா மக்களுடைய தாபத்ரயத்தையும் போக்குவதற்காக, அவர்கள் வரவுபார்த்து நிற்கமுடியாதென்று எப்போதும் சயனித்துக் கொண்டிருக்கிற ஸ்ரீவீரராகவனே, ''पत्रं पुष्पं फलं तोयं योमे भक्त्या प्रयच्छति तदहं भक्त्युपहृतं अश्नामि प्रयतात्मनः '' என்றும், ''अन्यत्पूर्णादपांकुंभादन्यत्पादावनेजनात् अन्यत्कुशल संप्रश्नात् न चेच्छति जनार्दनः'' என்றும் சொல்லுகிறபடியே பக்தர்கள் ஸமர்ப்பிக்கின்ற இலே பூ கனி தண்ணீர் இவற்றைப் பொருட்படுத்தாமல் அவர்களுடைய நிலேயான பக்தியைப் பார்த்திடும் பெருமாளது திருவுள்ளம் உகக்கும்படி புனேந்த கண்ணிநீர் சாந்தம் புகை முதலியவைகளாலே பூஜிப்பார்களேயானுல், ''அண்டமாள்வதாணேயன்றே ஆள்வர் அமருலகே'' என்கிறபடி நித்யஸூரிகளாலே தர்சிக்கப்படுகின்ற பரமபதம் சேர்ந்து மகிழ்வர்.

वीक्षारण्ये तु बहवः मुनयस्सन्ति तापसाः
तपस्समाधि योगेन यातास्तद्वैष्णवं पदम् ।।४८।।

அந்த வீக்ஷாரண்யத்தில் இப்போதிருக்கின்ற தபஸ்விகளான

ரிஷிகளும், பகவானையே மநநம் பண்ணிக்கொண்டிருக்கும் முனிவர்களும் பற்பலர் என்று சொல்லலாமேயொழிய கணக்கிட்டுக் கூறமுடியாது. அப்படியே இந்த வீக்ஷாரண்யத்தில் முற்காலத்தில் தபஸ்ஸோடுமுகூடிய சமாதி ரூபஉபாயத்தினாலே ''सोऽध्वनः पारमाप्नोति तद्विष्णोः परमंपदं'' முதலானவற்றில் ப்ரஸித்தமான வைகுண்டத்தை அடைந்தவர்களும் கணக்கில டங்காதவர். ''நினைப்பான்புகில் கடல் எக்கலில்நுண்மணல்'' போல் பலரானபடியால் 'यः पार्थिवानि विममे रजांसि' என்றும், 'यावन्तः पांसवोभूमेः संख्याता देवमायया' என்றும், 'यो अन्तरिक्षे रजसो विमानः' என்றும் ப்ரமாணங்கள் சொல்லுகிறபடி எல்லா அணுக்களையும் அளக்கக் கூடிய பரமாத்மாவாலும் எண்ணமுடியாது.

अस्यक्षेत्रस्य माहात्म्यं कथयामि पुनस्तव
तच्छ्रुत्वा सहसा चित्त प्रसादस्ते भविष्यति ।।४९ ।।

இன்னும் இந்த க்ஷேத்ரத்தின் பெருமையைச் சொல்கிறேன். அந்த வைபவத்தைக் கேட்கின்ற உமது மனத்திற்கு அக்கணமே பேராநந்தமுண்டாகும்.

पयस्विन्यादृषद्वत्याः कुशस्थल्या यदन्तरं
एकयोजनविस्तारं पञ्चयोजनमायतम् ।।५० ।।
वीक्षारण्यमिति ख्यातं क्षेत्रं भुवनपावनम् ।

தெற்கேயுள்ள பாலாற்றுக்கும், வடக்கேயுள்ள குசஸ்தலீ நதிக்கும், இந்த க்ஷேத்ரத்துக்கு மேற்கே ஒருக்ரோச தூரத்தில் தெற்கேயிருந்து வடக்கு நோக்கி ஓடுகின்ற குசஸ்தலீ நதியில் கலக்கின்ற கல்லாறுக்கும் நடுவிலுள்ள இடைவெளியில் ஒருயோஜனை தூரம் தெற்கு வடக்கு அகலமும், கிழக்கே சமுத்திரம் வரை ஐந்து யோஜனை கிழமேலாக நீண்டதாயுள்ளது. அவ்வாறு நாற்புறத்திலும் சூழப்பெற்ற இடந்தான் உலகிலேயே புனிதமான வீக்ஷாரண்யக்ஷேத்ரமென்று ப்ரஸித்தமாயுள்ளது.

अत्रिर्भृगुर्वसिष्ठश्च गौतमश्चापि काश्यपः ।।५१ ।।
भरद्वाजः पुलस्त्यश्च नारदः पुलहः क्रतुः ।
याज्ञवल्क्यो मुनिश्रेष्ठः जमदग्निरथांगिरा: ।।५२ ।।
शालिहोत्रो च भगवानुपमन्युश्च शौनकः ।
अन्ये च मुनयः श्रेष्ठाः बहवस्तत्र संगताः ।।५३ ।।
नानागुहाश्रयाश्चात्रस्नात्वाऽर्चन्ति जगत्प्रभुम् ।

தன் கண்ணில் சந்திரனை உண்டாக்கின அத்ரிமஹர்ஷியும் ''மஹர்ஷீணும் ப்ருகுரஹம்'' என்று பகவான் உட்புகும்படியான ஏற்றம் பெற்றவராய், வைவஸ்தமனுவிடத்தில் தாம் கேட்ட வர்ணுச்ரம தர்மத்தைத் தன் வாயாலே மஹர்ஷிகளுக்குச் சொன்னவராய், ''भृगोः ख्यात्यां समुत्पन्ना श्रीः पूर्वमुदधेः पुनः'' என்கிறபடியே பெரியபிராட்டியாருக்கு பிதாவான ப்ருகு மஹர்ஷியும், ''ऋषयोवा इन्द्रं प्रत्यक्षं नापश्यन् तं वसिष्ठः प्रत्यक्षमपश्यत्'' என்கிறபடியே ஸ்ரீமந்நாராயணனை ப்ரத்யக்ஷமாகக் கண்டவரும், ஸாக்ஷாத் ப்ரம்மாவின் புத்ரரும் ''வ்யாஸம் வசிஷ்ட நப்தாரம்'' என்று ஜகத் ப்ரஸித்தரான வ்யாசருக்கு கொள்ளுத்தாத்தாவும் (ப்ரபிதாமஹர்) ''ஏவமஸ்த்விதிசாப்ரவீத்'' என்கிறபடியே விச்வாமித்ரர் ப்ராம்மணனுவதற்கு ''ததாஸ்து'' என்று சொல்லி ஆமோதித்தவருமான வசிஷ்டரும்,இந்த்ரனும் ஆசைப்படும் படியான அழகுமிக்கவளாய், ஒருவிதமான குற்றமுமில்லாதபடி ப்ரம்மாவினுலே ஸ்ருஷ்டிக்கப்பட்டவளுமான அஹல்யையை ஒருவருஷகாலம் பார்த்துக் கொள்ளும்படி வைத்திருந்த போதிலும், அழகுமிக்கவளான அஹல்யையினிடத்தில் ப்ரஹ்மசர்ய வ்ரதம் நழுவாமலிருந்ததைக் கண்ட ப்ரம்மா ஆச்சர்யப்பட்டு அந்த கௌதமருக்கு கல்யாணம் பண்ணிக்கொடுத்ததாக புராணங்களில் புகழப்பட்டவரான வர்ணுச்ரம தர்மங்களை இயற்றியவருமான கௌதம மஹர்ஷியும், ''கச்யப: பச்யகோபவதி'' என்றபடி ப்ரம்மாவின்

புதல்வராயும், பரப்ரம்மத்தைக் கண்ணுல் கண்டவரும், தேவர், அசுரர், ப்ராணிகள் எல்லாம் உண்டாவதற்குக் காரணமான வருமான காச்யப மஹர்ஷியும், ஸாக்ஷாத் ப்ருஹஸ்பதியின் புதல்வராயும், ''பிப்ரத்வாஜோ பரத்வாஜ:'' என்று வாஜம் என்கிற சுக்ல தாதுவை ஒருக்காலும் நழுவவிடாதவராயும், அதனுல் ''பரத்வாஜர்''என்று ரிக்வேதம் ப்ராம்மணத்தில் பெயர் சூட்டப்பெற்றவராயும், பரமவைராக்யசாலியாயும், யஜுர்வேதசிக்ஷையைத் தோற்றுவித்தவராய், யாஜுஷர்களுக்கு அபரகர்ம ஸூத்ரத்தை இயற்றியவராயும், ஸாக்ஷாத் வால்மீகி சிஷ்யராயும், பரதனுக்கு விருந்தளித்த காலத்தில் ''आह्वये विश्वकर्माणमहं त्वष्टारमेवच। आतिथ्यस्य क्रिया हेतोः तत्र मे संविधायताम्'' என்று பல ச்லோகங்களில் சொன்னபடியே சீக்ஷா ஸ்வரத்துடன் அவரவர்கள் பெயரைச்சொல்லி அழைத்த மாத்ரத்திலே ப்ரம்மா முதலான ஸமஸ்த தேவ கந்தர்வ அப்ஸர கின்னரர் முதலானவர் களை வரவழைத்து கார்யம் செய்வித்துக் கொள்ளுகையாலும் 'आशुविंशति साहस्राः ब्रह्मणस्तु प्रसादजाः' என்கிறபடியே ப்ரம்மா முதலாகத் தங்கள் தங்கள் அப்ஸரஸுக்களை அனுப்பியதாகச் சொல்லுகையாலும், அசேதனங்களான சைத்ரரதம் நந்தனம் முதலிய தேவலோகத்து உத்யான வனங்களாலும்,

'बिल्वमार्द गिका आसन् शम्याग्राहाविभीतका:
अश्वत्थानर्तकाश्चासन् भरद्वाजस्य शासनात्'' என்கிறபடியே பில்வமரம், அரசமரம் முதலான மரங்களையும் கொடிகளையும் கொண்டு ம்ருதங்கம் முதலிய வாத்யங்களால் மிக்க விசித்ரமாயும், அத்யாஸ்சர்யமான தப: ப்ரபாவத்தை உடையவருமான பரத்வாஜமஹர்ஷியும்,

सम्प्राप्तश्च तदा सत्रं पुलस्त्योब्रह्मणस्सुत:
पितामहेन दत्तार्ध्य:कृतासन परिग्रह:

वैरे महति यद्वाक्यात् गुरोरस्याश्रितक्षमा
त्वया तस्मात्समस्तानि भवान् शास्त्राणिवेत्स्यसि
सन्ततेर्नममच्छेदः कृद्धेनापि यतः कृतः।
त्वया तस्मान्महाभाग ददाम्यन्यन्महद्वरम् ।।
पुराणसंहिताकर्ता भवान्वत्स भविष्यसि
देवता पारमार्थ्यञ्च यथावद्वेत्स्यसे भवान्
प्रवृत्तेच निवृत्तेच कर्मण्यस्तमलामतिः
मत्प्रसादाद्असन्दिग्धा तव वत्स भविष्यति ।।

என்கிற விஷ்ணுபுராணவசநத்தின்படியே ஸாக்ஷாத் ப்ரம்மாவின் பிள்ளையாய், வசிஷ்டரால் பூஜிக்கப்பட்டவராய், ஸ்ரீபராசரமஹர் ஷிக்கு எல்லாவிதமான சாஸ்த்ரங்களின் ஞானத்தையும், புராணமியற்றக் கூடிய சக்தியையும் அனைத்து ரிஷிகளுக்கும் கிடைத்தற்கரியதான பரப்ரம்மத்தைப்பற்றிய உண்மையான ஞானத்தையும், செய்வன தவிர்வனவாகிய தர்மங்களில் தெளிவான சந்தேஹமில்லாத ஞானத்தை உபதேசித்தவரும்,

''पुरा कृत युगे राम प्रजापतिसुतः प्रभः।
पुलस्त्यो नाम ब्रह्मर्षिः सक्षादिवपितामहः।
नानुकीर्त्या गुणास्तस्य धर्मतश्शीलतस्तथा।
प्रजापतेः पुत्र इति वक्तुं शक्यंतु नामतः''

என்கிறபடியே வால்மீகி பகவானுக்கும் சொல்லமுடியாத கல்யாணகுணங்களை உடையவருமான புலஸ்த்யப்ரம்மர்ஷியும்,

नारदो भगवानेति नृणामपनुदत्तमः என்கிறபடி நரசப்தத்தாலே சொல்லப்படுகின்ற மநுஷ்ய சம்பந்தி யாகையால் ''நாரம்'' என்று சொல்லப்பட்ட அஜ்ஞானத்தைத் தம்முடைய ஸேவையினாலே போக்கடிக்கின்றவராகையால் ''நாரதர்'' என்று ஜகத்ப்ரஸித்தி

பெற்ற பெயரையுடையவராய், பதினெண்புராணங்களிலும் ப்ரஸித்தராய், ப்ரம்மாவின் புத்ரராய், ஸ்ரீவால்மீகி பகவானுக்கு ஸ்ரீமத்ராமாயணத்தை உபதேசித்தவராய், ஸ்ரீமத் ராமாயணத்தின் முதல் ச்லோகத்தில் ''தபஸ்ஸ்வாத்யாயநிரதம்'' என்று கொண்டாடப்பட்டவரான நாரதபகவானும், இயற்கையாகவே பெரிதும் ப்ரஸித்தரான புலஸ்த்யரையும் ''புலஹாக்ரஜ:'' என்று கொண்டாடும்படியான தபஸ்வாத்யாய ஜ்ஞாநம் வைராக்யம் இவற்ருல் ப்ரஸித்தராயும் ப்ரம்மாவின் புதல்வருமான புலஹமஹர்ஷியும் ''पूर्वकाले महाभागो ये प्रजापतयोऽभवन्। तन्मेनिगदतस्सर्वानादित: श्रुणु राघव। कर्दम:प्रथमस्तेषां विक्रीतस्तदनन्तर: शेषश्च संश्रयश्चैव बहुपुत्रश्च वीर्यवान्। स्थाणुर्मरिचिरत्रिश्च क्रतुश्चैव महाबल:'' என்கிறபடியே ஸாக்ஷாத் ப்ரம்மாவின் புதல்வரான க்ரதுப்ரஜாபதியும், एकतस्त्वृषयस्सर्वे याज्ञवल्क्य स्तथैकत: என்கிறபடி ஸமஸ்த ரிஷிகளும் ஒரு தட்டிலும் தாம் ஒரு தட்டிலும நிற்கும்படியான ப்ரம்மவித்யை யில் சிறந்தவராகையாலே எல்லாரிஷிகளாலும் கௌரவிக்கப் படுபவராய், ஜநக மஹாராஜா ஒரு பொற்கிழி அமைத்து ஒருபெரிய வித்வத்ஸதஸ்ஸைக் கூட்டி இந்த மஹர்ஷிகளில் யார் சிறந்த ப்ரம்மவித்தோ அவர் இந்த வித்யா சுல்கமாகிய பொற்கிழியை பெறலாம் என்ற போது கோபத்துடன் வந்த ரிஷிகள் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் தக்க பதில் சொன்ன தோடு பின்னர் ஜனகமஹாராஜாவுக்கு ப்ரம்மோபதேசம் பண்ணினதாகவும் ப்ரஹதாரண்யகோபநிஷத்தில் கொண்டா டப்பட்ட வைபவம் உடையவருமான ஸ்ரீயாஜ்ஞ்யவல்க்ய பகவானும், प्रजापतिर्विराजमपश्यत्। तथा भूतञ्चभव्यञ्चासृजत। तामृषिभ्यस्ति रोदधात्। तां जमदग्निस्तपसाऽपश्यत्। तथावै स पृश्नीन् कामानसृजत என்றும், ''जमदग्नि: पुष्टिकाम:

चतूरात्रेणायजत'' என்றும் ரிஷிகளுக்குத் தெரியாமல் ப்ரம்மா மறைத்து வைத்த விராட்டை தமது தவத்தின் மஹிமையினுலே, ப்ரத்யக்ஷமாகப் பார்த்தவராகவும், சதுராத்ரம் என்ற யாகத்தை முதன்முதலில் அநுஷ்டித்தவராகவும், ப்ராணப்ரதிஷ்ட கோபதாந மந்த்ரபஞ்சகத்தில் உத்தரதிகிஷ்ட கோபதாந மந்திரத்தில் ''ப்ரஜாபதி க்ருஹீதயா த்வயா ச்ரோத்ரம் க்ருஹ்ணுமி'' என்றும் அதில் ப்ராஹ்மணத்தில் य उदिचीस्ताभिर्जमदग्निः என்றும் குறிப்பிடப்பட்டவரான ஸ்ரீபரசுராமனுக்குப் பிதாவுமான ஜமதக்னி மஹர்ஷியும்,

ஸாக்ஷாத் ப்ரம்மாவின் புதல்வராய் தேவர்களுக்குப் புரோஹிதரான ப்ருஹஸ்பதிக்குத் தகப்பனுராய், ते देवाः पशून्जित्वा सुवर्गं लोमायन् । तेऽमुष्मिन् लोके व्यतुक्ष्यन् ।ते देवाः पशून्जित्वा सुवर्गं लोकमायन् । तेऽमुष्मिन् लोके व्यक्षुध्यन् । ते ब्रुवन् अमुतः प्रदानं वा उपजिजीवेमिति ते सप्तहोतारं यज्ञं विधायायास्यन् । आंगीरसं प्राहिण्वन् । एतेना मुत्रकल्पयेति । तस्य वा इयंक्लु प्तिः । यदिदं किञ्च என்கிற ச்ருதியில் யாகம் முதலியவற்ருல் இந்த உலகத்தில் பசியைப் போக்கினதைக் கூறிய ப்ரம்மா முதலான தேவதைகள் प्रजापतिः यज्ञानसृजत अग्निहोत्रञ्च अग्निष्टोमञ्च முதலானவற்றில் சொன்னபடியே யஜ்ஞுங்களைப் படைத்து அவற்றை இந்த நாட்டில் அநுஷ்டிப்பதற்காக முதன்முதலாக அனுப்பப்பட்ட அங்கிரஸின் செயல் தான் அத்தனையும் என்று சொல்லுகையாலும், ''அங்கிரஸம் த்வா வ்ரதபதே வ்ரதேநா ததாமி'' என்று ''ப்ருதகாதாநமந்த்ர'' கரணத்தாலும், ''அங்கிரஸ இமே ஸத்ரமாஸதே। அங்கிரஸோவைஸத்ரமாஸத।'' என்றும் ''அங்கிரஸஸ் ஸுவர்கம் லோகம் யத: புரோடாஶ: கூர்மோபூத்வாநுப்ரஸர்பத், என்றும், அங்கிரஸஸ்ஸுவர்கம்

லோகம் யந்த: அப்ஸுதீக்ஷா தபஸி ப்ராவேசயந்'' என்றும் ''ஆதித்யஸ்சாங்கிரஸஸ்ச ஸுவர்க்கேலோகே ஸ்பர்தந்த' என்றும், ''ஆதித்ய: புண்யஸ்யவத்ஸ:, அத பவித்ராங்கிரஸ: என்றும் இப்படி வேதத்தில் கணக்கற்ற இடங்களில் உத்பத்தி புகழப்படுவதாலும், ப்ரம்மாவுக்கு சமானமானவரான அங்கிர: ப்ரஜாபதியும், ''उत्पत्तिं प्रलयञ्चैव भूतानामागतिंगतिम् ।वेत्ति विद्यामविद्याञ्च सवाच्यो भगवानिति என்கிறபடியே பூதங்களினுடைய உத்பத்தி ப்ரலயாSகதி கதி வித்யா வித்யைகளை உள்ளபடி அறிந்தமையால் பகவானுன ஶ்ரீசாலிஹோத்ரமஹர்ஷியும் ''ப்ராசீநசாலஔபமந்ய: என்று வைச்வாநர வித்யையில் ப்ரஸித்தரான உபமன்யு மஹர்ஷியும், எல்லாவிதமான சாந்தி கல்பங்களையும் இயற்றியவராயும், ஶ்ரீபாகவதத்திலும் பாரதம் முதலியவற்றிலும் மிகவும் ப்ரஸித்தரும், பகவத்பாகவதாக்ரேஸரருமான ஶ்ரீசௌனகபகவானும் இன்னும் தபஸ்ஸ்வாத்யாய ஜ்ஞாநபக்திரைாக்யாதிகளாலே ப்ரஸித்தர்களான கணக்கிடவொண்ணுத பற்பல மஹர்ஷிகளும் இந்த வீக்ஷாரண்யத்திலுள்ள பற்பல குகைகளில் வசிக்கின்றவர்களாய், ஹ்ருத்தாபநாசந தீர்த்தத்தில் ஸ்நாநம் பண்ணி ''பதிம் விச்வஸ்யாத்மேச்வரம்'' என்கிறபடியே ப்ரம்மா முதலான அனைத்து சேதநாசேதநங்களுக்கும் ஸ்வாமியான ஶ்ரீவீரராகவனை உபசரித்தல் திருமேனி தீண்டுதல், கண்ணுலே கண்டுகளித்தல், தோத்திரம் பண்ணுதல், ஆகிய திவ்ய உபசாரங்களாலே பூஜிப்பர்கள்.

गुहाश्चाप्यत्र दृश्यन्ते ऋषीणां नृपसत्तम ।।५४ ।।
यज्ञवाटाश्च दृश्यन्ते मुनीनां भावितात्मनाम्
अद्यापियाज्ञिकैर्वृक्षैः कुशैर्बहुभिरावृताः ।।५५ ।।

அனைத்து அரசர்களிலும் சிறந்தவரான சதாநீகரே! முற்காலத்தில் ரிஷிகள் இருந்த குகைகள் இன்றும் காணப்படுகின்றன. அது தவிர யாகத்திற்குரிய ஸாதநங்களான ஸ்ருக், ஸ்ருவம், க்ரஹ சமஸாபாத்திரம் முதலியன செய்வதற்குரிய அரசு, பலாசு, சமீ, ஆலமரம், விகங்கதம், காதிரம் முதலிய மரங்களும் தர்பங்களும்,

மிகுந்ததாய், தனக்குள்ளே எம்பெருமானைக் காண்பவர்களான ரிஷிகளுடைய யாகம் செய்வதற்குரிய ஸ்தலங்கள் இன்றும் காணப்படுகின்றன.

सार्वौषधी समा युक्तं सर्वर्तु फलपादपम्
कालधर्म समापन्नं वनं सर्व समृद्धिमत् ।।५६ ।।

அந்த வீக்ஷாரண்யம் என்கிற வநம், வாழை, துவரை, நெல் ஜாதிகள் பயறு உளுந்து முதலிய பயிர்களுக்கெல்லாம் இருப்பிடமாயும், ருதுக்களின் வ்யவஸ்தை இல்லாது எல்லா ருதுக்களிலும் பலிக்கின்ற மரங்களின் வகைகளை உடையதாயும் அந்தந்த காலங்களில் உள்ள மழை, காற்று, வெய்யில், பனி இவைகளை உடையதாயும், புல், விறகு, நீர், தானியங்கள், பழங்கள், தேன், சலாது முதலியவைகளும் ஸம்ருத்தியாய் இருந்தன.

असुरा दानवादैत्याः पुरादृष्ट्वा महद्वनम्
विविशुर्यज्ञहन्तारः ब्रह्मघ्ना मुनिघातकाः ।।५७ ।।
मायावेषं समास्थाय मायया हन्तुमुद्यताः
सर्वान् जघान देवेशः यज्ञघ्नान्नृपसत्तम ।।५८ ।।

விஷ்ணுபக்திபரோ தேவோ விபரீதஸ் ததாऽஸுர: என்கிறபடி பகவானிடத்தில் பக்தியில்லாதவர்களாய், பகவானை அண்டியிருக்கக்கூடிய தேவர்களுக்கு விரோதிகளாய், ''யஜ்ஞோஹிச்ரேஷ்ட தமம் கர்ம''என்கிறபடி பகவதாராதனம் பண்ணுகையாகிற சிறந்த யாகங்களை அழிப்பதையே தொழிலாகக் கொண்டவர்களாய், தாங்கள் காதாலே கேட்பதற்கு விரோதியான வேதத்தைக் கற்கக்கூடிய அந்தணர்களை ஹிம்ஸிப் பவர்களாய், அவ்வந்தணர்களைக் காட்டிலும், அசையாத த்யானத்தில் மூழ்கியிருப்பவர்களான ரிஷிகளை கொன்று தின்பவர்களாய், மின்மினிப்பூச்சிகளின் ஒளியைப் போலே பிறவியிலேயே பெற்ற அணிமா, திடீரென்று மறைதல் முதலான விசித்ரசக்தியினாலே இல்வலனையும் வாதாபியையும் போலே

மாயையினுலே அந்தணர் போன்று வேஷம் பூண்டு ரிஷிகளைக் கொல்ல எண்ணியவர்களான திதியின் பிள்ளைகளும், தனுவின் பிள்ளைகளும் இந்த வீக்ஷாரண்யத்தைத் தங்கள் ஆஹாரத்துக் கேற்ற இடமென்றெண்ணி உள்ளே புகுந்தார்கள். இப்படி அந்தணர்களையும், அவர்கள் செய்யும் யாகங்களையும் அழிக்கமுற்பட்ட மதுகைடபர்களைப்போன்ற அசுரர்களையெல் லாம் ஹே ஸஹஸ்ராநீகராஜாவே! எல்லாதேவர்களுக்கும் ராஜாவான ஸ்ரீவீரராகவன் கொன்றுவிட்டார்.

सहस्रानीक:

मघुकैटभयोर्युद्धं कथं समभवत्पुरा ।
विष्णोरत्र महाभाग वद विस्तरतो मुने ।।५९ ।।

மஹாபாக்யசாலியான ஸ்ரீமார்கண்டேயரே! முற்காலத்தில் இந்த வீக்ஷாரண்ய க்ஷேத்ரத்தில் மதுஸூதனனுன பகவானுக்கும் மது என்றும் கைடபன் என்றும் பெயருடைய இரண்டு அசுரர்களுக் கும் எவ்வாறு சண்டை நடந்ததோ அதை விரிவாக அருளிச் செய்யவேண்டும்.

मार्कण्डेय:

मधुकैटभयोर्युद्धं विष्णुना, प्रभविष्णुना
त्रैलोक्यभीषणं घोरं महाभूत विनाशनम् ।।६० ।।

மது என்றும் கைடபன் என்றும் பெயர்களுடைய இரண்டு அசுரர்களுக்கும் அளவற்ற பலமுள்ளவர்களாகையாலே அனைத்துலகுக்கும் அதிபரான விஷ்ணுவோடு நடந்த யுத்தம் மூன்று உலகுக்கும் அச்சத்தை விளைவிப்பதாயும் மிக உக்ரமாயும், பூமியெல்லாம் தூள்தூளாய்போகும்படியாயும், ஜலமெல்லாம் கலங்கிச் சிதறும்படியாயும், சந்திரன் சூர்யன் அக்னி நக்ஷத்ரம் முதலிய தேஜஸ்ஸுக்களெல்லாம் தலைகீழாய்ப்போரும்படியாயும், வாயுமாறுபட்ட கதியில் போகும்படியாயும், ஆகாயத்திலுள்ள மேகங்களெல்லாம் சிதறிப்

போகும்படியாயும், போர் உண்டாயிற்று.

वित्रस्ता विबुधा दैत्या राक्षसा मनुजादय:

न लेभिरेस्थितिं सर्वे कृत्याकृत्य विमोहिता: ।।६१ ।।

தேவதைகள், அசுரர்கள், ராக்ஷஸர்கள், மனுஷ்யர்கள் முதலாக எல்லாப்பிராணிகளும் ப்ரளயகாலத்தில் போலே அஞ்சினவர்களாய், தாங்கள் செய்வனவற்றையும் செய்யக்கூடாதவற்றையும் பிரித்துத் தெரிந்து கொள்ள இயலாதவர்களாய் மூடர்களாய் துயருற்றுப்போனார்கள்.

न च चार रविर्व्योम्नि नक्षत्राणि नरेजिरे

नववौश्वसनो लोके नजज्वाल हुनाशन: ।।६२ ।।

नस्वाध्याय वषट्कारा निवृत्ताश्चैव सत्क्रिया:।

निश्चेष्ट: प्राणिनस्सर्वे बभूवुर्भयविह्वला: ।।६३ ।।

ஸத்யலோகம் வரை நெடிதோங்கி ஓருருவினனாய் நடமாடும் மேருவையும், மந்தரத்தையும் போலே இருக்கின்ற மதுகைடபர்கள் கீழும் மேலும் கிளம்பி குதித்து விழுந்து கொக்கரிக்கும்போது சூரியன் உதயபர்வதத்திலிருந்தே பார்த்துக் கொண்டிருந்தானே தவிர ஆகாயத்தில் நுழையவில்லை நக்ஷத்திரங்கள் போனவிடம் தெரியாது. எப்போதும் ஸஞ்சரிக்கக் கூடிய வாயுவும் மலைக்குகையைவிட்டு அசையவேயில்லை. அக்னி பகவான் தன் வீட்டிற்குள்ளேயே ஒளிந்து கொண்டபடியால் உலகில் அக்னி ஜ்வலிப்பதில்லை. இப்படி ப்ரளயம் பட்டபாடு படும்போது வேதாத்யயநங்கள் ஏது? உயர்ந்த கர்மங்களான யாகங்களே உருவிழந்திருக்க ''ஆச்ராவய, அஸ்துச்ரௌஷட், யஜ, யேயஜாமஹே வௌஷட்'' முதலான யாகத்தில் உபயோகிக் கக்கூடிய கோஷங்கள் ஏது? எல்லாப் பிராணிகளும் பயத்தினால் வலுவிழந்து இட்டகாலிட்ட கைகளாய் மயங்கி விழுந்துவிட்டார்கள்.

संप्रवृत्ते महायुद्धे नजयापजयौ तदा

विजयस्त्वेकदा विष्णो: आसीद्बलवत: प्रभो: ।।६४ ।।

இன்னுருக்கு வெற்றி இன்னுருக்கு தோல்வி என்று சொல்லமுடியாதபடி அனைத்துலகும் அஞ்சும்படியான பெரும்போர் பல்லாயிரமாண்டுகள் நடந்தபின், மதுகைடபர்களையும் உள்புகுந்தபடி அபரிமிதமான பலத்தோடும் கூடிய விஷ்ணுவுக்கு ஒரு முறை வெற்றி உண்டாயிற்று. மதுகைடபர்களுக்கு தோல்வி உண்டாயிற்று.

ततो मधुरतिक्रुद्धो गदामुद्यम्यवेगवान्

जधान गरुडं भूयो युद्धाय समुपस्थितः ।।६५ ।।

அதன்பின் மது என்ற அஸுரன் சற்றே இளைப்பாறி தங்களுக்கு வந்த தோல்வியாலே மிகவும் கோபம் கொண்டு மிக்க வேகத்துடன் மீண்டும் போர்புரிய முற்பட்டவனாய் வந்து தன் கதையை மேலே ஓங்கி விஷ்ணுவைச் சுமந்து கொண்டிருக்கும் கருடனை அடித்தான்.

प्रहरं तु तं दृष्ट्वा राक्षसंभीमविक्रमं

आदिदेश महाचक्रं त्रैलोक्य दहनक्षमम् ।।६६ ।।

இப்படி மேல்விழுந்தடித்தவனையும், பயங்கரமான பராக்ரமம் உடையவனையும், பயங்கர உருவத்தாலே ராக்ஷஸன் என்னும்படியானவனுமான மதுவைக் கண்டு பெருமாள் மூன்று உலகையும் சாம்பலாக்கக் கூடிய ஜ்வாலா மாலையையுடைய தமது சக்ராயுதத்தை ப்ரயோகித்தருளினர்.

तद्दृष्ट्वा भयसन्त्रस्तौ वीर्यवन्तौ जगत्त्रये

समुद्रात् सरित श्शैलानन्विष्यान्विष्य सत्वरौ ।।६७ ।।

संस्थानमात्मरक्षार्थं अलब्ध्वा तौ जगत्त्रये

वीक्षारण्यमनुप्राप्तावात्मानमभिरक्षितुम् ।।६८ ।।

அந்த மதுகைடபர்கள் மூவுலகும் வியக்கத்தக்க வீர்யம் மிக்கவர்களாயிருந்தாலும், ப்ரளயகாலத்து முடிவில் எரிக்கக் கூடிய சூர்யனைக் காட்டிலும் கோடிமடங்கு ஒளிவீசக்கூடிய சக்ராயுதம் தஹித்துக்கொண்டு வருவதைக்கண்டு அஞ்சி

நடுங்கி ஏழுசமுத்ரங்களையும், எல்லா நதிகளையும், உலகிலுள்ள எல்லா மலைகளையும் ஆதரத்தோடு தேடித்தேடி மூன்று லோகத்திலும் தங்களுக்கு சக்ரபயமில்லாமலிருக்கும்படியான நல்ல இடம் காணக்கிடைக்காததால் முடிவில் தங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வீக்ஷாரண்யம் வந்து சேர்ந்தார்கள்.

तौवनान्तर्गतौज्ञात्वा राक्षसौमधुकैटभौ

जधान सहसाविष्णुः चक्रेणोभौमहाबलौ ।।६९ ।।

அப்படியே வீக்ஷாரண்யத்தில் புகுந்திருக்கிற மதுகைடபர்களைப் பெருமாள் தெரிந்து கொண்டு அக்கணத்திலேயே தமது சக்கரத்தினுல் இருவரையும் ஸம்ஹரித்துவிட்டார்.

रुधिरेण तयोः क्लिन्नामही सागरमेखला

नष्टमन्धं तम स्सद्यः शान्तो जगदुपप्लवः ।।७० ।।

ஸமுத்ரத்தை ஒட்டியாணமாகக் கொண்ட பூமி முழுதும் மதுகைடபர்களுடைய சரீர ரத்தத்தால் நனைக்கப்பட்டது. அடர்ந்த இருட்டும் ஸூர்யனது ஸஞ்சாரத்தினுலே அழிந்தது. இவ்வுலகுக்கு முன்பு உண்டாயிருந்த உபத்ரவமும் நீங்கிவிட்டது.

अन्यांश्चाप्य सुरांस्तत्र हतवान्मधुसूदनः

மதுகைடபர்களைக் கொன்ற பகவான் அந்த வீக்ஷாரண்யத்தில் ஒளிந்திருந்த பல அஸுரர்களையும் வதம் பண்ணி கரதூஷணுதிகளைக் கொன்று தண்டகாரண்யத்தில் ரிஷிகள் சுகமாக வசிக்கும்படி பண்ணினுப்போலே வீக்ஷாரண்யத்தையும் ரிஷிகளுக்கு சுகமாகவாழும்படி பண்ணினுர்.

श्रमापनयनार्थं तु भगवान्महतो महान् ।।७१ ।।

शालिहोत्रस्यच मुनेः आश्रमे तदनुज्ञया ।

अगाराभ्यन्तरे शेते भुजंगशयने तदा ।।७२ ।।

அப்போது அருவருக்கத்தக்க குணங்களுக்கு எதிர்த்தட்டான ஒப்பற்ற ஞானம், சக்தி, பலம், ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ்

இவற்றின் வடிவங்களேயும், ‘‘तवानन्त गुणस्यापि षडेव प्रथमे गुणा: । यैस्त्वयैव जगत्कुक्षौ अन्येप्यन्तर्निवेशिता:’’ என்கிறபடி கணக்கற்ற எல்லா கல்யாணகுணங்களேயும் தன்னகத்தே கொண்டிருக்கிற ஆறு குணங்களேயுடையவராயும், ‘‘பராத்பரம் யந்மஹதோ மஹாந்தம்’’ என்கிறபடியே ருத்ரஇந்த்ராதிகளுக்கும் பெரியவரான ப்ரம்மாவுக்கும், தன்னகத்தே கொண்டுள்ள ஒப்பற்ற ஸ்வருபரூபகுணவிபவஐச்வர்யங்களாலே, ‘‘அநாதி நிதநோ தாதா விதாதா தாதுருத்தம:’’ என்கிறபடியே உத்தமனை புருஷோத்தமன் மதுகைடபர்களேக் கொன்றதனல் ஏற்பட்ட சிரமம் தீர்வதற்காக ஸ்ரீசாலிஹோத்ர மஹாமுனியினுடைய ஆச்ரமத்திலே திருஉள்ளுக்குள்ளே சயனித்துக்கொள்ள நினேத்தமாத்ரத்தில் தயாராக நின்ற திருவநந்தாழ்வாகுகிற திருப்பள்ளிமெத்தையிலே, ‘‘வரதஸகல மேதத் ஸம்ச்ரிதார்த்தம் சகர்த்த’’ என்கிறபடியே தமது நித்யவிபூதி லீலாவிபூதி ஆகிய இரண்டுமே பக்தர்கட்கு அதீனமாகையினலே ஸ்ரீசாலிஹோத்ர மஹாமுனிவரிடம் ‘‘நாம் படுத்துக்கொள்ள இத்தனே இடம் கொடுக்கிறீரா’’ என்று கேட்டு அவர் அநுமதி பெற்றவராய், அனேத்துலகையும் ரக்ஷிப்பதிலேயே நோக்குடையவராய் நித்ராமுத்ரையைத் திருவுள்ளம்பற்றி அருளினர்.

सर्वश्रमापनोदाय सएषोद्यकृतश्रम:
अद्यापि दृश्यते राजन् प्रसन्न: पुरुषोत्तम: ।।७३ ।।

‘‘ஸவயஸஇவ யே நித்ய நிர்தோஷ கந்தா:’’ என்கிறபடி ஸமவயதுடைய தோழன்மார் போல்விளங்கிய அயர்வறும் அமரர்கள் குழுவில் கொழுஞ்சோதி உயரத்தொருத்தனை புருஷோத்தமன், சாலிஹோத்ரர் முதலிய மஹர்ஷிகளுக்கு ஏவல் கேட்பவராய்த் தோன்றி, ‘‘கருந்தடமுகில்வண்ணனேக் கடைக்கொண்டு கை தொழும் பக்தர்களிருந்த ஊரிலிருக்கும் மானிடர் எத்தவங்கள் செய்தார்கொலோ’’ என்கிறபடியே ஸ்ரீசாலிஹோத்ர பகவான் எழுந்தருளியிருக்கின்ற நாட்டிலுள்ள அனேத்து ஜனங்களுக்குமுண்டான எல்லா சிரமங்களேயும்

போக்கடிக்க எண்ணி படுக்கையெடுத்துவந்து, ராமகிருஷ்ணுத் யவதாரங்களில் அடுத்த கடும்பகைஞர்களுக்கு ஆற்றேனென்ருேடியும், दास्यमैश्वर्ययोगेन ज्ञातीनाञ्च करोम्यहम्। अर्धभोक्ताच भोगानां वाग्दुरुक्तानिचक्षमे என்றும், अवजानन्ति मां मूढाः मानुषीं तनुमाश्रितं என்றும் வருத்தப்பட்டபடிக்கு பலமடங்கு அதிகமாக நாஸ்திகர்களது அலக்ஷ்யம் காரணமாக அர்ச்சாரூபியாயும் சிரமப்பட்டு எல்லா ஜனங்களது ஊனக்கண்களாலும் காணத்தக்கவாறு நிற்கின்ருர். ஓ ஸஹஸ்ரார மஹாராஜனே! இப்படியுமொரு ஐச்வர்ய ஸ்வாதந்த்ர்யம் உண்டோ பாரும்.

महा ह्रदस्य पुलिनं सर्वभूतमनोरमे ।
निवासं रोचयामस श्रीमानम्बुजलोचनः ।।७४ ।।

पितेवत्वत्प्रेयान् जननि परिपूर्णागसिजने
हितस्रेतोवृत्या भवतिच कदाचित्कलुषधीः
किमेतन्निर्दोषः क इह जगतीति त्वमुचितैः
उपायैर्विस्मार्य स्वजनयसि माता तदसिनः ।।

என்கிறபடியே, புருஷகாரபூதையாயும், ''வேரிமாருத பூமேலிருப்பாள் விணைதீர்க்குமே'' என்கிறபடியே உபாயபூதை யாயும், ஓண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலா நிற்ப'' இவை முதலானவற்றின்படி அடையத்தக்கவளாயுமிருக்கிற பிராட்டி யாருடனே கூட ''தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ'' என்று ''கரியவாகிப்புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப்பெரியவாயகண்கள்'' என்றும் சொல்லுகிறபடியே ''கம்பீராம்பஸ்ஸமுத்பூத ஸும்ருஷ்ட நாள ரவிகரவிகஸித புண்டரீகதள அமல ஆயதலோசநஞன பரமபுருஷன், மநோஜ்ஞுத்வ சுசித்வம் முதலான குணங்களாலே காதல்

மிக்குடையவர்களுடையவும், ஸங்காரிகளுடையவும் இதயங்களை ஆகர்ஷித்துக்கொண்டு ஹ்ருத்தாபநாசநமாகிய பெரியமடுவின் மணற்குன்றில் நித்யவாசம் பண்ண ஆசைப்பட்டார்.

विष्णु पारिषदाह्येते स्वे स्वे कर्मव्यवस्थिता:

கருடன் மீதும், வேதத்திலும் பாற்கடலும் எம்பெருமான் எழுந்தருளியிருப்பதைக் காட்டிலும் ''ஹ்ருத்தாபநாசநம்'' என்கிற தாமரை மடுவின் கரைமேல் பேராசை கொண்டு நித்யவாஸமாய் எழுந்தருள விரும்பியதால் அயர்வறும் அமரர்களின் தலைவரான ஆதிசேஷன் கருடன், விஷ்வக்ஸேநர், முதலிய எல்லாரும் தொடர்ந்து அடிமை செய்பவர்களாய் வந்து வெண்கொற்றக்குடைபிடிப்பதும், சாமரங்கள் வீசுவதும், பாதுகையை சமர்ப்பிப்பதும், சிங்காசனம் அமைப்பதும், திருவிளக்கிடுவதும், மேல்கட்டிபிடிப்பதும், திருப்படிக்கம் பிடிப்பதும், அத்தவாளம் கொடுப்பதும், திருக்கண்ணடி பிடிப்பதும்,பருகும்தண்ணீர்க்குடம் கொண்டுவருவதும், திருமாலை தொடுப்பதும், தொடுத்தமாலையைப் பக்குவமாக சாத்துவதும், திருப்பரியட்டங்களை (வஸ்த்ரங்களை) மடித்து அழகுறச்சாத்துவதும், திருவிளக்கெடுப்பதும், தூபம் சமர்ப்பிப்பதும், கேசபாசத்தை அழகுபடுத்துவதும், திருவடிகள் வருடுவதும், விருதுகள் கூறுவதும், ஏதமில்தண்ணுமை எக்கம் மத்தளியாழ் குழல் வரி சங்கு முதலான வாத்தியங்கள் வாசிப்பதும், திருப்பல்லாண்டு பாடுவதும், செவிக்கினிய செஞ்சொற்கள் உரைப்பதும், சாத்துப்படி (சந்தனம்) அரைப்பதும் அதனைத் திருமேனியில் பூசுவதும், திருமடைப் பள்ளி கைங்கர்யம் செய்வதும், திருபல்லக்கு, தோளுக்கினியான் முதலானவை சுமப்பதும் இத்தகைய கைங்கர்யங்களைச் செய்தார்கள்.

ब्रह्माच तत्र देवेशं विधिनाऽपूजयत्हरिम् ।।७५ ।।

தேவும் எப்பொருளும் படைக்கப் பூவில் படைக்கப்

பெற்ற நான்முகனும், பரமசிவனும், இந்திரனும் ‘‘सर्वे देवा वासुदेवं भजन्ते’’ என்றும் சொல்லுகிறபடியே தங்களுக்குப் பட்டம் கட்டுவித்து விரோதிகளைப் போக்கியும் உதவிய பெருமாளை மாமலர் நீர் சுடர் தூபம் கொண்டு பூஜித்தார்கள்.

देवास्सर्वे च मुनयः ऋषयश्च तपोधनाः।

प्रत्येकञ्च तमर्चन्ति शास्त्र दृष्टेन कर्मणा ।।७६ ।।

यथा विभवलब्धेन द्रव्येण पुरुषोत्तमम् ।

அப்படித்தலைவர் நடத்தினபடியே தேவர்களெல்லாரும், பக்தியோக நிஷ்டர்களும், ஜ்ஞானயோக நிஷ்டர்களும், கர்மயோகநிஷ்டர்களுமான மஹர்ஷிகளும் வேதத்திலும் ஸ்ம்ருதியிலும் கண்ட முறைப்படி தத்தம் செல்வத்துக்குத் தக்கவாறு தேர்ந்தெடுத்த ஔபசாரிக ஸாம்ஸ்பர்சிக ஸாந்த்ருஷ்டிக அப்யவஹாரிகலோக த்ரவ்யங்களினாலே புருஷோத்தமனை பெருமாளை தனித்தனியாகவும் பூஜித்தார்கள்.

अर्ध्याचमनपाद्याद्यैः स्तोत्रैर्नानाविधैस्तुतम् ।।७७ ।।

तुष्टुवुःपुण्डरीकाक्षं यथा ज्ञानं द्विजोत्तमाः ।

‘‘அர்க்யாசமந பாத்யாத்யை:’’ என்கிறவிடத்தில் ‘‘பூஜயித்வா’’ என்ற சொல்லை வரவழைத்துக் கொள்ளவேண்டியது. ப்ரம்மா முதலானவர்களும் தேவர்களும் மஹர்ஷிகளும் பூஜித்தபடியே இந்நாட்டிலுள்ள சிறந்த பிராமணர்களும், அர்க்யம், பாத்யம் ஆசமநம் முதலியவற்றால் வேதபுருஷனாலும், பிரமன், சிவன், இந்திரன் முதலிய அனைவராலும் துதிக்கப்பட்டட புண்டரீகாக்ஷனைப் பூஜித்து தத்தம் ஞானத்திற்கேற்றவாறு பலவிதமான சொல்மாலைகளாலே வாயார வாழ்த்தினார்கள்.

सर्वे पारिषदास्तत्र स्वे स्वे कर्मण्यवस्थिताः ।।७८ ।।

हृत्तापनाशनतटे देवदेवं सि षे विरे ।

பகவத் கோஷ்டியை நடத்துபவர்களான ஆதிசேஷன் கருடன் முதலிய எல்லாரும் தத்தமக்கு அநாதிகாலமாக நியமிக்கப்பட்ட

கைங்கர்யங்களைச் செய்துவருமவர்களாய் ஹ்ருத்தாபநாசன மென்கிற பெரியமடுவின் கரையில் பரமபதத்திலுள்ள திருமாமணி மண்டபத்தைக் காட்டிலும் லீலாத்யுதிஸ்வாபா பிநயாதிகளாலே ஸ்வாநுபவபரர்களான நித்யஸூரிகளையும் மயக்கக் கூடிய திருஎவ்வுள் கிடந்தானை ஸேவித்து நின்றார்கள்.

शंखचक्रगदापद्म खड्गशस्त्राण्यशेषत: ।।७९ ।।

शान्तौतु गरुडानन्तौ विष्णु भूतान्यनेकश:

मधुकैटभहन्तारं परिवार्योपतस्थिरे ।।८० ।।

சங்கம் சக்ரம் கதை தாமரைப்பூ கத்தி இவை முதலான பகவானது ஆயுதங்களெல்லாமும் ''राममेव अभिपश्यन्त: नाभ्यहिंसन् परस्परं'' என்கிறபடியே, பெருமாளது திருமுகமலர்த்திக்காக விரோத பாவத்தை அடியோடு விட்டொழித்த அநந்த கருடர்களும் மேலும் எண்ணமுடியாத பகவானது பரிஜனங்களும், பரிசாரிகைகள் எல்லாரும் மதுகைடபர்களைக் கொன்று நாட்டை ரக்ஷித்த ஸ்ரீவீரராகவனைப் பத்துதிக்கிலும் சுற்றிக்கொண்டு தொண்டு செய்து வந்தார்கள்.

एकान्तमास्थितो देव एकान्तिभिरुपासित:

सेव्यमान: परिजनै: स्तूयमनोद्विजोत्तमै: ।।८१ ।।

अनन्तभोगशयने सुष्वापश्रमशान्तये ।

வேட்டையாடி வந்த அரசன் சைத்யோபசாரமுள்ள சந்திரமண்டலத்தில் குறைந்த தொண்டர்களுடன் இளைப்பாறு மாப்போலே ஏகாந்தமான திருஎவ்வுள் அறையில் ஈடுபாடு கொண்டவராய், மற்ற உபாயங்களையோ, பிற மந்திரங்களையோ, மற்ற தேவதைகளையோ, வேறுவிதமான பயன்களையோ, புறக்கணித்துவிட்டு எம்பெருமானையே பற்றி நிற்பவர்களான பரமைகாந்திகளாலே உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணனெம்பெருமானே! என்கிற படியே தாரகம், போஷகம், போக்யம் ஆகிய எல்லாம் எங்களுக்கு

நீரே என்று உபாஸிக்கப்படுகின்றவராயும், கைங்கர்யத்தையே பலமாக நினைத்திருக்கின்ற தொண்டர்களாலே உபசரிக்கப் படுகின்றவராயும், குடை, சாமரம் ஆகியவற்றை வீசுவதாகிற தொண்டிலே ஈடுபாடு கொண்டவர்களான ப்ராம்மணோத்தமர் களாலே ஸ்ரீபுருஷஸூக்தம், உத்தராநுவாகம், நாராயணாநு வாகம், ஸுவர்ணதர்மாநுவாகம் முதலிய நான்கு வேதமந்திரங் கள், ஸ்ரீஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் முதலியவற்றாலும்,

ऋषिं जुषामहे कृष्ण तृष्णा तत्वमिवोदितम्

सहस्रशाखां योऽद्राक्षीत् द्रामिडीं ब्रह्मसंहिताम्

என்றும் சொல்லுகிறபடியே மிக்கபெருமைவாய்ந்த தாம்ரபரணீ நதிக்கரையைச் சேர்ந்த நம்மாழ்வாரால் அருளப்பெற்றஸவீர்ய சாகா என்றும் சொல்லுகிறபடியே வேதசாகையின் பிரிவுகளா யும், श्रुतौच प्रकृतिपुरुष भोगप्रापकांशोनपत्थ्यः என்கிறபடியே மோக்ஷத்தை அடைய விரும்புமவர்களுக்கு உபயோகப்படாத அர்த்தங்களைக் கலந்து பேசுகின்ற ஸம்ஸ்க்ருத வேதம் போலல்லாமல் பரமாத்மாவின் ஸ்வரூபம், ரூபம், குணம், விபவம் இவற்றை மட்டிலும் விளக்கக்கூடியதாய் இருப்பதாலே பரமைகாந்திகளுடைய நாக்கிற்கும், செவிக்கும் தேன், பால், நெய், கன்னல், அமுதுபோலவும், முன்னல்யாழ்பயில்நூல் நரம்பின் முதிர் சுவையுமுள்ள திவ்யப்ரபந்தங்கள் தன்னாலே வாயார வாழ்த்தப்படுமவராயும், திருவநந்தாழ்வானாகிற திருப்பள்ளி மெத்தையிலே மதுகைடபர்களை வதம் பண்ணியத னாலுண்டான சிரமம் தீர்கைக்காக திருக்கண் வளர்ந்தருளுகிறீர் காணும் ஸஹஸ்ராநீகரே!

तं प्रणम्य प्रबुद्धश्चदिव्य भोगैर्मनोरमैः ।८२ ।।

सनत्कुमारो भगवान् अर्चयामास माधवम् ।

இப்படி கலங்காப்பெருநகரிலே 'सहस्रस्थूणे निर्मितेदृढ उग्रे देवानामधिदेव आस्ते' என்கிறபடியே திருமாமணி மண்டபத்திலே எழுந்தருளியிருந்த இருப்பை வெறுக்கும்

படியாய் ஸ்ரீகிம்க்ருஹ நகரத்தில் திருஎவ்வுள் பெருங்கோயிலில் அநந்தகருட விஷ்வக்ஸேநாதிகளான எல்லா நித்யஸூரிகளோ டும், அந்த நித்யஸூரிகளுக்கு ஸமமான பரமைகாந்திகளோடும் கலந்து எழுந்தருளியிருக்கையால் பெரும்புகழுடைய திருஎவ்வுள் பெருமலையை ஸேவித்து, திருப்பள்ளியெழுப்பி பள்ளியுணரும்போது உண்டான வடிவழகுக்குத் தோற்று ஸேவித்து, பெருமாள் திருவுள்ளமுகக்கும்படி பிரமனும் நாமகளும் தாமே பணிசெய்கிற தோட்டத்தில் அவர்கள் அனுமதிபெற்று பறித்த மருவும், தமனமும், செண்பகமும், பாதிரியும், இருவாட்சியும், கருமுகையும், புன்னையும் குருக்கத்தியும், மல்லிகையும், சேர்த்துக்கட்டிக் கொண்டு வந்த திருமாலையினுலும், விரஜாநதியிலிருந்து ரத்நமயமான குடங்களில் கொண்டுவந்த தீர்த்தங்களாலும், ஸ்ரீபரசுராமனும் அகஸ்த்யரும் பெருமாளுக்கென்று கொடுத்த சாத்துப்படி யாலும், மணம்மிக்க அகில்புகைகளாலும், உத்தரகுருக்களில் திவ்யவ்ருக்ஷங்கள் கொடுத்த பட்டாடைப் பல்கலன்களாலும், சூர்யன் கொடுத்த விளக்கினுலும், மதியோன் மதியோடமைத்து காமதேனுவின் பால் தயிர் நெய் இவற்றேடு கலந்து வாயுவின் மூலமாக அனுப்பிய திவ்யான்னத்தாலும், திக் பாலகர்கள், கந்தர்வர்கள், அப்ஸரஸுக்கள் கொண்டுவந்த குடை, சாமரம், பாட்டுவாத்யம் இவற்ருலும் அளவற்ற ஜ்ஞான சக்திகளைக் கொண்ட ஸ்ரீஸநத்குமாரபகவான் பெரியபிராட்டியாரோடு சேர்ந்து எழுந்தருளியிருக்கின்ற திருமேனிக்குத் தக்கபடி பூஜித்தார்.

सेव्यमानं श्रियापार्श्वे धरण्याच यशस्विनम् ।८३ ।।

दीप्यमानं तयोर्मध्येददृशुस्तं दिवौकस:.।

ஒருபக்கத்தில் பெரியபிராட்டியினுலும், மறுபக்கத்தில் பூமிபிராட்டியினுலும், அலங்கரிக்கப்பட்டவராயும், இவ்விரண்டு பிராட்டிமார்கள் நடுவில் ஒளிவீசி நின்றவராயும் 'ध्रुवासो अस्य कीरयो जनास:' என்றும், योजातमध्य महतो

महिब्रवात् । सेदुश्रवोभिः युज्यं चिदभ्यसत् । आस्यजानन्तो नामचिद्विवर्त्तन विष्णव उरुगायायदाशत्' என்றும் சொல்லுகிற படியே தன்னைப் பாடுவதில் ஈடுபட்டவர்களை பரமபுருஷார்த்தத் தை அடையுமவர்களாய் ஆக்குகின்ற புகழை உடையவனுமான அந்த ஸ்ரீவீரராகவனை தேவதைகள் ஸேவித்தார்கள்.

रूप संहननं लक्ष्मीं सौकुमार्यं सुवेषताम् । ददृशुर्विस्मिताकारा रामस्य वनवासिनः ।।என்கிறபடியே ஸ்ரீசக்ரவர்த்தித்திருமகன் வடிவழகை ஸேவித்த தண்டகாரண்யவாசிகளான ரிஷிகள் தத்தம் காரியங்களை மறந்து அக்காட்டிலுள்ள மரங்களைப்போலே அசையாது நின்றார்கள் என்றாப்போலே இச்சோத்தி அழகை, ''பெடையிரண்டை ஓர் அனமடைந்து பிரிந்திடாவகை பேசலாம், பெருகுமருவிகள் அருகுமருவிய பெரிய மணிவரை பயிலலாம், பிடியிரண்டொடு களபமொன்று பிணைந்த பேரழகோதலாம், பிரிவிலொளியொடு நிழலும் அருகுறும் இரவி இலகுதல் பரவலாம், கொடியிரண்டொடு விடவியொன்று குனிந்தவாறு குலாவலாம், குறைவில் சுருதியும் நினைவுமிலகிய தருமவருநிலையென்னலாம்'' என்று அநுஸந்தித்து தேவப்பதுமைகள் போல் நின்றார்கள்.

हेमकुम्भं समुद्धृत्य तोयं हृत्तापनाशने ।।८४ ।।
अभ्यषिञ्चन्परं देवं सिद्धाश्चान्ये महर्षयः ।

திருஎவ்வுள் கிடந்தான் ஸேவையைப் பெற்று ஸித்தி அடைந்த தேவாஜாதியரும், பெருமாளை ஸ்வாதீனமாக்கிக் கொண்ட ஹ்ருத்தாபநாசன தீர்த்தத்தின் வைபவம் என்னவோ என்று ஆலோசித்த மஹர்ஷிகளும், ஹ்ருத்தாபநாசனத்தில் தாமரை கல்ஹாரபுஷ்பம் கைரவி (அல்லி) இவற்றின் மகரந்தப்பொடி களால் வாசனை ஊட்டப்பெற்றதாயும், வெள்ளியைப்போலவும், ஸ்படிகத்தைப்போலவும், மிக்க புனிதமாயுள்ள தீர்த்தத்தைத் தங்கக்கலசங்களில் எடுத்து வந்து பரமாத்மா ஸ்ரீவீரராகவனுக்கு

''अभ्यषिञ्चन्नरव्याघ्रं प्रसन्नेन सुगन्धिना । सलिलेन सहस्राक्षं वसवो वासवं यथा'' என்கிறபடியே திருமஞ்ஜநம் செய்தார்கள்.

पद्मयोनिमुखास्सर्वे देवा दौतेय मानवा: ।௮௫ ।।

अर्चयामासुरव्यग्रा: शास्त्रदृष्ट्या जनार्दनम् ।

पद्मे दिव्येऽर्कसंकाशे नाभ्यामुत्पाद्यमामपि ।

प्रजापत्यं त्वया कर्म सर्वं मयिनिवेशितम् என்று ப்ரம்மாவின் வாயாலே சொன்னபடியே பெருமாளுடைய நாபீகமலத்திலுண்டான ப்ரம்மாவும் மற்றுமுள்ள தேவதைகளும், தீமைகள் நீங்கவும், நன்மைகள் கிடைப்பதற்குமாக வரம் கிடக்கின்ற அசுரர்களும், இந்நாட்டிலுள்ள எல்லா மநுஷ்யர்களும் தன்னை அண்டியவர்களது விரோதிகளைப் போக்குவதில் வல்லவரான ஸ்ரீவீரராகவனை ஸ்ரீபாஞ்சராத்ரம் முதலிய ஸ்ரீவைஷ்ணவ சாஸ்த்ரங்களில் சொன்னமுறையாலே ஆராதித்தார்கள்.

आराधितो जगन्नाथ: देवदेवस्सनातन: ।।௮௬ ।।

तानुवाच जगन्नाथ: त्रैलोक्य भयनाशन:

इमं देशमुपागम्य कृतस्नानादृढव्रता: ।।௮௭ ।।

मां द्रक्ष्यथाथ युष्माकं हृत्तापं नाशयाम्हं ।

இப்படி ப்ரம்மா தொடங்கி மநுஷ்யர்கள் வரை துன்புற்றவர்களெல்லாம் தத்தம் துன்பமெல்லாம் நீங்குவதற்கும், விருப்பங்கள் நிறைவேறுவதற்கும் ஆயிரத்தெட்டு உபசாரம் தொடங்கி நமநரூபக உபசார பர்யந்தமாயும், சற்றேவெல்லம் கலந்த அன்னம் கண்டருளப்பெற்றவராயும், எல்லாப் பிராணிகளாலும் வேண்டிக்கொள்ளப்படுமவராயும், ''தேவர்க்கும் தேவா ஓ'' என்கிறபடியே தேவர்களில் இன்னார் இனியார் என்ற வாசியில்லாமல் எல்லாராலும் நமஸ்கரிக்கப்படுகின்றவராயும் இப்படி அநுக்ரஹம் பெறுவது இன்ன சமயத்தில் தான் என்றில்லாமல் இப்போது போலவே எப்போதும்

துதிக்கப்படுமவராயும் உள்ள ஸர்வலோகேச்வரனை வீரராகவன், மூன்று உலகிலுமுள்ள எல்லா மநுஷ்யர்களு டைய எல்லாவித அச்சங்களையும் போக்க எண்ணியவராய் எல்லாரை யும் குளிர கடாக்ஷித்தருளி திருவாய்மலர்ந்தருளினர். ஆர்த்தர்க ளான மானிடர்களே! வாருங்கள். நீங்கள் செய்யவேண்டியது இவ்வளவுதான். என்னவென்றால் தன் அழகினாலே வைகுண்டத்தில் இருந்து ரஸித்தவனை என்னையும் கூடத்தூங்கும்படி பண்ணின இந்த திவ்யதேசத்திற்கு வாருங்கள். ஐரம்மதம் விரஜை போன்று முக்தாத்மாக்கள் மட்டிலும் அனுபவிக்கத்தக்கதாக இல்லாமல் ஸம்ஸாரிகள், முக்தர்கள், நித்யஸூரிகள் ஆகியவர்களுக்கும் நமக்கும் பரமபோக்யமான ஹ்ருத்தாபநாசந ஸரஸ்ஸினுடைய குளிர்ந்த நறுமணம்மிக்க இனிமையான தீர்த்தத்தில் ஸ்நானம் செய்ய வேண்டும். ''ததாம் யேதத் வ்ரதம் மம'' என்று சரணாகத ரக்ஷணம் ஒன்றையே நாம் வ்ரதமாக ஏற்றுக்கொண்டுள்ளாப் போலே நீங்களும் என் ஸேவை ஒன்றையே வ்ரதமாக ஏற்றுக்கொள்ள வேண்டும். இதற்கு மேல் ''मुखेनलोकार्तिहरस्मितेन परिस्फुरत्कुण्डलमण्डितेन। शोणायितेनाधर बिम्ब भासा प्रत्यर्हयन्तं सुनसेनसुभ्रुवा'' என்கிறபடியே பல லக்ஷக்கணக்கான வருஷங்களாக தொடர்ந்து யோகசமாதியிலுள்ளவர்களுக்குப் பலனை நாம் ஸங்கல்பித்துவைத்த நமது திருமுக மண்டலத்தையும், ஸ்ரீசாலிஹோத்ர மஹர்ஷியின் தலையில் வைத்த வலது திருக்கையையும், நாபீகமலத்தில் உள்ளவரான ப்ரம்மாவுக்கு ஓங்காரத்தின் உட்பொருளை உபதேசிக்கின்றதாய் ஞானமுத்திரையோடு கூடிய இடது திருக்கையையும் அனைத்து உலகுக்குக்கெல்லாம் தாயான ஸ்ரீமஹாலக்ஷ்மியின் திருவடியிலுள்ள செம்பஞ்சுக் குழம்பால் அடையாளம் செய்யப் பெற்றதாயும், கௌஸ்துபரத்நம், வநமாலை, துளசிமாலை ஆகியவற்றால் அலங்கரிக்கப்பெற்ற திருமார்பையும், புல்புள்ளி அணிந்த துப்பட்டிபோர்த்த இருப்பையும், இம்மைப்பயனையும் மறுமைப்பயனையும் அடைய விரும்புபவர்களெல்லாருக்கும்

ஸாதகமாக உபாஸிக்க நாம் கொடுத்த திருவடிகள் இரண்டை யும், இத்தகைய பெரியதிருமேனியைக் காணமுடியாதவர் களுக்காக பிராட்டிமார் இருவராலும், திருவாழி திருச்சங்கு கதை இவற்ருல் அலங்கரிக்கப்பெற்று நின்ற திருக்கோலமாக உள்ளதாயும், பெரியவேதத்தின் சுருக்கமான ஓங்காரம் போலே பெரியதிருமேனியின் சுருக்கமாக விளங்குகின்ற இரண்டாவது திருமேனியான உத்ஸவ மூர்த்தியையும், உங்கள் கண்களாலே ஆசைதீர ஸேவியுங்கள். நீங்கள் செய்யவேண்டியது இவ்வளவே. இவ்வளவும் செய்தீர்களாளுல் அதற்குமேல் உங்களது ஹ்ருதயங்களிலுள்ள எல்லாத் துன்பங்களேயும் நாம் போக்கடித்து விடுகிரேம். அது நம்முடைய வ்ரதம் என்று ஸஹஸ்ராநீகரே! பகவான் இவ்வளவும் அருளிச்செய்தார் காணும்.

श्रीमार्कण्डेय:

एवमुक्त्वा जगत्स्वामी तान्निर्याप्य ततोहरिः ।८८ ।।
युद्धायासपरिश्रान्तो योगनिद्रामुपाविशत् ।

தன்னே அண்டியவர்களது துன்பத்தைப் போக்குவதில் வல்லவராயும், ''பதிம்விச்வஸ்ய'' என்கிறபடியே உலகுக்கெல் லாம் ஒப்பற்ற தலேவரான பெருமாள், இவ்வாறு சோதிவாய் திறந்து சொன்னதோடன்றி, இன்னமும் நீங்கள் துன்புறுவது கண்டு எனக்குத் தூக்கமும் வருமோ? ஆளுலும் பெருந்தடிய ரான மதுகைடபர்களோடு போர் செய்தமையால் சற்றே தலேசாய்க்கப்பார்க்கிறேன். நீங்கள் போய்வருகின்றீர்களா? என்று எல்லாருக்கும் தணிவு சொல்லி அவர்களுக்கு விடைகொடுத் தனுப்பிவிட்டு அவர்கள் மெல்லமெல்லக் கால் நடந்துபோன பின்பு தமது பரிவாரங்களுக்கு போரிஞல் ஏற்பட்ட களேப்பைக் காட்டி திருக்கண்வளர்ந்தருளிஞர். இங்கு தூங்குகையாவது அந்தந்த சேதநர்களுக்கு அந்தந்த பலனேக் கொடுப்பதற்காக அவரவர்கள் செய்த கருமங்களின் விளேவுகளே ஆராய்கை. இதுவே இங்கு யோகம் எனப்படுகிறது.

पद्मकल्हार सौगन्धी सुगन्धो गन्धवाहनः ।।८९ ।।

क्षीरिणी लहरसंगशीतलश्च शनैर्ववौ।

பெருமாள் திருக்கண்வளர்ந்தருளும்போது கைங்கர்யம் செய்ய விரும்பிய வாயு ஸ்ரீஹ்ருத்தாபநாசன ஸரஸிலுள்ள உயர்ந்த தாமரை செங்கழுநீர் முதலான நீர்ப்பூக்களுடைய நல்ல நறுமணங்களாலே வாசனையூட்டப்பெற்றதாயும், வ்ருத்தக்ஷீர நதியின் பெருவெள்ளங்களை அணைத்துக்கொண்டுவருகையால் குளிர்ந்த குணம்பெற்று நிதானமாக மெள்ளமெள்ள வீசலானன்.

(सुगन्धस्य भवः सौगन्ध्यं। सौगन्ध्यमेव सौगन्धी । ञ चि ती आनुपूर्वी இத்யாதிகள் போலே व्यञन्तात् ङीप् कप्रत्यय विहीन सौगन्धिक சப்தமாக்கி ''கல்ஹாரஸௌகந்தி ஸுகந்த: என்று ஹ்ரஸ்வ பாடத்தில் ஸௌகந்திக கல்ஹார சப்தங்களுக்கு அர்த்த பேதமில்லாமல் வையர்த்யம்வரும்)

श्रीदेवीकरसंस्पर्श चन्दनागरु कुङ्कुमैः ।।९० ।।

संस्पर्शनैर्महाभोगैः तथाचाभ्यवहारिकैः ।

औपचारिक भोगश्च यथैवक्षीरसागरे ।।९१ ।।

''ஸ்ரீதேவீகரஸம்ஸ்பர்ச'' என்கிறவிடத்தில் ச்ரீ சப்தம் பெரியபிராட்டியாரைக் சொல்லுகிறது. தேவீ சப்தம் ''மஹீம் தேவீம்'' என்ருல் போல் பூமிப்பிராட்டியைச் சொல்லுகிறது. ''வடிவிணையில்லா மலர்மகள் மற்றைநிலமகள் பிடிக்கும் மெல்லடியை'' என்கிறபடியே சொல்லித்தாயிற்று. தாமரைப் பூவில் பரிமளம் வடிவுகொண்டு வந்தாப்போலே இராநின்ற பெரியபிராட்டியாருடையவும், பொறுமையே வடிவு எடுத்து வந்தாற்போலவும் உள்ள பூமிப்பிராட்டியாருடையவும், மெல்லிய திருக்கரங்களால் வருடப்பெற்ருர். ''ஸுகந்தமேதத் ராஜார்ஹம் ருசிரம்'' என்று கழித்தது போலன்றிக்கே ''ஆவயோர் காத்ர ஸத்ருசம் தீயதாம் அநுலேபநம்'' என்று உகந்தருளின படியே திருமேனிக்கொத்த சாத்துப்படிபூசப் பெற்றும், ''ததேதத்

நாநாஸம்ஹிதா பராமர்ச ஸமுத்த்ருதம் ஸாரம்'' என்று அறுதியிட்ட ஸாரோத்தாரத்தில் சந்தநாகருமிச்ரிதம் விதூமாங் கார ஸம்பவம் தூபம் ஶஸ்தம்'' என்று ஆசார்யர் அருளிச்செய்த படியே சீருற்ற அகில்புகையாலும், பெரியநீருண்ட மேகத்தின் நடுவே விளங்குகின்ற ஸந்த்யா காலத்துச் சிவப்புப்போலே தமது திருமேனிக்கு மிக்க சேர்த்தியான நல்ல குங்குமப்பூவின் விழுதினைப் பூசியதாலும் மேலும் இவைமுதலான பூச்சுக்களாகிய போகங்களாலும், அப்படியே நூறுதடாவில் வெண்ணெய், நூறுதடா நிறைந்த அக்காரஅடிசில், அப்பம் கலந்த சிற்றுண்டி, பாலில்கலந்த அக்காரம், கன்னலிலட்டுவத்தோடுசீடை, காரெள்ளி னுண்டை, நெய்யமர் இன்னடிசில், தயிர்பழம், சோறு என்றிவை முதலான உண்ணத்தக்க போகங்களினுலும், திருவெண் கொத்துக் குடை, திருவெண்சாமரம், வெள்ளித்தடி, தங்கத்தடி, கருடன் அனுமன் அமைந்த கொடிகள், நெய்விட்ட திருவிளக்கு கள் திருப்பந்தங்கள், நெடுவரைத்தோரணங்கள், ஏதமில் தண்ணுமை எக்கம் மத்தளி யாழ் குழல் கீதங்கள் பாடல், கானங்கள், வலம்புரி கலந்திசைத்தல் வேதநல்வாயர்களால் தெடர்ந்து தோத்திரம் சொல்லப்பெறுதல் இவை முதலான உபசாரங்களாலும், போகங்களினுலும் இன்னமுதக்கடல் பள்ளி தன்னில் போலவே இத்திருவெவ்வுள் பள்ளிதன்னிலும் ஆராதித்தார்கள். இவ்விடத்தில் ''ஆராதித்தார்கள்'' என்ற வினைச்சொல் வரவழைத்துக்கொள்ளவேண்டியது. திருஎவ்வுள் கிடந்தான் இளைப்பாறத் திருப்பள்ளியில் திருக்கண் வளர்ந்தருளியதாக அருளிச்செய்தீர். இளைப்பு என்பது ஒரு தாபமல்லவா? அது அவர்க்கும் உண்டென்ருல், தானே தாண்டுவதற்கு சக்தியற்றவன் பிறரை எப்படித் தாண்டுவிக்க முடியும் என்ற கேள்வி எழாதோ என்ருல் அதன் கருத்தை வெளியிடுகிருர்.

तापत्रय विहीनश्च स्वभावादेव माधव:

लोकतापत्रयहरे तापत्रय कथा कुत: ।।९२।।

तथापिलोके दृष्ट्वातु मायया तद्व्यपोहति ।

पश्यतां सर्वदेवानां ययौ वक्षस्थलं हरेः ।।९३ ।।

அநாதரே ஷஷ்டீ. பகவானைத் தவிர மற்ற தேவதைகளுடைய நிறைவின்மையையும், கருமங்களுக்குக் கட்டுப்பட்டவர்களாக இருத்தலையும் கண்டு அவர்களைப் புறக்கணித்துவிட்டு பெருமாளுக்குள்ள எல்லா நிறைவையும் கண்டு ஸ்ரீமஹாலக்ஷ்மீ அவருடைய திருமார்பையே அடைந்தாள் என்று பொருள். இப்படித் தாயார் ஆராய்ந்து ஆச்ரயித்த ஸ்ரீமாதவன், இயற்கையாகவே தாபத்ரயங்களுக்கு அப்பாற்பட்டவர். தன்னை அண்டியர்வகளுடைய தாபத்ரயங்களையும் போக்கடிக்கும் அவனுக்கு தாபத்ரயங்கள் எங்கிருந்து வரும்? உண்மைநிலை அப்படி இருந்தாலும் எந்தவிதமான காரணமுமின்றி தனக்கு அடிமைப்பட்டிருக்கும் இந்த உலகத்தை கடாக்ஷித்தருளி, அவ்வுலகத்தவரிடம் கைங்கர்யம் கொள்ளவேண்டுமென்ற எண்ணத்தால், தாம் தாபமுள்ளவர் போல ஏறிட்டுக்கொண்டு அவர்கள் செய்யும் உபசாரத்தாலே அதனைப்போக்கிக்கொள்கிறார். உலகில் நோயே இல்லாத ஒரு அரசன், மூன்று நான்கு வயதுள்ள தன் சிறுவனைத் தன் காலைக் கையைப் பிடிக்கச்சொல்கிறான். அவனும் அது செய்வதைக்கண்டு மகிழ்ந்து அச்சிறுவனை வாரியெடுத்தணைத்துக்கொள்வதைக் காண்கிறோமல்லவா. அப்படியே அனைத்துயிர்களுக்கும் தந்தையான பெருமாளும் ஒன்றைச் செய்யவிதித்து அதைச் சொன்னபடி செய்யக்கண்டு மகிழ்ந்து நம்மைச் சேர்த்துக்கொள்ளுவான். இதுதான் செய்வன தவிர்வனவற்றை அறிவுறுத்துவதாயிற்று. மாயா சப்தம் ஞானம் என்னும் பொருள் கொண்டதாகும். ''மாயா வயுநம் ஜ்ஞாநம்'' என்று வேதத்திற்கு நிகண்டு செய்த யாஸ்கர் கூறியதாகும்.

एवं सम्पूज्य विधिना शालोहोत्रो महामुनिः ।

जगाम वैष्णवं तेजस्त्वमप्येवं कुरूद्वह ।।९४।।

आराधयस्वदेवेशं हरिं नारायणं प्रभुम्।

பகவானிடத்திலேயே தம் சிந்தையைச் செலுத்துமவரான சாலிஹோத்ரமஹர்ஷி இவ்வாறு பாஞ்சராத்ர ஆகமத்தில்

(சாஸ்த்ரத்தில்) சொல்லப்பட்டமுறைப்படி பெருமாளை நன்கு ஆராதித்துவிட்டு, ச்ரிய:பதிக்கு அஸாதாரணமான ''ஜ்ஞாநாநந்த மயாலோகா:'' என்கிறபடியே ஸ்வயம்ப்ரகாசமாய் ஒளிமயமான பரமபதம் பெற்றார். குருவம்ச ச்ரேஷ்டரான ஸஹஸ்ராநீகரே! நீரும் இப்படியே அந்த புண்யாவர்த்த க்ஷேத்ரத்திற்குச் சென்று சாலிஹோத்ரமஹர்ஷியைப்போலே அங்கே நித்யவாஸம் பண்ணிக்கொண்டிரும். எல்லாதேவர்களையும் அடக்கி ஆள்பவராயும், அவர்களது விரோதிகளைப் போக்கித்தருவதையே தமக்கு நித்யமான தொழிலாக உடையவராயும், எல்லா சேதநர்களுக்கும் அவரவர் கர்மத்திற்குத் தக்கவாறு அந்தந்த பலன்களை கணக்கற்ற வகையில் அளிப்பவராயும், அனைத்துயிர்களுக்கும் ப்ராப்யனையும், ப்ராபகனையும், அனைத்துயிர்களையும் தன்னகத்தே கொண்டவராயும், ''ஸ்வாபிமத நித்ய நிரவத்ய அநுரூப ஸ்வரூபரூபகுணவிபவ ஐச்வர்யசாலியாயுமுள்ள ஸ்ரீவீரராகவன் வடிவத்திலே உள்ள ஸ்ரீமந்நாராயணனை நித்யமாக ஆராதிப்பீராக. உமக்கும் சாலிஹோத்ரமஹர்ஷியைப்போலவே எல்லாவிதமான பலன்களும் கிடைக்கும்.

पूज्यमाने जगन्नाथे मायया मधुसूदने
आगतो राक्षसः कश्चित् क्षुधार्तो वेगवांस्तथा ।९५ ।।

தமது வியக்கத்தக்க சக்தியினாலே மது என்ற அஸுரனைக் கொன்று தாம் உலகுக்கெல்லாம் தலைவன் என்பதை நிலைநிறுத்திக் கொண்ட திருவெவ்வுள் கிடந்தான், இதுவரை யில் சொன்னபடியே ப்ரம்மா தொடங்கி ஸகலசேதநர்களாலும் ஸ்ரீசாலிஹோத்ரமஹர்ஷியாலும், பூஜிக்கப்பட்டிருக்கும் காலத்தில் ஒரு ராக்ஷஸன் ஊன்மல்கிமோடுபருத்தவனாய் மேலும் பசியினாலே பீடிக்கப்பட்டவனாய் அதனால் மிகுந்த வேகத்துடன் எவ்வுளருகே வந்தான்.

तं दृष्ट्वा सतु सन्तुष्टः हन्तुं दूरादुपागतः
अनुभावं तु देवस्य तं समीक्ष्य प्रवेशने ।।९६ ।।

असमर्थस्तदा क्रुद्धो वाक्यमेतदुवाच ह ।

அந்த ராக்ஷஸன் திருப்பள்ளியில் கண்வளர்ந்தருளுகிற ஸ்ரீவீரராகவனைக் கண்டு இவன் எவனே ஒருமனிதன் படுக்கையிலே படுத்துத் தூங்குகிருன். கண்விழித்துக்கொண்டு விடுவானுனல் அப்பால் ஓடிவிடுவான். கைதிமிறுவான். அதனுல் நமக்கும் கொஞ்சம் வருத்தம் உண்டாகும். எனவே தூங்குகின்றபோதே இவனைப் பிடிப்பது மிகவும் எளிதாகும். இந்த நாள் நமக்கு நல்லவிடிவு. நமக்கு நல்ல இரை கைப்பட்டதே என்று ஸந்தோஷமுடையவனுய் தூரத்திலிருந்து கிட்டவந்தான். கிட்டிவந்தபின் ''அபித:பாவகோபமம்'' என்கிறபடியே தீமைசெய்யநினைப்பார்க்கு கிட்டவொண்ணுதபடியான பெருமாளுடைய தேஜஸ்ஸின் பெருமையையும், பகைவர்கள் குடல் குழம்பும்படியான திருவாழி முதலான ஆயுதவர்க்கங் களினுடைய கோரரூபத்தையும் நன்ருகப் பார்த்து நம்முடைய குலத்துக்கு அரசனுன இராவணனுரைத் தலையறுத்து உருட்டினவரது உருக்களையும், ஆயுதங்களையும் கேட்டிருக்கிறோமன்றே? இவரும் அவர்போலவே இருக்கின்ருர் என்று உள்ளம் நடுங்கி கிட்டிச்செல்ல வல்லமையில்லாமல் தனக்குள்ளே கோபத்தை வரவழைத்துக்கொண்டு சொன்னுன்

कस्त्वमत्र वसन्मर्त्यो मम दृष्टिपथं गतः ।।९७।।

पुनः प्राणैस्समायुक्तः निर्भयो जीवसिक्षणात् ।

त्वद्बलादन्यतो वात्वं धर्षितुं नैवशक्यसे ।।९८।।

भक्षणं मे क्षुधार्तस्य लब्धमेव न लभ्यते ।।

இங்கே இருக்கும் மனிதனுக நீயாரடா? என் கொடிய விழிகளுக்கு எதிரில் இருந்தும் பயமில்லாமல் இந்த க்ஷணம் வரை பிழைத்து நிற்கிருய். உனக்குப் பிறவியிலேயே உள்ள வல்லமையினுலோ, அல்லது மந்த்ரஸாமர்த்யம் முதலான வேறு வல்லமையினுலோ என்னுல் வசப்படுத்தமுடியாமல் நிற்கிருய். வெகுநாளாய் பட்டினியாய் திரிகின்ற எனக்கு தெய்வம்

கொடுத்த ஆகாரம் வாய்க்கு எட்டவில்லையே. இது என்ன ஆச்சர்யம்? என்று சொன்னான்.

तं समीक्ष्य सदुर्धर्षं राक्षसः पापदर्शनः ।।९९ ।।

गुहान्तरेषु संविष्टान् मुनीनन्यान्समाहितान् ।

अभिदुद्राव वेगेन क्षुधार्तो राक्षसाधमः ।।१०० ।।

பாவம் செய்வதிலேயே எப்போதும் நோக்குடையவனும், ராக்ஷஸர்களுக்குள்ளே அதமனும், பசியினாலே பீடிக்கப்பட்டவனுமிருக்கிற அந்த ராக்ஷஸன், படுக்கையிலுள்ள மனிதனைக் கைக்கடங்காதவனாக தீர்மானித்து அந்த வட்டாரத்திலுள்ள குகைகளில் வசிக்கின்ற ஸமாதிநிஷ்டர்களான வேறே சில மஹர்ஷிகளைக் குறித்து வேகமாகப்பாய்ந்தான்.

तदालय सकाशात्तु निर्गतोदिव्यपूरुषः ।

जधान राक्षसं तत्र मुद्गरेण तदाज्ञया ।।१०१ ।।

அப்போது பெருமாளுடைய ஆஜ்ஞையினாலே திருவெவ்வுள் திருக்கோயிலிலிருந்து ஒரு திவ்யபுருஷன் புறப்பட்டு அவ்விடத்திலேயே முத்கரம் என்ற ஆயுதத்தாலே ராக்ஷஸனைக் கொன்றுவிட்டான்.

यमदूतागतानेतुं राक्षसं पापचारिणम् ।

रुरोधताननतिक्रुद्धो विष्णुश्चायत वीक्षणः ।।१०२ ।।

பாவம் செய்வதையே ஸ்வபாவமாகக்கொண்ட அந்த ராக்ஷஸனை யமனருகில்கொண்டுசெல்ல யமதூதர்கள் வந்தனர். அந்த க்ஷேத்ரமெங்கும் விளாய்க்கொலைகொள்ளும்படி வெகுதூரத்திலும் செல்லும்படியான கடாக்ஷமுடைய பெருமாள் மிக்க சினங்கொண்டு அவர்களைத்தடுத்துவிட்டார்.

किङ्कराः

राक्षसोऽयमतिक्रूर : पापिनां पापकृत्तमः ।

यमस्य वशमासाद्य भोक्तुमर्हति यातनाम् ।।१०३ ।।

அவ்வளவில் யமகிங்கரர்கள் விண்ணப்பம் செய்தார்கள். வாரீர் ஸர்வலோகசரண்யரே! இந்த ராக்ஷஸன் அதிக்ரூரன். உலகிலுள்ள பாபிகளெல்லாம் ஒரு தட்டு என்ருல் இவன் ஒரு தட்டு என்னும்படி தேவரீராலும் கணக்கிடமுடியாத பாபங்களைச் செய்தவன். ஸர்வஜ்ஞரான தேவரீருக்குத் தெரியாதா? ஆகையால் ''வைவஸ்வதம் ஸங்கமநம் ஜநாநாம்'' என்றும், ''ஸர்வேசைதி வசம்யாந்தி யமஸ்ய பகவந்கில'' என்றும் ச்ருதி ஸ்ம்ருதிகளில் சொல்லுகிற பாவிகளையெல்லாம் அடக்கி ஆள்பவரான யமனுடைய ஆணைக்கு உட்பட்டு இவன் தன் பாபத்துக்குரிய நரகாநுபவத்தைப் பண்ணக்கடவன் அல்லவா ஸ்வாமீ! ஸ்ரீபகவானுவாச :— இப்படிச் சொன்ன யமகிங்கரர்களைக் குறித்துத் திருவெவ்வுள்கிடந்தபெருமாள் அருளிச்செய்கிருர்

पुण्यकृत्पापकृद्वापि जातोवाऽत्र मृतोपिवा ।
नलभेत महदुःखं यमलोक प्रवेशनम् ।१०४ ।।

வாரீர் யமகிங்கரர்களே! எப்போதும் புண்ணியம் செய்தவனு யிருந்தாலும், எப்போதும் பாவம் செய்தவனுயிருந்தாலும் நமக்கு அது ஸாதகமும் அல்ல, பாதகமும் அல்ல. அவ்விரண்டும் ஸாதகமாவதும், பாதகமாவதும் வேருேரிடத்தில் தான். இந்த க்ஷேத்ரந்தன்னிலோ என்ருல் அது சொல்லுகிருேம். இந்த க்ஷேத்ரத்தில் எந்த பிராணியாவது பிறந்திருந்தாலும், இறந்திருந்தாலும் அச்சேதநன் கொடியதுக்கத்தைத்தருகிற யமலோகம் புகாதவன் ஆகிருன்.

दुष्टे न्द्रियवशात्चित्तं नृणां यत्किल्बिषैर्वृतम् ।
तदन्तकाले संशुद्धिं याति नारायणालये ।।

என்றிவ்வாறு நாம் செய்திட்டதை தர்மத்தின் ஸூக்ஷ்மங்களறிந்தவனுன யமன் உங்களுக்குச் சொல்லித்தர வில்லையா? அப்படி கேட்டிருந்தால் இத்தகைய ஜந்துவைத் துன்புறுத்தமாட்டீர்களல்லவா? என்றிப்படி அருளிச்செய்தார். மீண்டும் யமதூதர்கள் திரும்பவும் விண்ணப்பித்தார்கள்

यमदूता:

प्रातिकूल्यंचरेद्यस्तु विष्णोरमित तेजस: ।
पर्यायेणानुभोक्तव्या नारकास्तेन यातना: ।।
नित्यवैरी जगद्योने रेषवैयमशासनात्

ஸர்வாத்மாக்களுக்கும் ஆத்மாவாய் அளவிடமுடியாத ப்ரபாவங்களையுடையவரான பெருமாளுக்கு திருவுள்ளம் வருந்தும்படி எந்த மனிதன் செய்கிருனே அவன் ஒரு யாதனையை அனுபவித்தபின் வேறொரு யாதனை என்றிப்படி முறையாய் நரகவேதனைகள் முற்றிலும் அனுபவித்தே தீரவேண்டும். இந்த ராக்ஷஸனே அனைத்து உலகுக்கும் காரணபூதராக விளங்கும் ஸ்வாமிக்கு நித்யவிராதியாயுள்ளான். ஆகையால் இவன் நரகயாதனைகளடங்க முறையாய் அனுபவித்தே தீரவேண்டும். இவன் அப்படி ஸ்வாமிக்குச் செய்தவிரோதத்தை சித்ரகுப்தன் நாள்வாரியாக எழுதின கணக்கு இதோ. இது போதாதென்ருல், ''तदनु निहिता जाग्रत्येते चतुर्दश साक्षिण:'' என்கிறபடியே பிராணிகள் செய்கின்ற புண்யபாபங்களைக் கண்காணிப்பதற்காக ஸ்வாமி ஏற்படுத்தின சந்திரன் சூர்யன் முதலான பதினுன்கு பேரும் இவ்விஷயத்தில் சாட்சிசொல்லத் தயாராயுள்ளார்கள். திருச்செவிசாத்தியருள வேணும். இப்படி பாபிகளை தாக்ஷிண்யப்பட்டு அடிக்கடி விடும்படியாளுல் எங்களுக்கு இந்தத் தொழிலேவேண்டாம். யமதர்மராஜருக்கும் அதிகாரம் வேண்டாம். அவருக்கும்கூட பதவி விலக அனுமதி அளிப்பீராக. இன்று முதல் யாரையாவது பார்த்துவைத்துக் கொள்ளலாம். அஜாமிளன் போன்ற போலிகள் எத்தனை பேரைவிட்டுவிட்டோம். இப்படி தண்டிக்கப்பட வேண்டியவர்களை தண்டிக்காமல் விட்டுவிட்டால் எவன் தான் பாவத்தைக் கண்டு அஞ்சுவான். இப்படி பாபமே புண்ணியமா கிறபட்சத்தில் புண்யம் பாபம் என்ற பிரிவுதான் எதற்கு? பத்து நாள் கழித்து நம்மைவிட்டுப் போகிற தொழில் இப்போதே

போஞல் என்ன? ஸ்வாமீ! உமக்கு ஒரு கும்பிடு. உமது தொழிலுக்கு ஒரு கும்பிடு என்று தீர்மானமாகக் கூறிவிட்டு கிங்கரர்கள் புறப்பட்டார்கள்.

இப்படிக்கூச்சல்போடுகிற யமகிங்கரர்களைக் கடாக்ஷித்து பெருமாள் புன்சிரிப்பு சிரித்து, இவர்களோடு நாம் எதிர் வழக்காடுவது நமக்குத் தகாது. ''வ்ருத்யாபரோக்ஷயாயுக்த:'' என்றன்ரே ராஜநீதியிருப்பது. துடுப்பிருக்க கையால் கொதிக்கும் சோற்றைக் கிளருவாருண்டோ? என்று நினைத்து இவர்களுக்குத் தக்கபதில் சொல்லுங்கள் என்று தமது பரிஜநங்களைப் புருவநெரிப்பால் ஏவியருள, அவர்கள் யமகிங்கரர்களைப் பார்த்துச் சொன்ஞர்கள்

श्रीभगवत्पारिषदा:

अस्तु पापसमाचारो नीचो धर्मपराङ्मुख: ।।१०६
एतत्क्षेत्रं समासाद्य भविता पुण्यकृत्तम:
पुण्यापुण्यनियन्तृत्वं यमस्य ह्युपलक्ष्यते ।।१०७ ।।
विष्णो: प्रभावात् तत्रैव यमाज्ञा नप्रवर्तते ।
पलायध्वमितो दूता: विहायैनं विशाचरम् ।।१०८ ।।

ஹே யம கிங்கரர்களே! உங்களது வாய்ச்சொல்லையும், சித்ரகுப்தன் கணக்கையும் சந்திரன் சூர்யன் முதலிய ஸாக்ஷிகளையும் ஏற்றுக்கொண்டோம். இந்த ராக்ஷஸன் செய்ததெல்லாம் பாபமே தவிர வேறுஇல்லை. தர்மத்தை ஒரு போதும் நினைத்தவனன்று. இவன் சரித்ரம் மிகக்கெட்டதுதான். இதெல்லாம் உண்மையே. இவன் இதற்கு முன்னம் இப்படிப் பட்டவன் தான். ஆஞலும் இந்த க்ஷேத்ரத்தில் மரணமடைந்து விட்டபடியால் உலகில் புண்யகர்மங்கள் செய்தவர்கள் எல்லாரிலும் காட்டிலும் மிகுந்த புண்ணியம் செய்தவன் ஆகிருன்'' என்ருர்கள் பரமனடியார்கள். அவர்கள் மீண்டும் கூறினர் ''எங்கள் ஸ்வாமியான தர்மராஜரிடத்தில் இவனைக் கொண்டுபோய்விட்டுவிடுகிரேம்'' என்று மீண்டும் முதலிகள்

சொன்னார்கள். உங்கள் ராஜாவுக்குப் புண்ணியபாபங்களைக் கணக்கிடுகிற அதிகாரம் உண்டு என்பது எங்களுக்குத் தெரியும். அவர் தொழில் அதுதான், ஆனாலும் எங்கள் பெருமாளுடைய ப்ரபாவத்தாலே இந்த க்ஷேத்ரத்தில் மட்டிலும் உங்கள் அரசனுடைய யமனுடைய ஆஜ்ஞை விலைச்செல்லாது. நீங்கள் உத்சர்க்க சாஸ்த்ரம் படித்தவர்களே தவிர அபவாதசாஸ்திரம் படித்தவர் களன்று. இனி மேலாவது அதை நல்ல ஸம்ப்ரதாயமாகக் கேட்டறியுங்கள். உங்கள் அரசனையும் கூட முடிவில் விசாரிக்கின்ற காலகாலனை விஷ்ணுவன்றோ இங்கே கண்வளர்ந்தருளுகிறார். இனி எதிர் வழக்காடுவீர்களானால் அவன்படவேண்டிய யாதனை உங்களுக்கு வரும். நீங்கள் ஏன் கொள்ளிக்கட்டையால் தலையைச்சொறிந்து கொள்கிறீர்கள்? யாருடைய ப்ரீத்யப்ரீதிகளோ புண்யபாபங்களோ அவரே சொல்லும் போது உங்களுக்கு ஏன் அதிகப்ராஜாபத்யம்? ஆகையால் பெருமாள் கண்ணெதிரே இந்த ராக்ஷஸன் உயிரை இங்கேயே விட்டு விட்டு ஓடிப்போய்விடுங்கள்

गतेषु तेषु याम्येषु विष्णु दूतास्तु तं भृशम् ।
हृत्तापनाशने तीर्थेसंस्नाप्य पुरुषाकृतिम् ।।१०९ ।।
विष्णोर्निवेदयामास राघवाय महात्मने ।

இவ்வாறு முதலிகளுடைய வார்த்தையைக் கேட்ட யமதூதர்கள் நாம் தப்பினால் போதும் என்று தங்கள் இருப்பிடம் சென்றனர். பின்னர் பகவதனுக்ரஹத்தாலே மனித உருவம் பெற்ற அந்த ராக்ஷஸனை விஷ்ணுதூதர்களான முதலிகள் எல்லாரும் சேர்ந்து குளிர்ச்சி மாதுர்யம் இவைநிறைந்ததாய் பரமபாவநமுமான ஹ்ருத்தாபநாசந தீர்த்தத்திலே நீராட்டி அலங்கரித்து ''ஸர்வலோகசரண்யாய ராகவாய மஹாத்மநே'' என்று விபீஷண சரணாகதி மந்த்ரத்தில் எடுத்த மஹாத்மாவான ராகவனாய் அவதரித்தவர் இவரேயாகையாலே சரணாகத ராக்ஷஸனை ஒருக்காலும் விடார் என்று நினைத்து அப்படி ஆர்த்தாபயதீக்ஷித ரான பெருமாளிடம் இதோ இவன் தான் அந்த ராக்ஷஸன். கதியற்றவனாய் திருவடிகளிலே விழுந்துள்ளான். ஸ்ரீராகவனாய்

அவதரித்தபோது ராவணன் தம்பியான ராக்ஷஸனுக்கு அபயப்ரதானம் பண்ணினாற்போலே இவனுக்கும் அடைக்கலம் தந்தருளவேணும். ஸர்வலோகசரண்யரன்றோ தேவரீர் என்று விண்ணப்பம் செய்தார்கள்.

ततः प्रसन्नदृष्ट्या तं समवेक्ष्य जनार्दनः ।११०।
सम्यक् ज्ञानं ददौ तस्मै राजन्नारायणस्तदा ।
सचनिष्कल्मषो भूत्वा स्मरन् जन्म शतान्यपि ।१११ ।।
अर्चयित्वा जगन्नाथं दिव्यज्ञानेन वैतदा ।
विवेश वैष्णवं तेजः ततः क्षेत्रानुभावतः ।।११२ ।।

அசுரஜனங்களை வெல்வதில் வல்லவரான ஸ்ரீமந்நாராயணன், எத்திசையும் உழன்றோடி இளைத்துவிழும் காகம் போல புகலிடமில்லாதவனாய் திருவடிகளிலே விழுந்துள்ள அந்த ராக்ஷஸனை ஆலங்கட்டி மழைபொழிந்தாற்போலே குளிர்ந்த பார்வையினாலே கடாக்ஷித்தருளி தம்முடைய ஸ்வரூப ரூப குண விபவ ஐச்வர்யங்களை உள்ளபடி அறியுமாறும், ராக்ஷஸ ஜாதியில் பிறந்தது முதலான எண்ணங்களோடு தன் ஸ்வரூபத்தை உள்ளபடி அறியும் வண்ணமும், தன் ஸ்வரூபத்துக்கு உகந்ததான பரமபுருஷார்த்தத்தை அறிந்து, அதற்கு ஸாதநமான பரமபக்தியில் இறங்கி, கடைத்தேறும்படி யாயும், தத்வஜ்ஞாத்தை அந்த சேதனனுக்கு அனுக்ரஹித்தார். அவ்வளவில் அந்த ராக்ஷஸ சேதநனும் உபாயவிரோதிகளை யெல்லாம் விலக்கிக்கொண்டு தனக்கு முற்காலத்தில் நேர்ந்த கணக்கில்லாத ஜன்மங்களையும், அவைகளில் தான் பட்ட துக்கங்களையும் நினைத்து ''முந்நீர் ஞாலம் படைத்த எம்முகில் வண்ணனே! அந்நாள் நீ தந்த ஆக்கையின் வழி உழல்வேன், வெந்நாள் நோய்வீய வினைகளை வேரறப்பாய்ந்து எந்நாள் யானுன்னை இனி வந்து கூடுவனே'' ''பழுதே பலபகலும் போயின என்று அஞ்சி அழுது'', ஸாத்விகர்கள் தரிப்பதற்கு உதவக்கூடிய பகவானாலே கொடுக்கப்பட்ட உண்மையான ஞானத்தாலே தோற்றுவிக்கப்பட்ட கர்மயோக ஞானயோகங்

களின் அங்கமான பக்தியோகத்தினுலே, அநாதி காலமாக பகவதாஜ்ஞையையும் மீறியதனுல் ஏற்பட்ட பகவானது நிக்ரஹத்தைப் பொறுப்பித்துக்கொண்டு, பகவதனுக்ரஹத் தாலே பகவானுக்குரியதாயும், ஸ்வயம் ப்ரகாசமாயுமுள்ள பரமபதத்தைப் பெற்ருன். ஸஹஸ்ராநீகரே! பகவானுக்கு விரோதமான காரியங்களைச் செய்வதையே ஸ்வபாவமாகக் கொண்ட ராக்ஷஸன், இப்படி உத்தமமான பதவியைப் பெற்ருன் என்ருல் அந்த க்ஷேத்ரத்தின் மஹிமை தான் என்னே!? ''मांहि पार्थव्यपाश्रित्य येऽपिस्युः पापयोनयः। स्त्रियो वैश्या स्तथाशूद्राः तेऽपि यान्ति परांगतिम्'' என்கிறபடியே மஹாபாபியான அந்த ராக்ஷஸ சேதனன் இத்தகைய பேற்றினைப் பெற்ருன். ''किंपुनः ब्राह्मणाः पुण्या भक्ता राजर्षयस्तथा'' என்கிறபடியே அந்த க்ஷேத்ரத்தில் நித்யவாஸிகளாய், பகவானுக்கு அனுகூலனுந் தன்மையிலேயே ஊன்றியிருப்பவர்களான ப்ராம்மணர்களுக் கும் பகவத் பக்தர்களான உம்மைப் போன்ற ராஜர்ஷிகளுக்கும் பலன் ஸித்திப்பதுபற்றி கேட்கவும் வேண்டுமோ?

अहञ्च देवदेवेशमर्चयामि दिनेदिने।

நானும் நாள்தோறும் तद्विष्णोः परमंपदं सदापश्यन्ति सूरयः ''यत्रर्षयः प्रथमजा ये पुराणाः।''என்கிறபடியே பகவானது ஸ்வரூபங்களை பகவானைப் போலவே கண்ணுலே கண்டுகொண்டு நிற்பவர்களாயும், ப்ரம்மா முதலான தேவதை களும் ''மனுஷ்யர்கள்'' என்னும்படியாக ஸநக விதி சிவாதி அசிந்த்ய ஸ்வரூப ஸ்வபாவைச்வர்யர்களான ஆதிசேஷன் முதலிய நித்யஸூரி களுக்குத் தலைவரான திருவெவ்வுள் கிடந்த பெருமாளையே ஆராதித்துக் கொண்டிருக்கிறேன்.

पुष्यमासे विशेषेण जाते चन्द्रार्कसंगमे ।।११३ ।।

हृत्तापनाशने स्नानं चान्द्रायणशताधिकम् ।
सोमसूर्यग्रहणयोः यः स्नायान्नियतव्रतः ।।११४।।
समर्चयित्वा देवेशं दैवपित्र्यकरस्तथा ।
विमुक्तास्सर्वपापेभ्यः विष्णुभक्तो भविष्यति ।।११५।।

ஹ்ருத்தாபநாசநதீர்த்தத்துக்குண்டான சிறப்பின் வைபவத்தைச் சொல்கிறேன். கேளும். ஸூர்யன் மகரராசியிலிருக்கும் போதான தை மாதத்தில் சிறப்பாக சந்திரனும் சேரும்படியான நாளான அமாவாஸ்யையில் ஹ்ருத்தாபநாசனத்தில் ஸ்நானம் செய்தால் நூறுசாந்த்ராயண வ்ரதமிருந்தால் கிட்டும் பலனைக் காட்டிலும் அதிகமான பலன் கிட்டும். எவனொருவன் நம்பிக்கை யில்லாமையால் பற்பல வ்ரதங்களை அனுஷ்டிப்பதைவிட்டு விட்டு இந்த திருவெவ்வுள் வ்ரதமே கடைத்தேற்று விக்கக்கூடியது என்று எண்ணிக்கொண்டு சந்த்ர ஸூர்யக்ரஹணங்களில் ஹ்ருத்தாபநாசநத்தில் ஸ்நாநம் செய்து தேவரிஷி பித்ரு தர்ப்பணங்களை அனுஷ்டித்து ஸ்ரீவீரராகவனை பழம் முதலிய நைவேத்ய வஸ்துக்களைக்கொண்டு ஆராதித்து ஸேவிக்கிறானோ அந்த மனிதன் அனைத்துப் பாபங்களினின்றும் விடுபட்டவனாய் மோக்ஷத்திற்கு ஸாதநமான பகவத் பக்தியைப் பெற்று கடைத்தேறுகிறான்.

यत्कामो नियतस्तत्र स्नायात्पर्वणिपर्वणि ।
तत्तत्सर्वमवाप्नोति देवदेव प्रसादतः ।।११६

எவனொருவன் நம்பிக்கைமிக்கவனாய் அமாவாஸ்யைகள் தோறும் என்னென்ன பலனை விரும்பி இந்த ஹ்ருத்தாபநாசநத்தில் ஸ்நாநம் பண்ணுகிறானோ அந்த புருஷன் தேவதேவனான திருஎவ்வுள் கிடந்தானுடைய அனுக்ரஹத்தினாலே நினைத்த பலன்களையெல்லாம் அடைவான்.

मार्कण्डेयः

श्रृणु राजन् पुरा वृत्तं रहस्यं च प्रभावत:
यस्य श्रवणमात्रेण हृदयं च प्रसीदति ।।११७।।

வாரீர் ஸஹஸ்ராநீகரே! இந்த ஹ்ருத்தாபநாசந தீர்த்தத்தினுடையவும், ஸ்ரீவீரராகவனுடையவும் ஸ்ரீவீக்ஷாரண் யத்தினுடையவும் ப்ரபாவத்தினுலே முற்காலத்திலுண்டான ரஹஸ்யமான சரித்ரத்தைக் கேளும். இந்த சரித்ரத்தைக் கேட்ட மாத்ரத்தினுலேயே

देवतातीर्थतपसां भारताद्यस्यनिश्चय:
ननास्तिक्यं भवेत्तस्य महामीमांसकैरपि

என்கிறபடியே மஹாபாரதத்தைக் கேட்பது போல எவ்வளவு நாஸ்திகனுயிருந்தாலும் அவன் மனம் தெளிந்து தேவதை தீர்த்தம் முதலிய விஷயத்தில் முழுநம்பிக்கை உடையவனுயிருப்பான்

देवानामसुराणाञ्च महद्युद्धमभूत्पुरा ।
निर्जिता विबुधास्सर्वे प्रदुद्रुवुरितस्तत:
कदाचित्संगतास्सर्वे ब्रह्माणं संप्रपूज्यते ।
तस्मै निवेदयामासुरसुराणां विचेष्टितम् ।।११९

முற்காலத்தில் ரஜோகுணம் மிக்கவர்களான தேவர்களுக்கும், ரஜோகுணதமோகுணங்கள் நிறைந்த அஸுரர்களுக்கும் பெரிய யுத்தம் உண்டாயிற்று. அந்த யுத்த ஸமயம் ரஜஸ் தமஸ்ஸுக்களுக்கு அனுகூலமானகாலமாகையாலே இந்த்ராதி ஸமஸ்த தேவதைகளும் அஸுரர்களிடம் தோல்வியுற்று நான்கு திசைகளிலும் சிதறி ஓடிப்போய்விட்டார்கள். இவ்வாறு சிதறி ஓடின தேவர்கள் எல்லாரும் ஒரு ஸமயம் ஒருகூட்டமாகச் சேர்ந்து ப்ரம்மாவின் இருப்பிடமாகிய ஸத்யலோகத்துக்குச் சென்று அங்கே கம்பீரமாக ஸிம்ஹாஸநத்தில் வீற்றிருந்த ப்ரம்மாவை நமஸ்காராதிகளால் பூஜித்து அவர் முன்பு அசுரர்கள் செய்த கொடுமைகளையெல்லாம் தெரிவித்தார்கள்.

तच्छ्रुत्वा विबुधैः प्रोक्तं ब्रह्मालोकपितामहः ।
चिन्तयित्वा विनिश्चित्य जगादत्रिदशेश्वरान् ।।१२० ।।

தங்களுக்கேற்ற துன்பம் காரணமாக முறையிட்ட தேவர்கள் மூலம் அரசுரர்களாலேற்பட்ட தோல்வியைக் கேட்டறிந்தவராய், ஸர்வலோகபித்ருக்களான தக்ஷகாச்யபாதிகளுக்குத் தந்தை ஆகையாலே உலகுக்கெல்லாம் பிதாமஹரான ப்ரம்மா அந்த விஷயத்தில் தாம் செய்யவேண்டியதைச் சிந்தித்து அனைவர்க்கும் பொதுவான அவர் தேவர்களுக்குச் செய்ய வேண்டியது இன்னது என்று தீர்மானித்துக்கொண்டு இந்திரன் முதலிய தேவர்களைப்பார்த்து இவ்வாறு சொன்னர்.

युष्माकं दानवानाञ्च वयं साधारणास्सदा ।
साह्यञ्च युवयोस्तत्र कर्तुं युक्तमतोहिनः ।।१२१ ।।

ஹே தேவர்களே! நாங்கள் எப்போதும் உங்களுக்கும் அஸுரர்களுக்கும் பொதுவாக இருக்கத்தக்கவர்கள். ஆகையால் தேவாஸுரவர்க்கத்தார் இருதிறத்தார்க்கும் உதவி செய்வதன்றே எங்களுக்குத்தக்கது.

विजयोपायमधुना यष्माकं करवाण्यहम् ।
भगवन्तं समासाद्य विष्णुं सर्व वरप्रदम् ।।१२२ ।।
यूयं वयं जगत्सर्वं मुनयश्च तपोधनाः ।
पृच्छामस्सकलं तस्माद्गच्छ्ध्वं हरिमञ्जसा ।।१२३ ।।

அப்படியிருந்தாலும் உங்களுக்கு வெற்றியை உண்டாக்கித்தர வல்ல உபாயத்தை நான் செய்கிறேன். உலகமெங்கும் நீக்கமற நிறைந்திருப்பவராய், அனைத்து வரங்களையும் தரவல்லவராய், ஞானம் சக்தி முதலான எல்லாவிதமான கல்யாணகுணங்களும் நிறைந்தவரான புருஷோத்தமனை துயருற்ற நீங்களும் மத்யஸ்தர்களான நாங்களும், உங்கள் கைபார்த்து நிற்கக்கூடிய உலகிலுள்ள ப்ராணிவர்க்கங்களும் ஆகிய நாமெல்லாரும் ஒருபெருங்கூட்டமாகச் சென்று அஸுரர்கள் செய்த

கொடுமைகளையெல்லாம் முறையிடுவோம். நீங்கள் முன்னதாக விரைவில் அடியார்களது விரோதியைப் போக்குவதில் வல்லவரான பெருமாளைப் பணியச்செல்லுங்கள்.

श्वेतद्वीपे जगन्नाथो दुर्दर्शः पुरुषोऽञ्जसा ।
अल्पायासेन सान्निध्यं देवदेवप्रसादनम् ।।१२४ ।।
वीक्षारण्ये जगन्नाथः सर्वभूतसुहृत् परः ।
दयार्थं सर्वभूतानामद्यापि परिदृश्यते ।।१२५ ।।
अनन्तभोगशयने शेतेऽयं मधुसूदनः ।
तं यजध्वमतिक्षिप्रं प्रदास्यति सवोहितम् ।।१२६ ।।
तस्मिन् प्रसन्ने देवेशे किमलभ्यं जगत्त्रये ।

ச்வேதத்வீபத்திற்குச் சென்றேமானல் ஸர்வலோகசரண்யனை பரமபுருஷன் சீக்ரத்தில் ப்ரத்யக்ஷமாகமாட்டான். அவ்விடத்தில் சிறுமுயற்சியாலே ஸ்வாமியின் ஸேவையும் அனுக்ரஹமும் கிடைக்காது. ஜம்பூத்வீபத்தில் பாரதவர்ஷத்தில் பரதகண்டத் தில் உள்ள வீக்ஷாரண்யத்தில் ''ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்'' என்கிறபடி ஸர்வபூதஸுஹ்ருத்தாயும், எல்லாரது எண்ணங்களை யும் நிறைவேற்றித்தருவதால் பரன் என்று அழைக்கப்படுபவரா யும், வெவ்வேறு பலன்களை விரும்பக்கூடிய அனைத்து மக்களாலும் அந்தந்த பலன்களுக்காக வேண்டிக்கொள்ளப் படுகிறபடியால் ஜகத்துக்கெல்லாம் தலைவனை பெருமாள் எல்லாமக்களுக்கும் க்ருபை பண்ணுவதற்காக எல்லா ஜனங்களு டைய கண்ணுக்கும் காணலாம்படியுள்ளார். முற்காலத்தில் மதுகைடபவதம் பண்ணியமையால் ஏற்பட்ட களைப்பு நீங்குவதற்காக திருவநந்தாழ்வான் திருமேனியாகிற திருப்பள்ளி மெத்தையிலே கண்வளர்ந்தருளுகிறார். அப்படி வீக்ஷாரண்யத் தில் விளங்குகின்ற ஸர்வஸுலபனை ஸ்ரீவீரராகவனை நீங்கள் சென்று ஆராதியுங்கள். அவ்வாறு ஆராதித்தீர்களானல் மிகவிரைவிலே அந்த ஸ்வாமி க்ருபை பண்ணுவார். ஸகலதேவதைகளுக்கும் எனக்கும் பதவி அளித்தவரான அந்த

ஸ்வாமி ப்ரஸந்நராகிவிட் டாராஞல் மூவுலகிலும் கிடைக்காதது எது?

परिगृह्यास्य वचनं शिरोभिस्त्रिदिवौकसः ।१२७ ।।
वीक्षारण्य मनुप्राप्य स्नात्वा हृत्तापनाशने ।
विजयायतनं प्राप्य प्रणम्य पुरुषोत्तमम् ।१२८ ।।
प्रत्यक्षं ददृशुस्सर्वे देवदेवं सनातनम् ।
भक्त्या प्रणम्य देवेशं अर्चयामासुरव्ययम् ।१२९ ।।

இப்படி பகவானது நாபீகமலத்தில் தோன்றிய ப்ரம்மா அருளிய நல்வார்த்தையைத் தலேயால் வணங்கி ஏற்றுக்கொண்டு எல்லாத் தேவர்களும் ஸ்ரீவீக்ஷாரண்யத்திற்குச் சென்று ஸ்ரீஹ்ருத்தாபநாசநதீர்த்தத்தில் ஸ்நாநம் பண்ணி விஜயகோடி விமானத்தினருகே சென்று, எல்லாதேவதைகளாலும் வணங்கப்படுகிறவராயும், கணக்கற்ற ப்ரம்மாக்களின் காலங்களிலும் இவ்வாறே எல்லாவிதமான பலன்களேயும் தருமவருமான புருஷோத்தமனே எல்லாஜீவன்களும் தத்தம் ஊனக்கண்ஞல் காண்கிறபடியே தாங்களும் அநாயாஸமாக கண்ஞரக்கண்டு பக்தியோடு ஸாஷ்டாங்கமாக வணங்கி, ''கொள்ளக்குறையிலன்'' என்கிறபடியே முக்காலத்திலுமுள்ள எல்லாபிராணிகளுக்கும் விரும்பியவற்றையெல்லாம் நாலுதிருக்கைகளாலும், வாரி வழங்கிஞலும் ஒன்றும் செய்யப் பெருதவராக எண்ணங்கொண்ட தேவதாஸார்வபௌம ரான ஸ்ரீவீரராகவனே எல்லாவிதமான போகங்களாலும் ஆராதித்தார்கள்.

## इति श्रीमार्कण्डेयपुराणे क्षेत्रकाण्डे वीक्षारण्यक्षेत्रमाहात्म्ये सव्याख्याने एकशततमोऽध्यायः

**श्रीलक्ष्मीनृसिंहपरब्रह्मणे नमः**



## श्रीवीक्षारण्यक्षेत्रमाहात्म्ये द्वितीयोऽध्यायः

तं दृष्ट्वा पुण्डरीकक्षमभीष्ट फलदायिनम् ।
प्रणिपद्य समभ्यर्च्यतुष्टुवुः हृष्टमानसाः ।।१।।

''तस्य यथाकप्यासं पुण्डरीकमेवमक्षिणी'' என்கிறபடி गम्भीरांभस्समुद्भूत सुमृष्टनाल रविकर विकसित पुण्डरीकदलामलायतलोचननாயிருக்கிறபடியாலே, ''ஸர்வலாபாயகேசவ:'' என்கிறபடியே ஸகலபலன்களையும் தரக்கூடியவனை ச்ரியபதிதானே என்பதை வெளிப்படுத்தி நிற்கிற திருஎவ்வுள்கிடந்தானை ப்ரணமபூர்வகமாக ஆராதித்து, अद्य(मे) नस्सफलं जन्म सुप्रभाताच नोनिशा என்று தங்களை தன்யர்களாக நினைத்து பேராநந்தம் அடைந்த தேவர்கள் எல்லாரும் ஸ்தோத்ரம் பண்ணஆரம்பித்தார்கள்.

देवाः

ओंनमः परमार्थाय परायपरमात्मने
विश्वेश्वराय विश्वाय विश्वाधाराय ते नमः ।।२ ।।
परावररूपायपुरुषाय अक्षरात्मने ।
सत्यज्ञानपरानन्दकल्याणगुणमूर्तये।।३।।

பரமசப்தம் ''பரோமாயஸ்மாத்'' என்று விளக்கமாகையாலே அர்த்த சப்தம் ப்ரயோஜநபரமாகையாலே தன்னைக்காட்டிலும் வேறுபட்டு அதிசயித்த புருஷார்த்தமில்லாத புருஷார்த்த

ஸ்வரூபனானவர் பொருட்டு என்றபடி. சுகமல்லது புருஷார்த்தமாகமாட்டாதாகையால் நிரதிசய ஆநந்தஸ்வரூபன் பொருட்டு என்றபடி. அல்லது அர்த்த சப்தம் வஸ்துபரம். ஸ்வரூபரூபகுணவிபூதி முதலானவற்றால் எல்லா வஸ்துக்களை யும் விஞ்சியவராய், தனக்கு மேம்பட்ட வியக்கத்தக்க வஸ்து வேறு ஏதுமில்லாதவராயுமுள்ள வஸ்துவானவர் பொருட்டு என்று பொருள். மேலும் 'ரு' கதௌ என்கிற தாதுவிலே உண்டான அர்த்தசப்தம், புத்தி என்னும் பொருளதாய் அறியத்தக்கது என்னும் பொருளை உடையதான போது நாராயணம் மஹாஜ்ஞேயம் என்கிறபடியே பக்தி ப்ரபத்தி ரூபமானதன் ஞானத்தினாலே எல்லா அஜ்ஞானத்தையும் போக்குவதாயும், எல்லாப்பலன்களுக்கும் மேம்பட்ட பலனைத் தருவதாயும் இருக்கின்ற அறியத்தக்க வஸ்துவானவர் பொருட்டு என்று சொல்லப்பட்டது. இப்படி மோக்ஷார்த்த ஜ்ஞேயத்வம் சொல்வதனாலே ''காரணம் து த்யேய:'' என்கிறபடியே அத்தோடு துவக்கின நிகிலஜகதபின்னநிமித்த உபாதானத்வரூப காரணத்வமும் ஸித்தித்தது. அல்லது அர்த்த சப்தம் அபிதேயபரம். சொல்லத்தக்கவைகளில் ச்ரேஷ்டரானவர் பொருட்டு என்றபடி. ''यो जातमस्य महतोमहिब्रुवान्। सेदुश्रवोभिर्युज्यं चिदप्यसत्'' என்றும், ''आस्य जानन्तो नामचित् विवर्तन'' என்றும், ''ध्रुवासोअस्य कीरयो जनासः'' என்றும், ''பொங்கேழ் புகழ்கள் வாயவாயென்றும்'', ''வாய் அவனையல்லது வாழ்த்தாது'' என்றும், ''நாரணன் தம்மன்னை நரகம்புகாள்'' என்றும் சொல்லுகிறபடியே தன்னைப் புகழ்ந்தவனு டைய ஸகல ஸாம்ஸாரிக துக்கங்களையும் போக்கடித்து அவனை நித்யஸூரிகளில் ஒருகோவையாகச் செய்கின்றவர் பொருட்டு என்று தீர்மானமாயிற்று. அல்லது அர்த்த சப்தம் தந (பணம்) பரம். சிறந்த செல்வமானவர் பொருட்டு என்று பொருள். பணம் சுகத்திலும் வேறுபட்டது. ஆதலால் ஸ்வயம் பலம் ஆகாதே யாகிலும், பரம்பரையா ஸுகஸாதநமாகையால் ஏற்றுக்கொள்ளத் தக்கதாயிற்று. அப்படியே, ''धनं मदीयं तव पादपङ्कजं'' ''अस्ति

मे हस्तिशैलाग्रे वस्तु पैतामहंधनम्'' என்றும் சொல்லுகிறபடியே ஸகலபலஸாதந பூதரானவர் பொருட்டு என்று அர்த்தம். இதனாலே த்ரிவர்க்க அபவர்க்கங்கள் எல்லாவற்றுக்கும் உபாயபூதர் என்னதாயிற்று. अहं हि सर्वयज्ञानां भोक्ताच प्रभुरेवच என்கிறபடியே ஸர்வ தர்ம ஸமாராத்யத்வம் ஸித்தித்தது. पराय – ஸ்வரூபத்தாலும், ஸ்வபாவத்தாலும், குணத்தாலும், விபூதியினாலும் ஸர்வசேதநர்களைக் காட்டிலும் உத்தமாரானவர் பொருட்டு என்றபடி. ''பர: பராணாம் பரம:'' என்றும் ''வரன் முதலாயவை முழுதுண்ட பரபரன்'' என்றும் சொல்லுகிறபடியே ப்ரம்மா முதலானவர்களைக் காட்டிலும் வேறுபட்டவர் என்பது புலனாயிற்று. परमात्मने தன்னைத்தவிரமற்ற எல்லா சேதநாசேதநங்களுக்கும் ஆத்மாவானவர் என்று அர்த்தம். அங்கு பரமத்வமாவது ஸர்வாத்மாக்களுக்கும் ஆத்மாவான தனக்கு வேறொரு ஆத்மா இல்லாமை.

ममाश्रयो नकश्चित्तु सर्वेषां आश्रयोऽह्यहम् ''तस्यै ष एव शारीर आत्मा'' இத்யாதிகளில் சொன்னபடியே ''அநந்யாத்மத்வம்'' பலிதமாயிற்று. இத்தகையவராய் ஓங்காரவாச்யருமான தேவரீருக்கு நமஸ்காரம் செய்கின்றோம் என்று அந்வயம். **அல்லது** அகார உகார மகார ரூப பதத்ரயாத்மகமான ப்ரணவத்தில் அகார வாச்யரான ஜகத்காரணபூதரான தேவரீர் பொருட்டே மகாரவாச்யனான நான் நிரூபாதிகசேஷபூதன் என்றபடி. ''நம:'' என்றது 'ந மம' என்கிறாப்போலே நான் எனக்கு சேஷபூதன் அல்லன் என்று சொல்லுகின்றது. ''இதம் இந்த்ராய ந மம'' என்கிறாப்போலே யுள்ளது. இங்கு தேவர்கள் கூட்டமாக துதித்தார்களேயானாலும் தனித்தனியே இவ்வாறு துதிக்கிறார்கள். ஆகையால் ப்ரணவத்தில் மூன்றாவது எழுத்திலும், நம: என்கிறவிடத்தில் 'ம:' என்ற பதத்திலும் ஏகவசநம் உபபந்ந மாயிற்று. இந்த அர்த்தத்தின் விவரணம் மேலே முழுவதும் **விச்வேச்வராய** – ஸர்வலோகநியந்தாவானவர் என்றபடி.

**விச்வாய** – மநு மாந்தாதா முதலானவர்கள் போலே அன்று தேவரீர் உலகத்தை ஆள்வது. பின்னேயோ என்னில்? அந்த விச்வவஸ்துவில் அந்த: ப்ரவிஷ்டராய் அவற்றுக்கு ஆத்மாவாய் என்றபடி. **விச்வாதாராய** – ஸந்மூலாஸ்ஸோம்யேமா: ஸர்வா: ப்ரஜா: ஸதாயதநா: ஸத்ப்ரதிஷ்டா: என்கிறபடியே ஸர்வலோகத்தையும் ஸ்வரூபத்தாலும் ஸங்கல்பத்தாலும், நாலு பக்கத்திலும் அறிந்தவர் என்பது புலனுயிற்று. **பராவரஸ்ஸ்வரூபாய** – ப்ரக்ருதி மஹதஹங்காரதன்மாத்ரபஞ்சகரூபப்ரக்ருத்யஷ்டகத்தையும், ''ஷோடசகஸ்சவிகார:'' என்கிறபடியே ஆகாசம் முதலிய பஞ்சபூதங்கள், ஐந்து ஞானேந்த்ரியங்கள், கர்மேந்த்ரியங்கள் ஐந்து, மனம் என்கிற கேவலகார்யதத்வவர்கத்தையும் தன் சரீரமாக உடையவர் என்பது பொருள். அல்லது ''அக்ஷராத் பரத:'' என்கிறவிடத்தில் தஸிலந்த பரசப்தம் போலே இங்கும் பரசப்தம் சேதநபரம். எனவே பரர்களான ஜீவர்களேயும், அவரங்களான ப்ரக்ருத்யாதிகளேயும் தமது சரீரங்களாக உடையவர் என்பது கருத்து. **அல்லது** மேலானவர்களான ப்ரம்மா முதலானவர்களே யும், கீழானவர்களான மற்ற சேதநர்களேயும் தன் சரீரமாகக் கொண்டவர் என்று சொல்லப்பட்டது. ''புருஷாய பூர்வமேவாஹமிஹாஸமிதி – தத்புருஷஸ்ய புருஷத்வம்'' என்கிறபடியே நடந்த நடக்கவிருக்கின்ற நடக்கின்றனவாகிய எல்லா கார்யங்களுக்கும் முன்னேடியாக நிற்பவர் என்று பொருள். **அக்ஷராத்மநே** – ஸ்வரூப விகாரமுடைய அசேதந தத்வம் போலவும், ஸ்வபாவ விகாரமுடைய சேதந தத்வம் போலில்லாமல் உபயவிகார ரஹிதர் என்றபடி. ''ஸத்யஜ்ஞாநந்த பராநந்த கல்யாண குணமூர்த்தயே'' ஸத்யஜ்ஞாந பராநந்த சப்தங்கள் 'த்வ்யேக யோர்த்விவசநைக வசநே'' என்கிறவிடத்தில் போலே ஸத்யத்வ, ஜ்ஞாநத்வ, பரத்வ, ஆநந்தத்வ பரங்கள். இங்கு பரசப்தம் பூரணுர்த்தக தாதுவிலே நிஷ்பந்நமாய் ஸர்வதேச ஸர்வகால ஸர்வவஸ்துக்களிலும், வ்யாப்தியைச் சொல்லிக்கொண்டு அநந்தபத பர்யாயமாய் உள்ளது. ஆக ஸத்யத்வ ஜ்ஞாநத்வ அநந்தத்வ ஆநந்தத்வங்களாகிற கல்யாண குணங்களே உடையதான ஸ்வரூபத்தை உடையவர் என்றபடி. மூர்த்தி சப்தம்

ஸ்வரூபபரம். ''ஸத்யம் ஜ்ஞானம் அநந்தம் ப்ரஹ்ம'' ''விஜ்ஞாநம் ஆநந்தம் ப்ரம்ம'' என்றல்லவோ ப்ரமாணமிருப்பது. இங்கு ஸத்யத்வமாவது, ''அவிகாராய சுத்தாய'' என்கிறபடியே நாமாந்தர பஜநார்ஹாவஸ்தாந்தர யோகிகளான அசேதநமும், தத்ஸம்ஸ்ருஷ்ட சேதநனும் போலில்லாமல் நிருபாதிகஸத்தை உடைமை. ஜ்ஞாநத்வமாவது – நித்யஅஸங்குசிதஜ்ஞாநைக ஆகாரராயிருக்கை. பரசப்தபர்யாய அநந்த சப்தார்த்தமான அநந்தத்வமாவது – தேச பரிச்சேத காலபரிச்சேத வஸ்துபரிச்சேதங்கள் இல்லாமை. அவற்றில் தேச பரிச்சேதமில்லாமையாவது – இவ்விடத்திலிருக்கிறார் என்றால் அவ்விடத்தில் இல்லை யென்று சொல்லவொண்ணாமை. அதாவது எல்லாவிடத்திலும் இருக்கின்றபடி. காலபரிச்சேதராஹித்யமாவது – இப்போதிருக்கிறார் இப்போது இல்லை என்று சொல்லவொண்ணாமை. அதாவது எல்லாக்காலத்திலும் இருக்கும் தன்மை. வஸ்து பரிச்சேதமில்லாமையாவது எல்லாவஸ்துக்களும் அவர் என்னும்படி ஸர்வ வஸ்துக்களிலும் கலந்து வர்த்திக்கை. **அல்லது** ''நாந்தம் குணாநாம் கச்சந்தி தேந அநந்தோऽயமுச்யதே'' என்கிற ப்ரமாணத்தின்படி இவ்வளவு என்று அளவிடமுடியாத கல்யாண குணங்களை உடைமை – அநந்தத்வமாகும். ஆநந்தத்வமாவது – ''முன்னல்யாழ்பயில் நூல் நரம்பின் முதிர்சுவையே'' என்றும், ''கன்னலே அமுதே'' என்றும் சொல்லுகிறபடியே அனுபவிப் பார்க்குக் கன்னல் அமுதுபோலே மிகவும் அனுகூலமாயிருக்கை. அனுகூலமான ஞானத்தை அல்லவா ஆநந்தம் என்பது. இப்படியிருக்கின்ற தேவரீரை தெண்டம் ஸமர்ப்பிக்கின்றோம் என்று அந்வயம்.

शत्रु मित्र विभेदेन त्वमेव बहुधास्थित:
त्वदिच्छामनुवर्तन्ते सर्वप्राणभृतोऽव्यय ।।४ ।।
अन्त: प्रविश्य भूतानि चराणिस्थावराणिच
प्रशासितास्य मोघात्मा वेदांगान्यखिलान्यपि ।।५ ।।
नामरूपमयं यच्च सर्वमेतत्त्वमेवहि ।

ஸ்வரூபரூபகுணங்கள் ஒன்றிலும் அழிவில்லாதவரான ஸ்வாமிந்! எல்லா பிராணிகளுக்கும் அந்தராத்மாவான தேவரீரே பகைவன் நண்பன் என்கிறபடியிலுள்ள தர்ம பேதத்தாலே அநேகவடிவில் உள்ளீர். பிராணிகளின் விருப்பத்திற்கிணங்க விருப்பத்துக்கேற்றவாறு கரணகளேபரங்கள் இயங்கியதுபோல பிராணனை உடைய எல்லா ஆத்மாக்களும் அந்தராத்மாவான தேவரீரது விருப்பத்துக்கிணங்க இயங்குகின்றார்கள்.

यथावायोस्तृणाग्राणि वशं यान्ति बलीयस:

धातुरेवं वशं यान्ति सर्वभूतानि भारत என்கிறபடியே புல்முனை முதலியவற்றின் செயல்பாடுகள் காற்றுக்குக் கட்டுப்பட்டிருக்குமாபோலே எல்லாப்பிராணிகளுடைவும் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி எண்ணுதல் இயங்குதல் முதலிய அனைத்து வ்யாபாரங்களும் தேவரீருக்குக் கட்டுப்பட்டே இருக்கின்றன. பலவகைமுயற்சிகளிலும் ஒன்றுகூட வீணாகாமல் எல்லாம் நினைத்தபடியே நடக்கும்படி ஸத்யஸங்கல்பரான ஸ்வாமிந்! தாவரங்களாயும், ஜங்கமங்களாயும் உள்ள எல்லாப்பிராணி களினுடையவும் உள்ளே புகுந்து ''கரந்தசிலிடந்தொறும் இடந்திகழ் பொருள்தொறும் கரந்தெங்கும் பரந்துளன்'' என்னும்படி நின்று ''அந்த:ப்ரவிஷ்ட: சாஸ்தா ஜநாநாம் ப்ரசாஸிதாரம் ஸர்வேஷாம்'' என்கிறபடியே அந்தந்த பிராணிகளுடைய கர்மானுகுணமாக நியமிப்பவர் தேவரீரே அல்லவா. சிக்ஷாவ்யாகரணம் சந்த: நிருக்தம் ஜ்யோதிஷம் கல்ப: என்றெடுத்த வேதாங்கங்களையெல்லாம் ப்ரம்மா, வ்யாசர், பாணிநி முதலானவர்களின் உள்ளே புகுந்து அவற்றை இயற்றியவர் தேவரீரே அல்லவா! இது தவிர सेयं देवतेमास्तिस्रो देवता: अनेन जीवेन आत्मनानुप्रविश्य नामरूपे व्याकरोत् என்கிற படியே தேவரீர் ஆதியில் எந்தெந்த உருவங்களையும் பெயர்களையும் கொண்டவர்களாயுள்ள தேவர்கள், விலங்குகள், மனிதர்கள், தாவரங்கள் வடிவுகொண்ட எல்லாவற்றுக்கும் அந்தர்யாமியாக உள்ளவர் தேவரீரேயன்றோ!

ब्रह्मा रुद्रो महेन्द्रोग्निरन्तको वरुणोऽनिलः ।।६ ।।
धनदोभास्करश्चन्द्रो वसवश्च प्रजापतिः ।
ग्रहाश्च ऋषयश्चैव तथा प्राचेतसश्चवै ।।७ ।।
सर्वेऽसुरगणाश्चैव दैत्यदानवराक्षसाः।
सर्वेषां परमात्माऽतः सर्वमेव त्वमुच्यसे।।८ ।।

**ப்ரஹ்மா:** அண்டங்களின் உள்ளே உள்ள பதினைன்கு புவனங்களுக்கும் அதிபதியாயும், எல்லாவிதமான வ்யஷ்டி ஸ்ருஷ்டிகளைச் செய்வதனலே பெருமைமிக்கவராய், ब्रह्मादेवानां प्रथमस्संबभूव विश्वस्यभर्ता भुवनस्य गोप्ता हिरण्यगर्भस्सम वर्तताग्रे भूतस्य जातः पतिरेक आसीत् என்று புகழப்படுகிற நான்முகன்,

**ருத்ர:** रुद्रसर्गं प्रवक्ष्यामि तन्मेनिगदतः श्रुणु कल्पादौ आत्मनस्तुल्यं सुतं प्रध्यायतस्ततः प्रादुरासीत्प्रभोरङ्के कुमारोनीललोहितः रुरोदसुस्वनं सोऽथस्वयञ्च मुनिसत्तम किं रोदिषीति तं ब्रंह्मा रुद्रं तं प्रत्युवाचहनामधेहीति सोऽप्याह प्रत्युवाच प्रजापतिः रुद्रस्त्वं देवनाम्नासि मारोदीः स्थैर्यमावह இவைமுதலிய ப்ரமாணத்தின் படியே தோன்றிய ஸமயத்தில் பெயருக்காக அழுதகாரணத்தால் உமாபதி ருத்ரன் என்று பெயர் பெற்ருர்.

**மஹேந்த்ர:** ''इन्द्रोवृत्रमहन् तं देवा अब्रुवन् महान्वा अयमभूत् यो वृत्रमवधीदिति । तन्महेन्द्रस्य महेन्द्रत्वं'' என்கிறபடியே வ்ருத்ராஸுர ஸம்ஹாரத்தினலுண்டான பெருமை பொருந்திய மூன்று லோக ஐச்வர்யத்தையுடைய ஆயிரங்கண்ணனை இந்திரன்.

**அக்னி:** ''अग्निरग्रे प्रथमो देवतानां'' என்கிற ப்ரமாணத்துக்கும், अग्नि शब्दोऽपि अग्रनयनादिना येनैव गुणेन योगात् ज्वलने वर्तते''

என்கிற வைச்வாநராதிகரண பாஷ்யத்திற்கேற்றவாறு ''அக்ரம் நயதீத்யக்நி:'' என்கிற வ்யுத்பத்தியால் தேவதைகள் ஆகிய ஸேநைகளை முன்னே அழைத்துச் செல்லுபவன் அக்நி.

**அந்தக:** ''वैवस्वतं संगमनं जनानाम्'' ''अहरहन्यमानो गामश्वं पुरुषं जगत्'' ''वैवस्वतो नतृप्यति पञ्चभिर्मानवैर्यम:'' என்றும் ''सर्वेचैतेवशं यान्ति यमस्य भगवन् किल'' என்றும் சொல்லுகிறபடியே ஸர்வப்ராணிகளையும் மரணமடைவிக்கின்ற யமன்.

**வருண:** ''उदुत्तमं वरुणपाशं अस्मदवाधमं विमध्यमप्श्रथाय'' என்றும் ''अनृतेखलु वै क्रियमाणे वरुणो गृह्णाति'' என்றும் சொல்லுகிறபடியே பொய் சொல்லுபவர்களைத் தன்னுடைய உத்தம மத்யம அதம ரூபமான மூன்று பாசங்களாலே மனம் மொழி மெய் ஆகிய மூன்றையும் கட்டுவதாகிற தண்டனையைச் செய்பவனும், ''வருணோ ராத்ரிம்'' என்கிறபடி ராத்ரி வேளைக்குரிய தேவதையாகிய வருணன்.

**அநில:** ப்ராணன் அபாநம் முதலிய ஐந்து ப்ராணனின் வடிவாயும், நாககூர்ம க்ருகல தேவதத்த தனஞ்ஜய என்கிற ஐந்து வாயுவாயும் இருந்துகொண்டு உலகையெல்லாம் வாழச்செய்கின்ற வாயு.

**தநத:** ''தநதேநஸமஸ்த்யாகே'' என்கிறபடியே நவநிதி நாதனாய், ''குபேராய வைச்ரவணாய, மஹாராஜாய நம:'' என்று ப்ரஸித்தனுமாய் பெருங்கொடைவள்ளலுமான குபேரன்.

**பாஸ்கர:** அனைத்து உயிர்களும் வசிப்பதற்கேற்ற இடமான பூமி முழுவதையும் ஒளிவீசச் செய்பவனாய், मित्रो जनान् यातयति प्रजानन् मित्रो दाधार पृथिवीमुतद्यां என்கிறபடியே எல்லாவிதமான ச்ரௌதஸ்மார்த்த கர்ம கலாபப்ரவர்த்தநம் முதலியவற்றால் உலகத்துக்கு உபகாரகனாயும், ''மித்ரோஹரஜநயத்'' என்கிறபடியே பகலுக்கு முக்யதேவதையான ஸூர்யன்.

**சந்த்ர:** சண்டப்ரசண்டமான ஸூர்யகிரணங்களால் பரிதவித்த

ஜனங்களை குளிர்ந்தவைகளாயும், அம்ருதமயமானவைகளாயு முள்ள கிரணங்களின் ஸமூஹத்தாலே மகிழச்செய்பவனுய் तासूर्या चन्द्रमसाविश्वभृत् तमामहत् तेजोवसुमद्राजतो दिवि முதலியவற்ருல் புகழப்பட்டவனுன சந்திரன்.

**வஸவஸ்ச** ''வஸவ: புரஸ்தாத்'', ''வஸவோவா அகாமயந்த'' முதலானவை. ''ததோ வைதேக்ரம் தேவ தாநாம் பர்யாயன்'' என்கிறபடியே தேவஸேவாநாநாஸீரகாமிகளாய், ''ஏதேநஹி இதம் ஸர்வம் வாஸயந்தி'' என்கிறபடியே உலகம் நிலைத்திருப்பதற்குக் காரணமான அஷ்டவஸுக்கள். ச காரத்தினுலே ருத்ராதித்யர்க ளும் உள்ளவர்களாகக்கொள்ளவும்.

**ப்ரஜாபதி:** – ப்ரஹ்மாதக்ஷாதய: என்பவற்றில் எடுத்த தக்ஷன் முதலிய ப்ரஜாபதிகள் ஏகவசநம் அவிவக்ஷிதம்.

**க்ரஹாஸ்ச** – செவ்வாய் முதலிய க்ரஹங்கள். சகாரத்தால் உபக்ரஹங்களும் சொல்லப்படுகின்றன.

**ருஷயஸ்சைவ** – உறுதியான தவம் செய்வதனுலே செம்மையான மனத்தினுலே எல்லாவிதமான ஸூக்ஷ்மமான நிகழ்ச்சிகளையும் உள்ளபடி அறிந்தவர்களான வஸிஷ்டர் வாமதேவர் முதலானவர்களும் ப்ராசேதஸ் என்று அழைக்கப்படுவராயும், ப்ரசேதாவான வருணனுலே புத்ரனுக அபிமாநிக்கப்பட்டவராயும், தேவதைகளாலே அறியமுடியாத ரகுநந்தனன் என்ற வேஷம் பூண்டு வந்த பரப்ரம்மத்தின் விஷயமாக ராமாயணம் என்னும் பெயர் கொண்ட வேதத்தை அருளிச்செய்தவரும், ''ப்ரஹ்மாதேவாநாம் பதவீ: கவீநாம் என்று மந்திரத்தில் கவீநாம் பதவீ: என்று கவிகளுக்குகே வழி காட்டியாகப் புகழப்பட்டவருமான வால்மீகி பகாவானும்,

**ஸர்வே ஸுரகணுஸ்சைவ** – ''தேவா: த்ரிரேகாத சாஸ்திஸ்ர: த்ரிகும்சா:'' என்று சொல்லப்பட்ட முப்பத்து முக்கோடி தேவகணங்களும், ''தைத்ய தாநவ ராக்ஷஸா: தேவா மநுஷ்யா: பிதர: தேந்யத ஆஸந், அஸுராரக்ஷாகும்ஸி பிசாசாஸ்தேந்யத என்று சொன்னபடி''தேவதைகளுக்கு விரோதிகள்'' என்ற விஷயத்தில் ஒத்தவர்களாக ஒருகூட்டமான திதியின் பிள்ளைகள், தனுவின்பிள்ளைகள், (தைத்யதானவர்கள்) ப்ரம்மாவிடம்

''ரக்ஷாம:'' என்று சொன்னதால் ப்ரம்மாவிஞல் ராக்ஷஸர்கள் என்று பெயரிடப் பெற்ற தேவதைகளுக்கு விரோதிகளான ராக்ஷஸ பரிஜனங்களும் மற்றும் சொல்லப்படாத எல்லாப் பிராணிகளுக்கும் தேவரீர் உத்தமரான ஆத்மா அல்லவா? ஆகையால் ஸமஸ்த வஸ்துக்களும் தேவரீரேயென்று, ''ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம, ப்ரஹ்மதாசா , ப்ரஹ்மதாஸா, ப்ரஹ்மே மேகிதவா உதஸ்த்ரீபும்ஸௌ ஸர்வம் ஸமாப்நோஷி ததோஸி ஸர்வ: இத்யாதி ச்ருதிஸ்ம்ருதிகளில் தேவரீர் புலப்படுத்தப் படாநின்றீர்

एतत्सर्वमिदं तत्वं त्वय्येव प्रतिष्ठति
त्वय्येव लयमायाति तस्मात्त्वं सकलं जगत् ।।९ ।।
त्वमेव कारणं यस्मात् तस्मात्त्वं सर्वमेवहि ।
आविर्भावतिरोभावौ जन्म मृत्युश्च जीवितम् ।।१० ।।
स्थूलसूक्ष्म विभेदेन व्यक्ताव्यक्तस्वरूपधृत् ।
गुणत्रयविहीनस्त्वं संयुक्त: षड्गुणैश्शुभै: ।।११ ।।

தொலைவிலுள்ளதாயும், அருகிலுள்ளதாயும், நடுவாய் உள்ளதாயுமான ப்ரமாணங்களாலே தேர்ந்த தத்த்வமெல்லாம் தேவரீரிடத்திலே உள்ளது. இதன் ஸத்தை தேவரீருக்கு உட்பட்டதாகும். தேவரீரிடமே லயம் அடைகின்றன. ஆகையால் ஸமஸ்தமான ஜகத்தும் நீரே ஆவீர். எந்தவொரு காரணத்தால் இந்த உலகுக்கு ஜன்மஸ்திதிலயத்துக்கு நீரே காரணமாகிறீரோ எனவே இந்த உலகம் தேவரீரே என்று சொல்வது பொருத்தம் தானே. ம்ருதயம் கட: பாலோயுவா ஜாத: என்கிற உலகவழக்கிலும் இவ்வர்த்தம் ப்ரஸித்தமல்லவா? அடிக்கடி மாறுதலுக்குட்பட்டதாயும் துக்கத்துக்கு இருப்பிடமா யும், உள்ள இந்த ஜகத்தையும் ஹேயகுணங்கள் அற்றவராயும், கல்யாணகுண நிதியாயுமுள்ள தேவரீரையும் ஒரே வஸ்து என்று நாங்கள் சொல்லவில்லை.

यतोवाइमानिभूतानि जायन्ते. येनजतानि जीवन्ति

यत्प्रयन्त्यभिसंविशन्ति सन्मूलास्सोम्येमाः सर्वाः प्रजाः सदायतनाः सत्प्रतिष्ठाः' ऐतदात्म्यं इदं सर्वम्

என்கிற ச்ருதியே ஸ்வரூபைக்ய ப்ரம நிவ்ருத்திக்காகத் தான் ''யஸ்யாவ்யக்தம் சரீரம்–யஸ்ய ப்ருதிவி சரீரம்– யஸ்ய ஆத்மா சரீரம் – என்று சரீரசரீரி பாவத்தைச் சொல்லி அத்தைக்கருதியே ''இதம் ஸர்வம் யதயமாத்மா தத்த்வமஸி என்று சொன்னதாகத் தெரிவித்திருக்க ஜகத்துக்கும் தேவரீருக்கும் ஸ்வரூபைக்யம் கொள்வார் மதிகெட்டவர்கள்தானே. அப்படி ஐக்யம் சொன்னேமேயானல் इन्द्रियाणि मनोबुद्धिस्सत्वं तेजो बलं धृतिः: वासुदेवात्मकान्याहुः क्षेत्रं क्षेत्रज्ञमेवच என்கிற ப்ரமாணத்தில் க்ஷேத்ர சப்தார்த்தமான அசேதனத்தோடு ஐக்யம் கொள்ள வேண்டுமே. ''க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞமேவ ச'' என்று தெளிவாக இருக்கும்போது சில விஷயத்தில் ''சோரஸ்யாண்ட:'' என்கிருப்போலே बाधार्थ सामानाधिकरण्यं கொள்ளுகை, अर्धजरतीन्यायादि प्रसक्त्यादिகளாலே நகைப்பிற்கிடமாயன்றே இருக்கின்றது. இவ்வன்னலும் துன்னலும் பாஷ்யகாரராலேயே பறக்கடிக்கப்பட்டதுதானே. இது கிடக்க ஸ்தூலாவஸ்தையாகிற ஆவிர்பாவம், ஸௌக்ஷ்மாவஸ்தையாகிற திரோபாவம் ஜநநம் மரணம் ஜீவித்திருக்கை, இப்படி உலக சம்பந்தபட்ட எல்லா நிலைகளும் தேவரீரே. தேவரீராலேயே உண்டாகின்றன என்பது கருத்து. ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களாகிற ப்ராக்ருத குணங்களோடும், அதன் கார்யங்களோடும் பாரவச்யரூப ஸம்பந்தமில்லாதவராயும், ज्ञानशक्ति बलैश्वर्य वीर्यतेजांस्यशेषतः भगवच्छब्दवाच्यानि विना हेयैर्गुणादिभिः என்கிறபடியே ஹேயகுணமற்றவைகளான ஜ்ஞான சக்த்யாதி ஆறுகுணங்களோடு நித்யஸம்பந்தமுள்ளவராயுள்ள தேவரீரே ஸ்தூலம் ஸௌக்ஷ்மம் என்கிற அவஸ்தா பேதத்தாலே வ்யக்தமென்றும் அவ்யக்தமென்றும் சொல்லப்படுகின்ற அசதேநமாகிற தமது

சரீரத்தை தரித்து நிற்பவர்.

मार्कण्डेय:

एवं बहुविधैस्तोत्रैः स्तुवन्तः पुरुषोत्तमम्

अर्चयामासुरव्यग्रा वांछितार्थप्रसिद्धये ।।१२ ।।

எல்லாதேவர்களும் ஒருமித்தமனத்தவராயிருந்து கொண்டு இப்படி பலவிதமான ஸ்தோத்ரங்களாலே பகவத் குணங்களைப் பேசிக்கொண்டு

यस्मात्क्षरं अतीतोऽहं अक्षरादपि चोत्तमः। अतोऽस्मि लोके वेदेच प्रथितः पुरुषोत्तमः என்கிறபடியே பத்தர், முக்தர் ஆகிய சேதநர் களைக் காட்டிலும் வ்யாபந பரண ஸ்வாம்யங்களாலே விலக்ஷணமாயுள்ளபடியால் புருஷோத்தமரான ஸ்ரீவீரராகவனைத் தங்கள் எண்ணங்கள் ஈடேறுகைக்காக பலவகையான உபசாரங்களாலே பூஜித்தார்கள்.

ततः प्रसन्नो भगवानभिव्यञ्जित विग्रहः

तानुवाच सुरान् सर्वान् मेधगंभीरयागिरा ।।१३ ।।

ஆறுகுணங்களும் நிரம்பப்பெற்றவரான ஶ்ரிய:பதி தேவர்களுடைய தோத்திரங்களாலும் ஆராதனங்களாலும் மகிழ்ந்தவராய் அவர்கள் கண்ணாலே காணும்படியாக திவ்யமங்கள விக்ரஹத்தை உடையவராய் அந்த தேவர்கள் அனைவரையும் குளிர கடாக்ஷித்தருளி பெரிய மேகத்தின் த்வநியாலே தாபத்தினால் தவித்தவர்களுக்கு அத்தாபத்தை தணிப்பதாயும், புஷ்கலார்த்தமாயும், காம்பீர்யம் தோற்றும் படியாயும், உள்ள திருமிடற்ரேசையோடே உத்தரம் அருளிச்செய்தார்.

सुप्रसन्नोऽस्मि विबुधाः प्रार्थयध्वं यथेप्सितम्

सर्वं वोऽत्र प्रदास्यामि वृणीध्वं नात्र संशयः ।।१४ ।।

धर्ममर्थञ्च कामञ्च कैवल्यञ्च यथेप्सितम्

आपद्विमोचनञ्चापि सर्वोपद्रवनाशनम् ।।१५।।

आयुरारोग्यमैश्वर्यं रिपूणाञ्चक्षयं तथा ।

ஹே தேவர்களே! உங்களுடைய ஸ்தோத்ரங்களினுலும், ஆராதனங்களினுலும் மிகவும் மகிழ்ந்தேன். உங்கள் விருப்பத்திற்கிணங்க வேண்டுவீர்களாக. பழுதுபட்ட பகவானது கோயில்கள், மண்டபங்கள், கோபுரங்கள், ப்ராகாரங்கள் இவற்றைச் செப்பனிடுதல், அக்நிஷ்டோமம், வாஜபேயம் முதலிய யாகங்கள் செய்தல், பெரிய குளம் அமைத்தல், லக்ஷக்கணக்கான அந்தணர்களுக்கு வசிப்பதற்கு அக்ரஹாரம் அமைத்தல், லக்ஷக்கணக்கான மரங்களடங்கிய தோட்டங்கள் அமைத்தல் ஆகிய தர்மங்கள் ஸித்திப்பதையும், பிரமன், இந்திரன், ருத்ரன் முதலானவர்களது ஐச்வர்யத்தைக் காட்டிலும் மேலான தனலாபத்தையும், உத்தமமான பெண்களின் அநுபவத்தையும் அதற்கு வேண்டியவைகளான படுக்கை, ஆஸநம், மாலே, சந்தனம், திவ்யமான அன்னம் பாநம் முதலிய இம்மைப்பயன்களேயும், அவித்யை அடியோடு நீங்கி என்னே அடைவதாகிய மோக்ஷத்தையும் ''यस्य गावोवापुरुषा वा प्रमीयेरन् यो वा बिभीयात्'' என்கிறபடியே புத்ரன், நண்பன், மனேவி, பசு, வேலேக்காரர்கள் ஆகியோர்களது மரணமாகிய அஞ்சத்தக்க ஆபத்துக்களேப் போக்கியும், மேலும் உலகிலுள்ள குஷ்டரோகம், க்ஷயரோகம், ஆஸ்த்மா, குல்மரோகம், தலே, கண், பல், காது, சூலம் முதலிய அனேத்து நோய்களின் உபத்ரவங்களேப் போக்கியும், நீண்ட வாழ்நாளேத்தந்தும், அந்திமகாலம்வரை ஒரு வ்யாதியும் இல்லாமையையும், தனம் தாந்யம் புத்ரன் பசு க்ஷேத்ரம் முதலிய ஐச்வர்யங்களேயும், சத்ரு நாசத்தையும் ப்ராத்தித்தவர்களது விருப்பத்துக்கு ஏற்ற எல்லா அர்த்தங்களேயும் கொடுக்கிறேன். அவரவர் விரும்பியவற்றை வேண்டிக்கொள்ளுங்கள்.

देवाः - त्वदिच्छामनुवर्तन्ते सर्वप्राणभृतो हरे ।।१६।।

नशक्यते त्वदन्येन त्वदाज्ञामतिवर्तितुम्
ब्रह्माद्याःस्तम्बपर्यन्ताः प्रणिनो गुणवेष्टिताः।।१७।।
त्वद्देहतस्समुद्भूताः त्वद्दर्शितपथानुगाः।
नियुक्ताः स्वाधिकारेषु वर्तन्ते त्वद्भयादिह।।१८।।

ब्रह्माणं शितिकण्ठञ्च यममन्याश्च देवताः
प्रसह्यहरते यस्मात् तस्मात्हरिरिहोच्यते।।

என்கிறபடியே வலிமைமிக்கவன் வலிமையற்றவன் என்கிற வேறுபாடின்றி எல்லாப்பிராணிகளேயும் ஸம்ஹாரம் பண்ணக்கூடிய ஸ்வாமியே! எல்லாப்பிராணிகளும் தேவரீரது விருப்பத்திற்கிணங்க நிற்கின்றன. தேவரீரது கட்டளேயை மீற எவராலும் முடியாது. ப்ரம்மா முதல் எறும்பு வரை ஸர்வ ரஜஸ் தமோ குணங்களுக்கு வசப்பட்டவர்களாயுள்ள பிராணிகள் அடங்க தேவரீரது தேஹமான ப்ரக்ருதி புருஷ ஸமஷ்டியில் தோன்றியவர்களாய் தேவரீர் காட்டிய புண்யம் பாபம் ஆகிய வழியில் செல்ல நியமிக்கப்பட்டவர்களாய், 'भीषास्मात् वात:पवते। भीषोदेति सूर्य:। भीषास्मादग्निचेन्द्रश्च। मृत्युर्धावति पञ्चम: என்றும், भयादस्याग्निस्तपति என்றும், यदिदं-किञ्च जगत्सर्वं प्राणएजतिनिस्सृतं. महद्भयं वज्रमुद्यतं यएतद्विदु: என்றும் சொல்லுகிறபடியே தேவரீருடைய பயத்திஞலே தத்தம் தொழில்களில் அணுவளவும் தவருமல் செய்து வருகின்ருர்கள்.

'इदानीं दुर्गमाः क्रूराः दानवा बलदर्पिताः।
यज्ञैस्तपोभिरत्यग्रैः दुष्प्रधर्षा महाबलाः।।१९।।
आगत्य त्रिदिवं युद्धे निर्याप्यास्मानितस्ततः।
भुंजतेऽद्यसुरैस्सेव्यं देवलोकं महाद्युते।।२०।।

त्वमेव सर्वलोकानां इहामुत्रचरक्षक: ।

अनन्य गतयोनाथ त्वामेव शरणंगता:।।२१।।

இப்போது ப்ரம்மா முதலானவர்களுக்கும் நெருங்குவதற்கரியவர் களாயும், எப்போதும் பிறரை ஹிம்ஸிப்பதையே தொழிலாகக் கொண்டவர்களாயும், பிறரை அவமதிப்பதற்குரிய கொழுப்பு மிக்கவர்களாயும், யஜ்ஞாநுஷ்டானங்களாலும், மிகக்கடுமை யான தவத்திஞலும், எவராலும் அடக்கமுடியாதவர்களாயும், மஹாபலசாலிகளாயுமிருக்கின்ற தாநவர்களான விரோதிகள், யுத்தத்தில் எங்களே நாலுதிக்கிலும் துரத்திவிட்டு ஸ்வர்க்க லோகத்தை ஆக்ரமித்துக் கொண்டுவிட்டார்கள். தேவர்களான நாங்கள் அனுபவித்துவருமாறு தேவரீராலே கொடுக்கப்பட்ட தேவலோகத்தைப் பிடுங்கிக்கொண்டு சுகமாக அநுபவித்து வருகிருர்கள். கோடிஸூர்யன் உதித்தாற்போன்ற தேஜஸ்ஸு டைய தேவரீரிருக்க நாங்கள் இப்படி கஷ்டப்படலாமா? ஸ்வாமீ! எங்களுக்கு மட்டுமின்றி எல்லா ஜநங்களுக்கும் இம்மையிலும், மறுமையிலும் ரக்ஷிப்பவர் தேவரீரேயல்லவா. ஹே ஜகத்ஸ்வாமிந்! கதியற்றவர்களான நாங்களெல்லாரும் தேவரீரையே சரணகப்பற்றுகிருேம்.

इत्युक्त्वा मुनयस्सर्वे प्रणेमुस्तत्पदाब्जयो:

रक्ष रक्षेति बहुशो वदन्त: पुरुषोत्तमम् ।।२२ ।।

இப்படி தேவர்கள் சரணுகதி பண்ணியபின் ரிஷிகளுமடங்க அவ்வாறே துதித்து ஸ்வாமியினுடைய திருவடித்தாமரைகளில் தண்டம் ஸமர்ப்பித்தார்கள். அதற்கு மேலும் புருஷோத்தமனை பகவானைப் பலமுறை காத்தருளவேண்டும் காத்தருளவேண்டு மென்று விண்ணப்பம் செய்தார்கள்.

श्रीभगवान्

अनुप्रविश्यमत्तेजो महेन्द्रमरिमर्दनम्

विनिर्जित्यासुरान्सर्वान् युष्मान् अवतु सर्वदा

इत्युक्त्वा वृत्रहन्तारं विलोक्य पुरुषोत्तमः
विससर्ज सुरान् सर्वान् स्वांशलेशोपवृंहितान् ।।२४ ।।

இரண்டணுமூன்றணு முதலான கணக்கற்ற பிறவஸ்துக்களைக் காட்டிலும் உயர்ந்ததான பர்வதத்துக்குப் பரமாணுவைக் காட்டிலும் மேலானது என்று பேசுவதும் குற்றம் என்று கூறுமாப்போலே பத்தமுக்தசேதநர்களைக் காட்டிலும், மேலானவன் என்று சொல்லுவதும் குற்றம் என்னும்படி அளவிடமுடியாத வைபவத்தை உடையவரான புருஷோத்தமன், தேவர்களனை வரையும் குளிர கடாக்ஷித்து ஹே தேவர்களே! நமது தேஜஸ்ஸில் ஒரு பரமாணுவை உங்களுக்காக பரவவிட்டுள்ளேன். அந்த நமது தேஜோம்சமானது அஸுரஸம்ஹார நிபுணனும், நம்முடைய உதவியினலே வ்ருத்ராஸுரனை ஸம்ஹரித்தவனு மான இந்திரனது உள்ளே புகுந்து எல்லா அசுரர்களையும் வென்று உங்களை எப்போதும் ரக்ஷித்துக் கொண்டிருக்கக்கடவது என்றருளிச்செய்தார். பின்னர் வ்ருத்ரனைக் கொன்றவனுன இந்த்ரனைத் தம்முடைய தேஜோம்சம் உள்ளே புகுமாறு குளிரக் கடாக்ஷித்து அப்படியே தம்முடைய தேஜோம்சங்களாலே நிரப்பப்பட்டவர்களான ஸமஸ்ததேவர்களையும் கடாக்ஷித்து விடைகொடுத்தனுப்பினுர்.

ततः प्रहृष्टवदना निर्जित्य विबुधद्विषः
अग्रतो भयहीनास्ते भुञ्जते स्वर्गमव्ययम् ।।२५ ।।

அப்படியே பகவானது தேஜோம்சமானது உட்புகுரப்பெற்றவர் களான தேவர்கள் தமது உள்ளத்திலுள்ள ஆநந்தரஸம் அடங்கலும் முகங்களிலே தோன்றும்படியாக சத்ருக்களான தாநவர்களை வென்று இனி வருங்காலத்திலும் ஒருபோதும் நமக்கு பயமில்லை என்று உறுதியான எண்ணமுடையவர்களாய் சாச்வதமாக ஸ்வர்க்கத்தை அநுபவித்தார்கள்.

एवमिष्ट प्रदो विष्णुः तीर्थे हृत्तापनाशने ।
अतस्तत्सदृशो लोके नास्त्यभीष्टफलप्रदः ।।२६ ।।

ஸ்ரீஹ்ருத்தாபநாசநதீர்த்த்தில் ஸ்நாநம் செய்தவர்களுக்கு இப்படியே ஸர்வாந்தர்யாமியான ஶ்ரிய:பதி விரும்பியவற்றை யெல்லாம் க்ருபைசெய்கிறுர். ஆகையால் வேண்டியவற்றை யெல்லாம் தரக்கூடிய இந்த ஹ்ருத்தாபநாசந தீர்த்தத்துக்கு ஸமமான தீர்த்தம் இந்த உலகிலேயே இல்லே.

भक्त्यै तदेव कथयेच्छ्रृणुयाद्यथावत्
संप्राप्तुमिच्छति सुखं परमस्यपुंसः ।
भक्त्यानुरक्षण विचक्षण विक्रमञ्च
हृत्तापनाशन विगाहन वैभवञ्च ।।२७ ।।

எவனொருவன் இம்மை மறுமை சுகத்தை அடைய விரும்புகிறுனே அந்த மனிதன், பரமபுருஷனை ஸ்ரீவீரராகவனுடைய (தம்)அடியார்களேக் காப்பதிலேயே ஆர்வம் மிக்கதான சரித்ரத்தையும், ஸ்ரீஹ்ருத்தாபநாசந ஸ்நாநத்தின் வைபவத்தை யும் ஆகிய இவ்விரண்டையும் விரும்பியவர்களுக்கு விவரித்துச்சொல்லவேண்டியது. இது தன்னேயே இன்னும் பெரியோர்களிடம் கேட்கவேண்டியது. நாம் இங்கு சொன்ன தெல்லாம் இந்த க்ஷேத்ர வைபவத்தில் ஒரு துளியாக எண்ண வேண்டியது. தீர்த்தமோ தர்சிப்பதாலும், ஸ்பர்சத்தாலும் ஸர்வஹ்ருத்தாபநாசநமாக கண்கூடாக உள்ளது. காலமோ எல்லேயற்றது. விரும்பும் ஜனங்களோ ப்ரவாஹம் போன்ற நித்யர்கள். பெருமாளும் எப்போதும் கொள்ளக்குறைவின்றி வேண்டிற்றெல்லாம் தருகின்றவர். வேண்டாதவற்றை விலக்குகின்றவடிவிலும், வேண்டியவற்றைத் தருகின்ற வடிவிலும் இருக்கின்ற இஷ்டார்த்தங்கள் கணக்கற்றவை. ஒரு ரிஷி ஒருவர்க்கு உரைத்ததும் அந்த சிஷ்யர் அப்படியே நடந்ததும், விரும்பியதெல்லாம் கிடைத்ததும் இவ்வளவு தாஞ உள்ளது? இது இந்த க்ஷேத்ர வைபவத்துக்கு வழிகாட்டியாகும். ஆகையால் இன்னம் பெரியோர்களிடத்தில் ஐதிஹ்ய ரூபங்களாய் எவ்வளவு வைபவம் இருக்குமோ அதைத் தன் சக்தி உள்ள மட்டும் கேட்டறியலாமென்றும் இந்த தர்மஸூக்ஷ்மத்தை

விரும்பியவர்களுக்கெல்லாம் உபதேசிக்கலாம் என்றும் அருளிச்செய்தார்.

**इति श्रीमार्कण्डेयपुराणे क्षेत्रकाण्डे वीक्षारण्यक्षेत्रमाहात्म्ये सव्याख्याने द्विशततमोऽध्यायः**

## श्रीलक्ष्मीनृसिंहपरब्रह्मणे नमः



## श्रीवीक्षारण्यक्षेत्रमाहात्म्ये तृतीयोऽध्यायः

मार्कण्डेयः

भूयः शृणु कथां विष्णोः तत्रक्रीडां समागताम्

यस्याः श्रवणमात्रेण सद्यश्चेतः प्रसीदति ।।१ ।।

ஸஹஸ்ராநீக மஹாராஜரே! அந்த புண்யாவர்த்த க்ஷேத்ரத்தில் ஸ்ரீவீரராகவனுடைய விளையாட்டைப்பற்றி சொன்னவர் கேட்டவர் பரம்பரையாலே நமக்குத் தெரிந்த கதையை உள்ளபடியே உமக்கு இன்னும் சொல்லுகிறேன் கேளும். எந்த ஒரு கதையைக் கேட்டமாத்ரத்திலுலே அப்போதே கேட்பவனுடைய மனம் ''சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண'' என்று அர்ஜுநன் சொன்னபடியே மிக்க சஞ்சலஸ்வபாவமாயிருந்த போதிலும் தெளிவுபெற்றுநிலைத்து நிற்கின்றதோ அத்தகைய கதையைச் சொல்லுகிறேன்.

वीक्षारण्ये पुरा तस्मिन् कश्चिज्जनपदो महान् ।

यत्रधर्माः प्रवर्तन्ते पापसम्बन्धवर्जिताः।।२।।

दुराचारो न यत्रासीन्नैवहिंस्रा ननास्तिकाः ।

நாமினி உமக்குச் சொல்லப்போகிற எந்த நகரத்தில் ஸகல ஜனங்களுக்கும் நன்மை பயப்பனவாயும் வர்ணாச்ரம தர்மங்களுக்கேற்றபடியாயுள்ள ஸாமாநாதிகரண்யம் இல்லாமையால் அதிசயம் பெற்று வாழ்கின்றனவோ, எந்த இடத்தில் சாஸ்த்ரங்களால் விலக்கப்பட்ட கெட்டநடத்தை உடையவன் ஒருவனாவது விரல் மடக்கக் கிடையானோ, எந்த இடத்தில் ''மறுக்கி வல்வலைப்படுத்திக்குமைத்திட்டுக் கொன்றுண்பர்'' என்கிறபடியே ஹிம்ஸிப்பவர்கள் கிடையாதோ, எந்த இடத்தில்

ஈச்வரனும் அவனுக்கு ப்ரமாணமான வேதமும் இல்லையென்பவர் கிடையாதோ, அப்படிப்பட்ட மற்ற நகரங்களைக் காட்டிலும் விலக்ஷணமாய் பல்லாயிரக்கணக்கான ப்ரம்மக்ஷத்ரியவைச்யசூத்ரர்கள் வசிப்பதற்குத்தக்கவாறு விசாலமான ''தர்மஸேநபுரம்'' என்ற ஒருநகரம் வீக்ஷாரண்யத்தில் முற்காலத்தில் உண்டாயிருந்தது.

तत्र विष्णुवदेवासीत् क्षत्रियस्सर्वधर्मवित्।।३।।

धर्मसेन इति ख्यातो दिलीपनृपवंशजः ।

அந்த நகரத்தில் ''ராமோ விக்ரஹவான்'' என்கிறபடியே அறத்தை நிலைநிறுத்துவதில் வல்லவரான ஶ்ரிய:பதியைப் போலே தர்மத்தை ஸ்தாபிப்பதிலேயே ஈடுபட்டவனையும், எல்லா தர்மங்களையும் ஆசார்யனிடத்தில் கேட்டறிந்தவனையும் ''மத்துல்யதபஸா'' என்று ப்ரம்மாவினாலே புகழப்பட்ட திலீபமஹாராஜாவினுடைய வம்சத்தில் தோன்றியவனையும், தன்னுடை சௌர்யம் தைர்யம் காம்பீர்யம் முதலான குணங்களாலே உலகில் திலீபமஹாராஜாவைப்போலவே ப்ரஸித்தனையும் உள்ள தர்மஸேநன் என்ற பெயர் கொண்ட ஒரு க்ஷத்ரியன் இருந்தான்.

आसीदखिल लोकानां शासितानृपसत्तम।।४।।

शशास वसुधां कृत्स्नां सशैलवनकानना ।

இப்படி அனைத்து அரசர்களிலும் சிறந்தவனான தர்மஸேந மஹாராஜன் தர்மமார்க்கத்தில் செல்வதனாலும், அதர்மமார்கத் திலிருந்து விலகியிருப்பதனாலும் எல்லா ஜனங்களுக்கும் சிக்ஷிப்பவனாயிருந்தான். அந்த மஹாராஜன் सर्वापूर्वमियं तेषां आसीत् कृत्स्ना वसुन्धरा என்கிறபடியே ஸமஸ்தபூமண்டலத்தை யும், ''ரத்நகநிகஸ்தூரீம்ருக சமரீம்ருக மஹாகஜ விசித்ர ஓஷதி பலபுஷ்ப தாரு இந்தநங்களால் நிறைந்தவைகளான பெரியமலைகளோடும், சிறியகாடுகளோடும், பெரியகாடுகளோ டும் கூடிய எல்லாவற்றையும் ஒரு நாயகமாய் தனது வெண்கொற்றக்குடைநிழலில் வாழும்படி ஆண்டான்.

तस्यासीदुत्पलाभाक्षी कन्यका तनुमध्यमा।।५।।
नाम्नावसुमती भासा लक्ष्मीरद्भुतलक्षणा।
फुल्लपद्मानना नीलकेशिनी मन्दगामिनी।।६।।
सर्व चित्तहरा रूपगुणयौवन संपदा।

அந்த அரசனுக்கு வெண்மையுடன்கூடிய கருமையால் கருநெய்தல் பூக்களுக்கு ஒத்தனவாயும், காதளவு நீண்டதாயும், ''தஞ்சேயமஸிதேக்ஷணு'' என்கிறபடியே தாமரைஇதழ்போன்ற கண்களையுடைய பெருமாளையும் வசீகரிக்கக்கூடிய கண்களை யுடையவளாயும், உண்டோ இல்லையோ என்று ஐயுறத்தக்க இடுப்பையுடையவளாயும், காந்தியினாலே தாமரைப்பூவில் வீற்றிருக்கும் லக்ஷ்மியே இவள் என்னலாம்படி உள்ளவளாயும்,

केशास्सूक्ष्मास्समानीला भ्रुवौचा संगते मम।
वृत्तेचारोमशेजंघे दन्ताश्चा विरला मम।
शंखेनेत्रेकरौ पादौ गुल्फाऊरूच मेचितौ।।
अनुवृत्त नखास्निग्धा समाश्चाङ्गुलयो मम।
स्तनौचाविरलौ पीनौ ममे मौ मग्न चूचुकौ।
मग्नाचौत्तुंगिनी नाभिः पाश्वोंरस्काश्च मे चिताः।
मम वर्णो मणिनिभोमृदून्यंगरुहानिच
प्रतिष्ठितां द्वादशभिः मामूचूःशुभलक्षणाम्
समग्रयवमच्छिद्रं पाणिपादश्च वर्णवत्
मन्दस्मितेत्येवच मां कन्या लक्षणिनोद्विजाः।। என்றும்,
समाश्शिखरिणस्निग्धाः पाण्डुरा दशनास्तव
विशाले विमले नेत्रे रक्तां ते कृष्ण तारके
विशालं जघनं पीनं ऊरूकरिकरोपमौ

एतावुपचितौ वृत्तौ संहतौ संप्रवल्गितौ

पीनोन्नत,मुखौ कान्तौ स्निग्धौ ताल फलोपमौ

मणिप्रवेकाभरणौ रुचिरौ ते पयोधरौ ।

चारुस्मिते चारुदति चारुनेत्रे विलासिनी

என்றும் பிராட்டிக்குச் சொன்னபடியே ஸாமுத்ரிகா லக்ஷணங்கள் முழுதும் ஓரிடத்தில் சேர்ந்திருப்பதனாலும் தீயகுறிப்புகள் ஒன்றும் இல்லாமையாலும் ஸாமுத்ரிகாலக்ஷணம் அறிந்தவர் களுக்கு ஆச்சர்யத்தைத் தரக்கூடியவளாயும், மலர்ந்த தாமரை போலே ரஸிகர்களுக்கு வைத்தகண்ணை வாங்கவொட்டாத ஒளியுடைய திருமுக மண்டலமுடையவளாயும், கொள்கின்ற கோளிருளைச் சுகிர்ந்திட்ட கொழுஞ்சுருளின் உள்கொண்ட நீல நன்னூல் தழைகொல் என்று சந்தேஹிக்கும்படி கருமை பொருந்திய குழல்கள் உடையவளாயும், அன்ன நடையாள், அசையும் அன்னவடிவாள் என்றபடியே இளம்பெண் அன்னங்கள் நடை பழகிக்கொள்ளும் படியான அழகானநடை உடையவளாயும், भूयिष्ठं तेजएवाद्भिर्बहुलाभिर्मृदूकृतं। चक्षुरानन्द जनकं लावण्यमितिकथ्यते என்று உறுதிசெய்த லாவண்யமதனா லும், மதுமாதவ ஸம்பந்தத்தாலே வந்த ஒளிமிகுதியாலும், पाञ्चाल्या: पद्मपत्राक्ष्या: स्नायन्त्याजघनं घनम् यास्त्रियो दृष्टवत्यस्ता: पुंभावं मनसा ययु: என்கிறபடியே பெண்களையும் ஆணாகக்கருதும்படி செய்பவளாயும் வஸுமதீ என்ற பெயரோடுகூடிய ஒரு கன்னிகை உண்டானாள்.

तां विलोक्य सुतां राजा साक्षात् श्रियमिवागतां।।७।।

कृतकृत्यमिवात्मानं मन्यमानोऽब्रवीदिदम् वच: ।

அந்த தர்மஸேநமஹாராஜனும் தனது பாக்யவிசேஷத்தாலேயே ப்ரத்யக்ஷமாக வடிவுகொண்டுவந்த பெரியபிராட்டியார் போலேயுள்ள தன் பெண்ணான வஸுமதியைப்பார்த்து

ततः प्रहृष्टो धर्मात्मा पितामे मिथिलाधिपः

अवाप्तो विपुलामृद्धिं मामवाप्य नराधिपः என்றும்,

जनकानां कुले कीर्ति माहरिष्यति मे सुता என்றும் சொன்னபடியே ஸ்ரீஜநகராஜன் பிராட்டியைப் பெற்று மனம் மகிழ்ந்தாப்போலே தம்மை க்ருதார்த்தரானவர் போலே ஸதஸ்ஸில் சொல்ல வேண்டிய முறைப்படி சொன்னுர். இங்கு வஸ்துத: க்ருதார்த்தரானவரை க்ருதக்ருத்யமிவ என்றது தகுந்த வரனிடத்தில் ஸமர்ப்பணம் செய்தபின் பண்ணவேண்டிய ஸம்ப்ரமத்தை இப்போதே செய்கின்ருர்

यद्येनां वरयेत्कन्यां आगत्य सदृशः पुमान्।।८।।

रूपयौवन सम्पत्या तस्मै दास्याम्यहं ध्रुवम्।

एवं लक्षण हीनस्तु बलेनानुन येनवा।।९।।

अन्यः कस्त्रिषु लोकेषु मत्कन्यां नेतुमर्हति।

यद्वा यमेषा वरयेत् तस्मै दास्यामि नान्यथा।।१०।।

''राघवोर्हति वैदेहीं तञ्चेयम्सितेक्षणा'' घनकनकद्युति युवदशामपिमुग्धदशां என்கிறபடியே வடிவழகினுலும், யௌவநப்ராயத்தின் துவக்கத்தாலும், நம்முடைய குமாரத்திக்கு ஏற்றவாறு அழகுபடைத்த எந்த புருஷன் வந்து நம்முடைய கன்னிகையை வரிக்கின்ருனே அவனுக்கு இந்த கன்னிகையை நிஸ்சமாய்க் கொடுப்பேன். இவளுக்குத் தகாத வேறு எந்த புருஷனுனுலும் அவன் மனுஷ்யலோகத்தில் இல்லாமல் தேவலோகத்தில் உள்ளவனேயானுலும் தன் பலத்தினுலாவது, ஸாமதானுதி உபாயங்களாலேயாவது கன்னிகையைச் கொண்டு செல்லத்தக்கவனல்லன். முடிவாகச் சொல்லுகிறேன். என்னுடைய பெண்ணுனவள் எந்த புருஷனைக் கண்டு அவனுடைய அழகு முதலிய குணங்களில் ஈடுபட்டு அவனைக் கணவனுக வரிக்கிருளோ அவனுக்கே இவளை நான்

ஸமர்ப்பிக்கப்போகிறேன். இது தவிர வேறு ஏதும் யோசிக்க வேண்டியதில்லை.

मार्कण्डेय:

ये चान्ये पृथिवीपाला धरण्यां गुणवत्तरा:।

तामभ्यर्थ्याभ्य सूयन्ते ते सर्वेहि नलेभिरे।।११।।

இந்த பூலோகத்தில் காம்பீர்யம் சௌர்யம் தைர்யம் முதலிய குணவான்களுக்குள்ளே சிறந்தவர்களாய் பூமண்டலத்துக்கு அதிபர்களான மற்றைய ராஜாக்கள் அக்காலத்தில் எவ்வளவு பேர் இருந்தார்களோ அவர்களெல்லாரும் தர்மஸேந மஹாராஜரை யாசித்தபோதிலும் கன்னிகை விரும்பாததால் அவளை அடையமுடியவில்லை. அப்படி அவர்களுக்கு அந்தப் பெண் கிடைக்காததல் மிகவும் பொருமை கொண்டிருந்தார்கள்.

एवं निश्चित्य भूपाले वर्तमाने महा बले।

तस्मिन् काले वसुमती कन्यकाभिस्समावृता।।१२।।

पुष्पापचयलीलार्थं ययौच सरसस्तटम् ।

அஸ்த்ரங்களாலும் மற்ற ஆயுதங்களாலும் கோட்டை சேனை முதலிய பலத்தினுலும் ஒருவராலும் ஜயிக்கக்கூடாதவரான தர்மஸேந மஹாராஜன் இப்படி நிச்சயித்துக்கொண்டு தகுந்த வரனுடைய வரவை எதிர்பார்த்து நின்றபோது அவரது புதல்வியான வஸுமதி ஒத்த பருவமுடைய பல கன்னிகைக ளால் சூழப்பட்டவளாய், பூக்கொய்தலாகிற விளையாட்டிற்காக ஶ்ரீஹ்ருத்தாபநாசநமென்கிற ஸரஸ்ஸினுடைய கரைக்குச் சென்றுள்.

तत्तीरे वन्य पुष्पाणि विचिन्वन्ती चचारह।।१३।।

ददर्श पुरुषं तत्र युवानममितौजसम्।

प्रभामण्डल मध्यस्थं स्मेरवक्त्र सरोरुहम्।।१४।।

அந்த கன்னிகை அந்த ஹ்ருத்தாபநாசந ஸரஸ்ஸின் கரையிலே அங்குள்ள வனத்திலுள்ள புஷ்பங்களைப் பறிக்கின்றவளாய்

உலாவிக்கொண்டிருந்தாள். அது ஸமயம் 'தருணௌள ரூப ஸம்பந்நௌள' என்று பெண்களுடைய கண்களே முதலடியிலேயே ஈர்க்கக்கூடிய இளமைபிராயத்தின் துவக்கத்திலுள்ளவராயும் கோடிஸூர்யோதயமும் எடுத்துக்காட்டாக ஆகமாட்டாமையால் அளவிடமுடியாத காந்தியை உடையவராயும் பாலசூர்ய மண்டலம்போலே தம்முடைய சரீரத்திலிருந்து புறப்பட்ட ஒளிக்கத்தையாலே பத்துதிக்கிலும் வேலியிட்டுக் கொண்டிருப்பதால் பார்ப்பவருடைய கண்களால் காணமுடியாதவராயும் தாமரைமலர்ந்தாப்போலே புன்முறுவல் பூத்த திருமுகம் உடையவருமான புருஷனேப் பார்த்தாள்.

तस्मिन्निपतितां दृष्टिं निवर्तयितुमक्षमा।

व्यतिष्ठत तदातत्र कृत्याकृत्यविमोहिता।।१५।।

''रामं मेऽनुगता दृष्टिरद्यापि न निवर्तते'' என்கிறபடியே ஸாக்ஷாந் மன்மதமன்மதனை அந்த புருஷனிடத்தில் குடிபுகுந்து அங்கேயே லயித்து நின்ற தன் பார்வையை அவ்விஷயத்தினின்றும் விடுவித்துக்கொள்ள இயலாதவளாய் அப்போது தான் நின்றஇடத்திலேயே, தனக்குச் செய்யவேண்டியது இதுவென்றும், செய்யத்தகாதது இதுவென்றும் அறியவொண்ணுதபடி மதிமயங்கியவளாய் மரம் போல் திகைத்து நின்றுவிட்டாள்.

पुरुषोपि च तां दृष्ट्वा राजपुत्रीं यशस्विनीम्।

प्रहृष्ट स्तामुपागम्य परिणेतुं मनोदधे।।१६।।

தன்னே மணக்கவந்த பலநாட்டு அரசகுமாரர்களேப் பரிஹஸித்துத் துரத்திவிட்டமையால் எல்லாதேசங்களிலும் தன் அழகாலே பேர்பெற்றவளான அந்த அரசகுமாரியை அந்தப் புருஷனும் நன்கு கடாக்ஷித்து பேராநந்தம் கொண்டவராய் அருகே சென்று

''राघवत्वेऽभवत्सीता रुक्मिणी कृष्ण जन्मनि अन्येषुचावतारेषु

विष्णोरेषानपायिनी देवत्वे देवदेहेयं मनुष्यत्वे च मानुषी विष्णोर्देहानुरूपां वै करोत्येषात्मनस्तनुम्'' என்று மர்மம் அறிந்தவரான பராசரர் அருளிச்செய்தபடியே திருவெவ்வுள்ளில் படுக்கையோடு குடிபுகுந்தமை அறிந்து கொண்டு திருமகளே இவ்வடிவுகொண்டுவந்து, நிற்கின்ருள். ''நித்யம் தத்தர்ம தர்மிணீ'' என்று ரிஷிசொன்னபடியே மத்தர்மதர்மிணியாய் இறையும் அகலகில்லாதவளாய் ''ஸ்வத: ச்ரீ: த்வம் விஷ்ணோ: ஸ்வமஸிததஏவைஷ பகவான்'' என்று நம் அரங்கநகராளும் பராசரபட்டர் அருளிச்செய்தபடியே நமக்கு பகவத்வம் கொடுத்தவளான அல்லிமலர்மகள் ஸ்வயம்வரமாய் நாமிருந்த இடம் தேடிவந்திருக்க விடுவோமா? இவளுக்காக அல்லவா அலைகடலைக் கடைந்திட்டோம். அக்கடலிலே மலைகொண்டு அலைநீர் அணைகட்டிேனும். செவ்வரிநற்கருநெடுங்கண் சீதையான இவளுக்காக அன்ருே சினவிடையோன் சிலையறுத்தோம். இவளது நிழல் போன்றவளான நப்பின்னைக் காக அல்லவா இளவேறு ஏழும் தழுவினேம். ''ந ஜீவேயம் க்ஷணமபி விநாதாம் அஸிதேக்ஷணும்'' என்கிறபடியே இமைப்பொழுது தான் செல்லுமோ? ஆகையால் இவளை அடையும் வழியைத் தேடக்கடவோமென்று திருவுள்ளம் கொண்டான்.

तत्पार्श्वस्थां प्रतीहारीं रक्षिणीं लक्ष्य विक्रमम् ।
सहायुधां सपप्रच्छ कन्या कस्येति सादरम् ।।१७।।

அந்த புருஷன் அந்த கன்னிக்கு அருகிலுள்ளவளாயும், அரசகுமாரியைப் பரிவோடு பாதுகாப்பவளாயும், போருடை உடுத்தியிருப்பதனுல் உள்ளிருக்கின்ற வலிமை வெளியில் தெரியும்படியாயிருப்பவளாயும், கையில் கூரிய படையை ஏந்திநின்றவளாயுமுள்ள வாசல் காப்பவளின் அருகே சென்று வாராய் பெண்பிள்ளாய்! இந்தக்கன்னி யாருடைய குமாரத்தி? எனக்கு உண்மையைச் சொல்லவேண்டுமென்று ஆர்வமுடன்

வினவியருளினன்.

तस्य सन्दर्शनादेव पूर्णोराज्ञो मनोरथः।
इतिनिश्चित्य चैनं सा प्रत्युवाच यथातथम् ।।१८।।

இவ்வாறு வினவிய ராஜபுருஷனுடைய வடிவழகைக் கண்ட மாத்திரத்திலேயே அந்த வாயில் காப்பவள் நமது தர்மஸேந மஹாராஜரது மநோரதம் பரிபூர்ணமாக நிறைவேறிவிட்டது என்று நிச்சயித்து அந்த ராஜபுருஷனைப் பார்த்து அந்த கன்னியினுடைய உண்மைநிலையை உள்ளவாறு எடுத்துரைத்தாள்.

चिन्तयामास साकन्या तदानन्दविमोहिता।
पितुरेव ममैवास्तु सर्वसौन्दर्य सञ्चयः ।।१९ ।।
देवोवा मानुषो वापि मम भर्ता भवेदयम् ।
अद्यमे सफलं जन्म वरोयदि भवेदयम् ।।२० ।।
दैवेनानुगृहीतास्मि यदिमां प्रार्थयेदयम् ।
नचास्य सदृशोलोके ममचित्तहरः प्रियः ।।२१ ।।
स्वानुरूप्येण वरयेद्यदि मामद्य सांप्रतम् ।
तदाहं कृतकृत्यास्मि पिताकच्चित्प्रसीदति ।।२२ ।।
यदिवा मम सौन्दर्यमुग्धो मामुपनेष्यति ।
तदामे सफलः कामः यदिभर्ता भवेदयम् ।।२३ ।।

''காலாழும் நெஞ்சழியும் கண் சுழலும்'' என்கிறபடியே அந்த திவ்யபுருஷனுடைய திவ்யமான தேஹத்தின் அழகைக்கண்டு மயங்கிய அந்தப்பெண் அப்போது இப்படி நினைத்தாள். ''பிதுரேவ'' என்கிறவிடத்தில் ''ஆஇவ'' என்று பதச்சேதம் 'ஆ' என்று நினைவைச்சொல்லுகிறது. தன்னில் தான் நினைவு கொண்டு தங்கள் தகப்பனுரையும், ''தந்யாபித்ருமுகீகந்யா'' என்கிறபடியே அவர் போலுள்ள தன்னையும் தனது

அங்கப்ரத்யங்க ஸௌஷ்டவத்தையும் எண்ணினுள். நல்லது. எங்கள் அய்யாவைப்போலேவே அவயவஅழகு ஸமுதாய சோபை (லாவண்யம்) எல்லாம் எனக்கும் உள்ளது. ஸித்தத்தை விசாரித்துப் பயன் என்ன? அஸித்தத்தையல்லவா விசாரிக்க வேண்டியது. இப்புருஷன் மநுஷ்யர்களுக்கில்லாத உத்தமநாயக சின்னங்களை உடையவனுயிருப்பதனுலே மன்மதனே? அல்லது அவனைப் பிறப்பித்த புருஷோத்தமனே? பூமியில் கால் படிந்திருப்பதால் தெய்வாம்சம் பொருந்திய மனுஷ்யனேயோ? மஹாராஜகுமாரர்களுக்கும் ஸாமுத்ரிகத்தில் சொன்ன எல்லா லக்ஷணங்களும் உள்ளதேயன்றே? இந்த விசாரம் எனக்கெதற்கு? இந்த புருஷன் தேவனேயாயிடுக அல்லது மனுஷ்யனே ஆயிடுக. எப்படியானுலும் இந்த புருஷன் எனக்குக் கணவானுகவருவாரா? இவரை நான் கணவராகப் பெறுவேனுனல் என் ஜன்மம் ஸபலமாகிவிடும். இந்த புருஷன் ''பாதௌ சாத்வநகோமளௌ'' என்கிறபடியே வழிநடக்க நடக்க செந்தளிர்செந்தாமரைப்பூப்போலுள்ளதாயும், எனது மெல்லிய சிறுகைகளாலே வருடத்தக்கதாயுமுள்ள தனது மெல்லடிக ளாலே நடந்து சென்று நம் தகப்பனுரைக்கிட்டி தமது புன் சிரிப்புடன் கூடிய வாயாலே எனக்காக யாசித்தாத்தாரேயானுல் என்னுலே காலந்தோறும் பூஜை கொள்கின்ற நமது குலதெய்வத் தாலே அநுக்ரஹிக்கப்பட்டவளாவேன். மிகப்பரந்த இவ்வுலகில் நான் காணுத ராஜகுமாரர்களில்லேயே. அவர்களில் ஒருவன் கூட எனதுள்ளத்தைப் பறித்திடும்படியான வடிவழகுடையவனுயும், அல்லது இந்த புருஷனுக்குச் சற்றே சமமானவன் என்று சொல்லும்படியானவனும் இல்லே. ''தாஸ்யேப்யஸ்ய நயுஜ்யஸே'' என்கிறபடியே இந்தப்புருஷனுக்குப் பணிவிடை செய்யக்கூட எவனும் தகுதியுள்ளவன் ஆகமாட்டான். இந்த புருஷோத்தமன் चन्द्रकान्ताननं राममतीव प्रियदर्शनम्। रूपौदार्य गुणैः पुंसां दृष्टिचित्तापहारिणम्। तं पद्मदलपत्राक्षं सिंहविक्रान्त गामिनम्। रूपसंहननं लक्ष्मीं सौकुमार्यं सुवेषताम्।

ददृशुर्विस्मिताकारा रामस्य वनवासिन: என்கிறபடியே எல்லாஜனங்களுடைய கண்ணேயும் நெஞ்சையும் கவரும் படியான இவர் தம்முடைய வடிவழகுக்கு, ''तञ्चेयमसितेक्षणा'' ''कनद्युतियुवदशामपिमुग्ध दशाम् '' ''दरदलदरविन्दो दन्तकान्तायताक्षि'' ''कनकनिकष चंचच्चचंपकस्त्रक्समानप्रवरमिद मुदारंवर्ष्मवाचामभूमि:'' இத்யாதி களின்படியே நான் இவருக்கு ஒத்தவளாயிருக்கையாலே, திருவுள்ளமிரங்கி பள்ளிகொள்ளு மிடத்தடிகொட்டிடக் கொள்ளும்படி அந்தரங்க கைங்கர்யத்துக் குகாக என்னே வரித்திட்டாராஞல் அது ''தத்து மேஸ்யாத் யசஸ்கரம்'' என்கிறபடியே பொருத்தமாயிருக்கும். அப்போது நானும் க்ருதார்த்தையாவேன். இது விஷயத்தில் நம் தந்தை உகந்தருள்வாரா? இந்த உத்தமபுருஷன் எனது வடிவழகிலே மயங்கி எனக்குக் கணவராய் என்னேத் தம்முடைய இருப்பிடத்துக்கு அழைத்துச் செல்வாரேயாஞல் அப்போது தான் எனது விருப்பம் ஸபலமாகும் என்றிவ்வாறு சிந்தித்தாள்.

इति सञ्चिन्तयन्तीं तां आससाद समीपत: ।
स बालस्मित वक्त्राब्ज: तां कन्याञ्च विमोहयन् ।।२४।।
तामुवाच चतेजस्वी विवशां काम मोहिताम् ।

தாமரைபோன்ற திருமுகத்தில் புன்சிரிப்புப்பூத்தவராய் ''தமேவபாந்தம் அநுபாதி ஸர்வம் தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி'' என்கிறபடி அனேத்துலகையும் கடந்த ஒப்பற்ற ஒளியை உடையவரான அந்த புருஷன், கீழே சொன்னபடி சிந்தித்து நிற்பவளும், மன்மத பாணத்தால் அறிவிழந்து நிற்பவளும், தனது அவயவங்கள் அனேத்தும் செயலிழந்து நிற்பவளாயுமுள்ள அந்த கன்னியை மேலும் காமப்பித்துப் பிடித்தவளாக்க எண்ணி அவளருகே சென்ருர். அத்துடன் நில்லாது ஒருவார்த்தையும் சொன்னுர்.

राजपुरुषः

कात्वं कमल पत्राक्षि कन्यकाभि स्समावृता ।।२५ ।।

कः पिता कोनुवा देशो जननी का वदस्वमे ।

தாமரைக்கண்ணனுன எனக்குப் போட்டியாய் மலர்ந்த தாமரை மலரின் இதழ் போன்று ஒளியும், பரப்புமுடைய கண்கொண்டு கண்டவர்களையெல்லாம் மதிமயங்கச்செய்பவளே! உனது நிழல் போன்றதோழிகளால் சூழப்பட்டுள்ள உன் பெயரென்ன? உனது பொன்னடிகள் உலாவப்பெற்ற தேசத்தின் பெயரென்ன? ''ஜநகாநாம் குலே கீர்த்திம் ஆஹரிஷ்யதி மே ஸுதா'' என்கிறபடி குலவிளக்கான உன்னைப் பெற்ற வயிறுடையாள் பெயரென்ன? எனக்கு இவ்விஷயங்களையெல்லாம் உள்ளபடியே சொல்வாயாக என்று ராஜபுருஷன் அக்கன்னியை வினவிநின்ருன்.

कन्यका

अहं वसुमतीनाम धर्मसेनः पितानृपः ।२६ ।।

जननी गौतमी देवी देशोऽयं कन्यकाप्यहम्

मत्पिता सद्वरान्वेषी सदृशो नोपलभ्यते ।।२७ ।।

வாரீர் புருஷோத்தமனே! நான் வஸுமதீ என்ற பெயரால் நாட்டில் வழங்கப்படுமவள். எனது தந்தை தர்மஸேநர் என்கிற அரசன். என் தாய் கௌதமீதேவி. இப்போது நான் உலவுகின்ற தேசம் தான் எங்கள் தேசம். நான் இதுவரை எவருக்கும் கன்யாதாநம் செய்யப்பெருத கன்னியாயுள்ளேன். எங்கள் அய்யர் நான் மனம் மகிழும்படியான நல்ல வரனைத் தேடிக்கொண்டிருக்கிருர். ''ராகவோர்ஹதி வைதேஹீம்'' என்கிறபடி என்னைக் கைப்பிடிக்கத் தக்க வடிவழகு முதலான குணபூர்த்தி உடைய வரன் இன்றளவும் கிடைக்கவில்லை.

राजपुरुषः

अहं राजसुतः कश्चिन्मम सर्वमिदं जगत् ।

चरामि वसुधां कृत्स्नां कन्यकान्वेषणोन्मुखः ।।

இப்படி தன் வ்ருத்தாந்தத்தைச் சொல்லிமுடித்த ராஜபுருஷன் ராஜகுமாரியைக் குறித்து மீண்டும் சொல்லுகின்றான். வாராய் அரசகுமாரியே! நானும் உன்னைப்போலவே அரசனின் குமாரன் தான். இந்த உலகம் முழுதும் என்னுடைய தேசமே தவிர வேறு இல்லை நானும் ''தஞ்சேயமஸிதேக்ஷண'' என்கிறபடி எனக்கொத்தவளான கன்னியைத் தேடமுற்பட்டு பூமிமுழுவதும் ஸஞ்சரித்துவருகிறேன்.

वसुमती

राजपुत्रत्वया सम्यक् प्रार्थनीयः पिता मम।

तव सन्दर्शनादेन सर्वं दास्यत्यसंशयः ।।२९ ।।

उपायं तत्रवक्ष्यामि राजपुत्रनिरत्ययम् ।

मयिते यदि वाञ्छास्यात्तत्कुरुष्व च माचिरम् ।।३० ।।

अत्रशेते जगन्नाथः सर्वाभीष्ट फलप्रदः ।

मधुकैटभयोर्हन्ता सर्वलोकाभयप्रदः ।।३१ ।।

अमुमाराध्य विबुधा मनुष्याद्यानृपात्मज ।

पुत्रकामश्च बहवः कृतकृत्याभवन्ति हि ।।३२ ।।

आराधयस्वत्वञ्चेनं इष्टसिद्धिर्भविष्यति ।

இப்படிச் சொன்ன ராஜகுமாரனைக் குறித்து வஸுமதி பதில் சொன்னாள். வாரீர் ராஜகுமாரரே! நீர் சொன்னது உண்மையா யிருந்தால் எங்கள் அய்யாவை முறையாகக் கண்டு ப்ரார்த்தனை செய்யும். உம்முடைய வடிவழகைக் கண்டமாத்ரத்திலேயே என்னைத் தானம் செய்வது தவிர ஸர்வஸ்வத்தையும் உமக்கே ஸமர்ப்பித்து விடுவார். ராஜகுமாரரே! இந்த காரியம் முடியும்படி எந்தவிதமான கேடுமின்றி ஓருபாயம் சொல்லுகிறேன். என்னிடத்தில் உமக்கு விருப்பமிருக்குமானால் நான் சொல்லப் போகிற உபாயத்தை விரைந்து செய்வீராக. அதாவது இந்த

தடாகத்தின் வடகரையில் உள்ள செம்பொன் செய்த கோயிலில் பயனை வேண்டுமவர்களெல்லாராலும் ப்ரார்த்திக்கப்படுமவராய், அவரவர் விரும்பிய பலன்களையெல்லாம் தருபவராய், முன்காலத்தில் அஸுரர் குலத்தலைவர்களான மதுகைடபர்களைக் கொன்றவராய் துயருற்று நிற்கின்ற அனைத்து மக்களுக்கும் அபயமளிப்பதாகக் கங்கணம் கட்டிக்கொண்டிருப்பவருமான ஸ்ரீவீரராகவன் பள்ளிகொண்டிருக்கிறார். இந்தப் பெருமாளை தேவர்களும் மனுஷ்யர்களும் மற்றுமுள்ளவர்களும் தத்தம் மநோரதம் நிறைவேறக் கருதினவர்களாய் ஆராதித்து அந்தப் பலன்களைப் பெற்று க்ருதார்த்தர்களாகி நின்றார்கள். நீரும் இந்த பெருமாளை ஆராதித்தீரானால் நீர் விரும்பியதெல்லாம் ஸித்திக்கும்.

इत्युक्तस्तां राज पुत्रस्मित पूर्वमभाषत ।।३३ ।।
अभीष्ट फलदं विद्धि सर्वेषाञ्च वरानने ।
फलार्थं वा वरार्थं व नान्यं कञ्चिदुपाश्रये ।।३४ ।।
मम पाणिग्रहे वाञ्छा यदि तेऽस्ति शुभानने ।
एतेनचाप्युपायेन प्रत्यूहो नभविष्यति ।।३५ ।।

இப்படி வஸுமதியினாலே விண்ணப்பிக்கப்பெற்ற ராஜபுருஷன் புன்சிரிப்போடு சொல்லும் நோக்கில் திருவாய்மலர்ந்தருளினார். சரத்கால சந்திரபிம்பம் முதலான எதுவும் எதிரே நிற்கமுடியாத லாவண்யவைபவம் உடைய முகத்தினாலே நம் போன்றவர் களைத் தோல்வியுறச் செய்கின்ற வசுமதியே! நாம் ''ந ப்ரதிஹ்ருஹ்ணீயாத்'' ஒருவர் கைமேலிருக்க நம்முடைய கையைக் கீழே நீட்டி வாங்க வல்லகுலமல்ல. இது மட்டுமல்லாது ''தத்யாத்'' என்கிறபடி, என்னிடம் வேண்டுகிறவர்கள் வேண்டுகின்றபடி எல்லாவரன்களையும் தரவல்லோம். இவ்விஷயத்தை உன் மனத்தில் நன்றாக ஊன்றிக்கொள்வாயாக. இம்மைப்பயனுக்கோ, மறுமைப் பயனுக்கோ வேறு எந்த பலனுக்காகவோ என்னை

அண்டியவர்கள் விரும்பும் வரங்களுக்காகவோ நாம் ஒருவரையும் யாசிக்கமாட்டோம். தன்னை நினைப்பவர்களுக்கு எல்லா நன்மைகளையும் தரவல்ல திருமுகமுடையவளே! உனக்கு நம்முடைய பாணிக்ரஹனத்தில் விருப்பமிருப்பது உண்மையானால் உங்கள் குலதெய்வமாய் எல்லாருக்கும் எல்லா பலன்களையும் தருபவரான ஸ்ரீவீரராகவனாலேயே இந்தக் கார்யத்துக்கு இடையூறொன்றும் வராது.

एतच्छ्रुत्वा तु सा कन्या यथेप्सित मनोरथा ।

तस्मिन् सिद्धि मनुप्राप्यव्यादिदेशपितुः स्वयम् ।।३६ ।।

அந்த ராஜபுருஷன் திருவாய்மலந்தருளின இந்த வார்த்தையைக் கேட்டு அந்த வஸுமதி அந்த ராஜபுருஷனுடைய விருப்பத்துக் கீடான தன் எண்ணமுடைவளாய் அவரைத் திருமணம் செய்துகொள்ளத் தீர்மானித்துத் தன் தகப்பனாருக்குத் தானே செய்தி சொல்லி தூதனை அனுப்பினாள்.

वचो निशम्य कन्यायाः धर्मसेनः पितातत‌ः ।

ब्राह्मणैर्मन्त्रिभिस्सार्धं राजपुत्रमुपागमत् ।।३७ ।।

பின்னர் பிதாவான தர்மஸேந மஹாராஜன் தன் பெண்வஸுமதி அனுப்பிய செய்தியைக் கேட்டு ரித்விக்குகள் புரோஹிதர்கள் ஆசார்யர்களான அநேக ப்ராம்மணர்களோடும் மந்த்ரிகளோடும் ராஜபுத்ரன் இருக்கின்ற இடத்துக்கு வந்தான்.

राजपुत्रंतु तं दृष्ट्वा रूपयौवनसंपदा ।

कृतकृत्यमिवात्मानं मन्यमानोऽब्रवीदिदम् वचः ।।३८ ।।

தர்மஸேநர் தம்முடைய கண்களாலே அந்த ராஜபுத்ரனை நன்றாகப் பார்த்து அவரது வடிவழகினாலும் யௌவனம் தலைக்காட்டியதாலும் பரவசப்பட்ட மனத்தினராய் ஸ்ரீசக்ரவர்த்தித் திருமகனையும் இளையபெருமாளையும் ஸேவித்த

ஸ்ரீஜநகராஜன்

''इमौ कुमारौ भद्रंते देवतुल्यपराक्रमौ

गजसिंहगतीवीरौ शार्दूल वृषभोपमौ
पद्मपत्रविशालाक्षौ खड्गतूणीधनुर्धरौ
अश्विनाविवरूपेण समुपस्थित यौवनौ
यदृच्छयेव गां प्रप्तौ देवलोकादिवामरौ
कथं पद्भ्यमिह प्राप्तौ किमर्थं कस्यवामुने
भूषयन्ताविमं देशं चन्द्रसूर्यविवाम्बरम्

என்று ஆச்சர்யப்பட்டாப்போலே ஆச்சர்யப்பட்டு ''தந்யோஸ்மி அநுக்ருஹிதோSஸ்மி'' என்றுப்போலே தம்மைக் க்ருதார்த்தராக நினைத்தவராய் சொல்லவேண்டிய முறைப்படி ராஜகுமாரனைக் குறித்து விண்ணப்பம் செய்கின்றார்.

राजा
आश्रितस्त्वमिमं देशं शोभयस्याभयास्वया
कस्य पुत्रोऽसि कथय किमर्थं त्वमिहागतः ।।३९ ।।
ब्राह्मणः क्षत्रियोवापि देवोवाजन्मतस्स्वयम्
सदृशो मत्सुतायाश्च इति मे निश्चितामतिः ।।४० ।।
हिताहिते च मनसः प्रवृत्तिः कथयत्यसौ
त्वद्दर्शनाद्धि मनसः प्रसादो भवति ध्रुवम् ।।४१ ।।

வாரீர் மணவாளனே! இவ்விடத்தை இருப்பிடமாகக் கொண்ட நீர் இந்த ப்ரதேசத்தை உமது சரீர காந்தியினாலே ஒளிவீசித் திகழச் செய்துள்ளீர். நீர் யாருடைய குமாரர்? எந்த ப்ரயோஜனத்தைக் கருதி இந்த வட்டாரத்தை அலங்கரித்துள்ளீர். நீர் ஜாதியிலே ப்ராம்மணனா அல்லது க்ஷத்ரியனா அல்லது தேவனா? இந்த ஜாதிகளில் நீர் யாராயிருந்தாலும் எனக்கு விருப்பம் தான். எனது பெண்ணுக்கு மிகவும் ஏற்றவராயிருக்கின்றீர். இவ்விஷயத்தில் உறுதியான புத்தி எனக்கு உண்டாயிருக்கின்றது.

सतांहि सन्देहपदेषु वस्तुषु. प्रमाणं अन्तः करणप्रवृत्तयः

என்கிறபடி சுத்தாத்மாக்களின் மனஸ்ஸின் ப்ரவ்ருத்தியே முயல்கின்ற கார்யம் நன்மை பயப்பதே என்றும் அப்படிப்பட்டதன்று என்றும் நினைவுறுத்துகின்றது உமது திவ்யமங்கள ஸேவையினுல் என்மனத்திற்கு மிகவும் ஆநந்தம் உண்டாயிருக்கின்றது. இந்த ஸூசகம் காரணமாகவே என் எண்ணம் ஈடேறியதாக நிச்சயித்துக்கொண்டேன்.

इत्युक्त्वा मन्त्रिभिस्सार्धं मन्त्रिविद्भिर्द्विजोत्तमैः ।

आलोड्यतत्प्रदानेच व्यवसायं चकारसः ।।४२ ।।

அந்த தர்மஸேந மஹாராஜன் ராஜகுமாரனைக் குறித்து இப்படிச் சொல்லிவிட்டு மந்த்ரஜ்ஞர்களான மந்திரிகளோடும் ப்ராம்மணோத்தமர்களோடும் நன்கு ஆலோசித்து

अत्यद्भुतमचिन्त्यञ्च नतर्कितमिदं मया

जनकानां कुले कीर्तिमाहरिष्यति मे सुता

सीताभर्तारिमासाद्य रामं दशरथात्मजम्

ममसत्या प्रतिज्ञाच वीर्यशुल्केति कौशिक ।

सीताप्राणैर्बहुमता देया रामाय मे सुता ।।

என்று ஸ்ரீஜநகராஜன் நிச்சயித்தாப்போலே கொம்பனுர்க்கெல்லாம் கொழுந்தாய் தன்குலத்துக்குத் திருவிளக்கான தன் பெண்ணை அந்த ராஜகுமாரனுக்குக் கொடுக்கத்தீர்மானித்தார்.

राजपुत्रः

अहमत्रश्रियासार्धं निवसाम्यत्र सर्वदा

अनेनैव शयानेन तदर्थं विष्णुना शपे ।।४३ ।।

தர்மஸேநன் கேட்ட கேள்விக்கு ராஜபுத்ரன் பதில் சொல்கின்றுர். வாரீர் மஹாராஜரே! நமது ஊரும் பேரும் தந்தையும் தாயும்

சொல்லி முடியுமோ? உம்மால் தான் கேட்டுமுடியுமோ? உம்முடைய ஜாதி பலருக்கு ஒவ்வொன்ருயிருக்கும். நம்முடைய ஜாதி நமக்கேயாயிருக்கும். உம்முடைய பேர்போலே நம்முடைய பேர் ஒன்ருகவா இருப்பது? நமக்கு மஹர்ஷிகளிட்ட பெயர்களுக்கு கணக்குண்டோ? நீர் மஹாராஜராயிருந்து நம்மை உம்மூர் என்ன? உம்முடைய பேரென்னன என்று கேட்கத் தகுமோ? அதுகிடக்க, ''आत्मनाम गुरोर्नाम नामाति कृपणस्यच । श्रेयस्कामो नगृह्णीयात्'' ''தன் பெயர் குருவின் பெயர் கருமியின் பெயர் இவற்றை ச்ரேயஸ்ஸை விரும்புமவர் சொல்லக்கூடாது'' என்று பள்ளிக்கூடத்தில் நீர்சொல்லிக் கேட்டதில்லேயோ? நன்மையை வேண்டிவந்தநாம் நம் பேரும் சொல்வதில்லே. நம்பெரியோர் பேரும் சொல்வதில்லே. நம்முடைய பெண்ணேக் கூட்டிக்கொண்டு எந்த தேசம் போவாரோ என்று அஞ்சவேண்டாம். நம்முடைய ஸம்பத்தோடு நாம் இங்கேயே வசித்திருப்போம். இவ்விஷயத்தில் உமது அச்சம் தீரும்படி இந்த க்ஷேத்ரத்தில் ஐவாயரவணேமேல் புல்புள்ளித்துப்பட்டியோடு பள்ளிகொண்டிருக்கின்ற பெருமாள் மீது ஆணேயிட்டுத் தருகின்றேன். காக்கையின் பல்லேக் கணிப்பது போலவும், மெக்கையின் பலத்தை நிறுப்பது போலவும் இந்த விசாரம் உமக்கெதற்கு? கன்னிகைக்குத் தக்கவரே தான் வருவார் என்று உமக்கு இவ்வளவே தான் தெரியவேண்டாமோ? என்றிப்படி ஊரும்பேரும் ஒன்றும் சொல்லாமலே தம் அழகுக்குத் தோற்று நிற்கும் தர்மஸேந மஹாராஜரை அதிரப்பதற அடித்து கோபமுள்ளவர் போல நடித்து முடித்தார்.

संप्रहृष्टमनास्तेन धर्मसेनः परन्तपः ।
ददौ वसुमतीं तत्र राजपुत्राय कामिनीम् ।।४४ ।।

வில் முதலிய ஆயுதம் ஏதும் எடுக்காமலே தமது தேஜஸ்ஸினுலே சத்ருக்களேக் துடிக்கப் பண்ணுகின்ற தர்மஸேந மஹாராஜர், ''எப்போதும் இங்கேயே இருக்ககடவன்'' என்று பெருமாளேத் தொட்டு ஆணேயிட்டு ராஜபுத்ரன் சொன்ன

வார்த்தையினலே பெருமகிழ்ச்சி கொண்டவராய் அந்த க்ஷேத்திரத்திலேயே கல்யாணப்பந்தலிட்டு ராஜபுத்ரன் வடிவழகில் ஈடுபட்டு, பெருவிடாய்ப்பட்டவர் ''தண்ணீர், தண்ணீர்'' என்னுமாப்போலே மேல்விழுந்து துடிக்கின்ற தன் பெண்ணை, ''इयं सीता मम सुता सहधर्मचरी तव । प्रतीच्छ चैनां भद्रं ते पाणिं गृह्णीष्व पाणिना पतिव्रता महाभागा छायेवानुगता सती इत्युक्त्वा प्राक्षिपद्राजा मन्त्रोदक पुरस्कृतम्'' என்று ஸ்ரீஜநகராஜன் பிராட்டியைக் கன்னிகாதானம் பண்ணினப் போலே அந்த ராஜபுத்ரனுக்கு கன்னிகாதானம் பண்ணினர்.

तस्मै ददौ तया सार्धं धनधान्यमनेकशः ।
पशुहस्ति गृहाराम क्षेत्रं दास गणान्यपि ।।४५ ।।

தர்மஸேந மஹாராஜர் மாப்பிள்ளையான ஸ்ரீவீரராகவனுக்கு தன் பெண்ணான வஸுமதியோடு கணக்கற்ற தநங்களையும், அளவிடமுடியாத தாந்யங்களையும், பசு குதிரைகளையும், ஆடு ஆகியவற்றையும், உயர்ந்த யானைகளையும், வீடுகள் தான்யங்களையும், ஸாரம் மிக்க நன்செய் புன்செய் நிலங்களையும் பல பணிப்பெண்கள் கூட்டத்தையும் தானம் பண்ணினர்.

गृहीत्वा तत्कराम्भोजं स्वकराम्भोरुहेणच
अनन्त शयने तस्मिन् आरुरोह तया सह ।।४६ ।।

அந்த ராஜகுமாரன் தர்மஸேந மஹாராஜா கொடுத்த சீர்வரிசைகளோடு கூட திருவெவ்வுள் கிடந்தானை ஸேவிக்கின்றவர்போலே திரு எவ்வுள்கோயிலுக்குள் சென்று ஸமஸ்த பரிஜநங்களும் தர்மஸேந மஹாராஜரும் பார்த்துக் கொண்டிருக்க செந்தாமரைப் பூப்போலே மெல்லியதாயும், சிவந்த அழகுபொருந்தியதாயுமுள்ள வஸுமதியின் கையை மலர்ந்த தாமரையின் நடுப்பாகத்தைப் போன்று சிவந்த தம்முடைய திருக்கையினலே பிடித்துக்கொண்டு பெருமானருகே செல்ல அப்போது என்ன செய்கிருரோ பார்த்திடுவோமென்று

எல்லாரும் இமைகொட்டாமல் பார்த்திருக்க அந்த ராஜகுமாரன் வஸுமதியைக் கைப்பிடித்த படியே திருவநந்தாழ்வானுகிற திருப்பள்ளிமெத்தையில் ஏறியருளி ராஜகுமார ரூபத்தை மறைத்து பெரியபிராட்டியாரும் தானுமாய் ஸேவை ஸாதித்தருளினுர்.

तंदृष्ट्वा प्राणिनस्सर्वे ननृतुस्तुष्ट मानसाः
नृपतिस्तत्प्रसादेन परां सिद्धि मुपागतम् ।।४७ ।।

ஒரு கணத்துக்கு முன்பு மணவாட்டிப் பெண்ணும் மணவாளப்பிள்ளேயுமாய் ஸேவை ஸாதித்த தம்பதிகள் மறுகணத்திலேயே பெரியபிராட்டியாரும், பெரியபெருமாளு மாக ஸேவை ஸாதிக்கக்கண்ட ஸமஸ்த பிராணிகளும் பேராநந்தமுற்றவர்களாய் ஆச்சர்யப்பட்டு ஆரவாரத்துடன் நர்த்தனம் பண்ணிஞர்கள். தர்மஸேந மஹாராஜரும் பெருவியப்பும் ஆநந்தமும் கொண்டவராய் தன்பெண்ணேக் காணுமையால் கண்ணீர்விட அவரைப் பெருமாள் கடாக்ஷித்தருளி மஹாராஜரே! இப்போது நம் அருகே உள்ள திருமகள் தான் உமக்கு வஸுமதி என்ற பெண்ணுய்ப் பிறந்திருந்தாள். நாம் தான் மணவாளப்பிள்ளேயாய்வந்து அவளே மணந்துகொண்டோம். எங்களிருவரையும் நீர் தினந்தோறும் கண்குளிரப் பார்த்துக்கொண்டிருப்பீராக. உமது முடிவு காலத்தில் உம்மை நாம் நம் பெரியவீட்டில் (பரமபதத்தில்) நித்யகைங்கர்யஸாம்ராஜ்யத்தில் முடிசூட்டக்கடவோம் என்று திருவாய்மலர்ந்தருளினுர். அப்படியே மஹாராஜரும் தெளிந்த மனத்தினராய் நாள் தோறும் திவ்யதம்பதிகளே அநுபவித்துக் கொண்டு பல ஆண்டுகள் சென்றபின் பெருமாளது அநுக்ரஹத்தாலே நித்யவிபூதியில் நித்யகைங்கர்ய ஸாம்ராஜ்யத்தைப் பெற்ருர்.

पुण्यावर्तस्य माहात्म्यं कथितं तव सुव्रत ।
अरण्यस्यच तीर्थस्य किंभूयः कथयामिते ।।४८ ।।

ये जन्म कोटिभिस्सिद्धः तेषामन्तेऽत्र संस्थितिः

नराणां क्षीणपापाणां कृष्णे भक्तिः प्रजायते

बहूनां जन्मना मन्ते ज्ञानवान् मां प्रपद्यते

என்கிறபடி பற்பல ஜன்மங்களில் அநுஷ்டித்த பகவத் வ்ரதங்களிஞலே மோக்ஷ மார்க ப்ரவர்த்தகரான ஸஹஸ்ராநீகரே! உமக்கு புண்யாவர்த்த க்ஷேத்ரத்தின் வைபவமும், வீக்ஷாரண்யத்தின் வைபவமும், ஹ்ருத்தாப நாசந தீர்த்தத்தின் மாஹாத்ம்யமும் நன்ருகச் சொல்லிவிட்டேன். நாம் உமக்கு இன்னமும் என்ன சொல்லவேண்டும்.

मधुमथननिकेतने निवासः

निधनजनिस्थिति दुःखनाशहेतुः ।

इति दृढमतिरात्मनो निवासं

स्वयमपितत्र चकार देव भागः ।।४९।।

ஸ்ரீசாலிஹோத்ர மஹர்ஷியினிடத்தில் விசேஷ அர்த்தங்களை யெல்லாம் கேட்ட தேவபாகர், நாம் மதுஸூதனஞன திருஎவ்வுள் கிடந்தான் ஸந்நிதியில் நித்யவாஸம் செய்தால் அப்பெருமானே, முன்ஞல் மதுகைடபர்களை வதம் செய்தாப்போலே நம்முடைய இவ்வுலக வாழ்க்கையை முடித்து பிறப்பு இறப்பாகிய துக்கங்களையெல்லாம் போக்கியருள்வாரென்று ஆத்மஸ்வரூப விஷயமாக சஞ்சலமற்ற புத்தி உடையவராய் தமக்கு ஆசார்யரான ஸ்ரீசாலிஹோத்ர மஹர்ஷியைப் போல தாமும் புண்யாவர்த்த க்ஷேத்ரத்தில் நித்யவாஸம் பண்ணிஞர்.

**इति मार्कण्डेय पुराणे क्षेत्रकाण्डे वीक्षारण्य महात्म्ये**

**त्रिशत तमोध्यायः**

## श्रीलक्ष्मीनृसिंहपरब्रह्मणे नमः



## श्रीवीक्षारण्यक्षेत्रमाहात्म्ये चतुर्थोऽध्यायः

सकाशे शालिहोत्रस्य देवभागो महामुनिः।

परिपप्रच्छ यान् भूयः प्रश्नान् तान् कथयामिते ।।१ ।।

"आत्मावाऽरे द्रष्टव्यः श्रोतव्यः मन्तव्यो निधिध्यासिव्यः" என்கிற படியே ஆத்மஸ்வரூபத்தை மனனம் பண்ணுவதிலேயே நிலைத்து நிற்பவர்களான ரிஷிகளுக்குள்ளே சிறந்தவரான தேவபாகர் தமது ஆசார்யரான சாலிஹோத்ரமஹாமுனியினுடைய ஸன்னிதியில் இன்னம் என்னென்ன கேள்விகள் கேட்டாரோ அந்த ப்ரச்னங்களையெல்லாம் ஸஹஸ்ராநீகரே, உமக்குச் சொல்லுகிறேன் கேளும்.

देवभागः

कथं तत्रार्चितो विष्णुः पुरातैः परमर्षिभिः।

सनत्कुमारादिभिश्च ब्रह्मणा च महात्मना ।।२ ।।

अथकेन प्रकारेण किंतपोभिः किमध्वरैः।

यथावच्च यथाकालं सर्वमाचक्ष्व मे मुने ।।३ ।।

ஹே சாலிஹோத்ர மஹர்ஷியே! அந்த புண்யாவர்த்த க்ஷேத்ரத்தில் கல்பத் துவக்கத்தில் மதுகைடபர்களை வதித்து அதனாலுண்டான ஆயாஸம் நீங்குவதற்காக சயனித்துக் கொண்டுள்ள ஸ்ரீவீரராகவனை ப்ரஸித்தர்களான மஹர்ஷிகளும் ஸநத்குமாராதிகளான ப்ரம்மகுமாரர்களும் பகவானிடத்தில் ஸாக்ஷாத்தாக வேதத்தையும் பரிபூர்ண ஜ்ஞாநத்தையும் பெற்றவரான ப்ரம்மாவும் எப்படி ஆராதித்தார்கள்? அதாவது வேதத்திலே சொல்லிய முறைப்படியா, ஸ்ம்ருதியிலே

சொல்லியபடியா, ஸ்ரீபகவானாலே சொல்லப்பட்ட பாஞ்சராத்ரத் திலே சொல்லிய முறைப்படியா ஸாதித்தருளவேணும். இது தவிர அவ்வாராதனத்துக்கு அங்கமான எந்தெந்தகாலத்தில் எந்தெந்த தபஸ்ஸுக்களாலும், எந்தெந்த யஜ்ஞங்களாலும் விதிப்படி ஸ்வாமியை ஆராதித்தார்களோ அதையெல்லாம் அடியேனுக்கு ஸாதித்தருளவேண்டும். இப்படி தேவபாகர் வினவிய ப்ரச்னத்துக்கு ஸ்ரீசாலிஹோத்ரபகவான் பதில் அருளிச்செய்தார்

श्रीशालिहोत्रः

गुह्यं चात्रत्वयापृष्टं प्रश्नोहि मुनिसत्तम ।

ऋते देव प्रसादाच्च वक्तुमेष नशक्यते ।।४ ।।

வாரீர் ரிஷிச்ரேஷ்டரான தேவபாகரே! இந்த விஷயத்தில் தேவரீராலே வினவப்பட்ட ப்ரச்னம் மிகவும் ரஹஸ்யார்த்த விஷயமாகும். ''तेषामेवानुकम्पार्थं अहं अज्ञानजंतमः । नाशयाम्यात्मभावस्थो ज्ञानदीपेन भास्वता'' என்கிறபடியே ஸ்வாமியினுடைய அநுக்ரஹமில்லாமல் இந்த கேள்விக்கு பதில் சொல்லமுடியாது.

पुरा सर्वेश्वर स्साक्षाल्लोकानां हितकाम्यया

प्रणष्टे मोक्ष धर्मेतु भूत्वा सर्वेश्वरो हरिः ।।५ ।।

अवतीर्णो जगत्यर्थं पूर्वं धर्म सुतावृषी ।।

கல்பத்துவக்கத்தில் உத்தம மத்யம அதம கோடிகளான சேதநர்களையெல்லாம் தமது விருப்பத்துக்கேற்றவாறு படைத்து அளித்து அழிக்கின்றவராயும், ப்ரம்மா முதலான எல்லா உலகத்து ஈசர்களாலும் அனைத்து புருஷார்த்தங்களுக்காக வேண்டப்பட்டவராயும், அவர்களது விரோதிகளைப் போக்குகையே முக்கிய தொழிலாக உடையவரான திருமால், மோக்ஷதர்மமான பகவதாராதனத்தை ப்ரதானமாக விளக்குகின்ற பாஞ்சராத்ர சாஸ்திரம் மூவகைப்பட்ட மனிதர்கள் நிறைந்த இந்த

உலகத்தில் உபதேச பரம்பரை இல்லாததால் அழிந்துவிட, அந்த சாஸ்த்ரத்தை மீண்டும் உபதேச பரம்பரையாலே தோற்றுவிக்கவேண்டும் என்கிற உலகை உய்விக்கும் ஆசையாலே நாட்டை அளித்து உய்யச்செய்ய முன்னாலே தர்மவேதையின் குமாரர்களான நரநாராயண ரிஷிகளாக அவதரித்தார்.

नरनारायणौ देवौ तपस्तेपतुरव्यमौ ।।६ ।।

धर्मसंस्थापनार्थाय पुण्ये बदरिकाश्रमे ।

பரமபாவநமான பதரிகாச்ரமத்திலே நித்யஸ்வரூபகுணர்களாயும் ஸத்ய, ஜ்ஞாந, அமல, அநந்த ஆநந்தாத்மகஸ்வரூப அநுபவ ஆநந்த நிர்ப்பரர்களுமான நரநாராயண ரிஷிகள் இரண்டு பேரும் எல்லா விருப்பங்களும் நிறைவேறப்பெற்றவர்களான தங்களுக்கு ஒரு பலனை உத்தேசித்து ஒன்று செய்யவேண்டிய தில்லையாலும் यद्यदाचरतिश्रेष्ठः तत्तदेवेतरोजनः ।सयत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते ।।என்கிறபடியே தாங்கள் நடந்து காட்டினால் அவ்வழியில் எல்லாரும் நடந்து உய்வுபெறுவார்கள் என்று தர்மத்தை நிலைநிறுத்துகிற ஆசையிலே தவம் செய்தார்கள்.

नारदाय पुरा प्राहत्वयापृष्टान् हरिः स्वयम् ।

नारदो भगवान् तस्मादधीत्य समहामुनिः

मयाचाभ्यर्थित स्तत्र देवर्षिर्नारदस्तदा ।।८ ।।

समह्यं भगवान् प्रादात् गुह्यं सात्वत संहिताम् ।

तत्प्रसादोपलब्धेन विधिनाऽहं समर्चये ।।९ ।।

देवदेवं जगन्नाथं यथाविधि निमन्त्रितः ।

வாரீர் தேவபாகரே! நீர் நம்மை எந்த பகவதாராதந ப்ரகாரத்தைப் பற்றி வினவினீரோ அந்த பகவதாராதநப்ரகாரத்தை 'पाञ्चरात्रस्य कृत्स्नस्य वक्ता नारायणः स्वयम्' என்கிறபடியே ஸ்ரீபாஞ்சராத்ர

சாஸ்த்ரத்தை அருளியவராய், பதரிகாச்ரமத்தில் எழுந்தருளி யுள்ள நரநாராயணரூபியுமான புருஷோத்தமனே ஸ்ரீபாஞ்சராத்ர ஸம்ஹிதா ரூபமாக ஸ்ரீநாரத பகவானுக்கு அருளிச்செய்தார். உலகங்களிலும் ச்ருதி ஸ்ம்ருதி புராணுதிகளிலும் ப்ரஸித்தராயும் பகவானேயே சிந்தித்துக் கொண்டிருப்பவர்களான ரிஷிகளுக்குள் சிறந்தவருமான அந்த நாரத பகவானும் பதரிகாச்ரமத்தில் வஸிக்கும் நாராயண ரூபியான புருஷோத்தமனிடமிருந்து ஸ்ரீபாஞ்சராத்ர ஸம்ஹிதையைக் கற்று அதன் பொருளேயே எண்ணிக் கொண்டிருப்பவராயும் அநுஷ்டித்துக்கொண்டிருப்ப வராயும் வாழும் காலத்தில் அவரை அநேக முறைவணங்கி அபிவாதந புரஸ்ஸரமாக ப்ரார்த்தித்தேன். தமது கடாக்ஷத்தினு லும் ஸேவையினுலும், பேச்சு முதலியவற்ருலும் அனைத்து அஜ்ஞானத்தையும் போக்குபவராயும், பரமாத்மாவான ஸ்ரீய:பதியினுடைய ஸ்வரூபாதிகளேயே எப்போதும் சிந்தித்துக் கொண்டிருப்பவருமான அந்த நாரதபகவான் ரஹஸ்யமான ஸ்ரீபாஞ்சராத்ர ஸம்ஹிதையை அடியேனுக்கு அருளிச்செய்தார். அந்த நாரதபகவானது அநுக்ரஹத்தால் வந்த ஸ்ரீபாஞ்சராத்ர ஸம்ஹிதா ரூப விதியினுலேயே லோகநாதனும் நித்யஸூரி களுக்குத் தலைவனுமான ஸ்ரீய:பதியை அவராலேயே தமது ஆராதனத்துக்காக வரிக்கப்பட்ட நான் அந்த முறைப்படியே ஆராதித்துவருகிறேன்.

तदद्य तव दास्यामि शास्त्रं गुह्यं सनातनम् ।।१० ।।

அதிரஹஸ்யமாய், அநாதியாய், பகவானது திருவாயால் வெளிவந்ததாய், ஸ்ரீபாரதம் முதலியவற்றில் ப்ரஸித்தமாய் உபாதேயதமமாக ப்ரஸித்தமான ஸ்ரீபாஞ்சராத்ர சாஸ்த்ரத்தை இப்போது நான் உமக்கு உபதேசிக்கிறேன்.

सात्वतोक्त प्रकारेण ब्रह्माद्या मुनिसत्तम ।

आराध्य विधिवद्विष्णुं तत्रजग्मु: परंपदम् ।।११ ।।

வாரீர் முனிச்ரேஷ்டரான தேவபாகரே! இப்போதுள்ள ப்ரம்மாவுக்கு முந்தய ப்ரம்மாவும், மேலும் அநேகம் முமுக்ஷுக்களான மஹர்ஷிகளும் இந்த புண்யாவர்த்த

க்ஷேத்ரத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீவீரராகவனை ஸ்ரீபாஞ்சராத்ர சாஸ்த்ரத்திலே சொல்லப்பட்ட முறையான ப்ரயோகத்தாலே ஆராதித்து மோக்ஷஸ்தானமான பரமபதம் பெற்ருர்கள்.

त्वमद्यमुनिशार्दूल पुण्ये हृत्तापनाशने
ध्यात्वा नारायणं देवं स्नानकाले द्विजोत्तम ।।१२ ।।
यथोक्तविधिना स्नात्वा तस्मिन्सरसितापसम् ।
देवान् ऋषीन् तर्पयित्वा कृत्वा च पितृतर्पणम् ।।१३ ।।
सूर्यमण्डलमध्यस्थं शंखचक्रगदाधरम्
कोटिसूर्यप्रतीकाशं हृदयस्थं विचिन्त्यच ।।१४ ।।
चित्तस्थं मानसैर्भावैः यजस्वच यथाविधि ।

जन्मनाजायते शूद्रः कर्मणा जायते द्विजः என்கிறபடியே சரீரத்தாலும், கர்பாதானம் முதலிய கர்மத்தாலும் இருபிறவியை உடையப்ராம்மணர்களுக்குள்ளே உத்தமராயும், ஆகாரமேது மின்றியிருத்தல் முதலிய பல ரூபத்தில் செய்யப்பட்ட தபஸ்ஸையே ப்ரதானமாக உடையவராயும், ப்ரம்ம நிஷ்டர்களுக்குள்ளே சிறந்தவருமான தேவபாகரே! இப்போது நீர் புனிதமான ஹ்ருத்தாபநாசநமென்கிற ஸரஸ்ஸிலே ध्यायेन्नारायणं देवं स्नानादिषुच कर्मसु । ब्रह्मलोकमवाप्नोति नचेहा जायते पुनः என்கிறவிதியின்படியே आपोनारा इति प्रोक्ता आपोवै नर सूनवः तायदस्यायनं पूर्वं तेन नारायणः स्मृतः என்று ஜலசாயியான ஸ்ரீமந்நாராயணனை ஸ்நாந காலத்தில் த்யானம் செய்துகொண்டு சாஸ்த்ரோக்த க்ரமமாக ஸ்நாநம் செய்து ஸ்நாநாங்கமாக தேவரிஷி பித்ரு தர்ப்பணங்களைச்செய்து, य एषोऽन्तरादित्ये हिरण्मयः पुरुषो दृश्यते हिरण्यश्मश्रुः हिरण्यकेश आप्रणखात्सर्व एव सुवर्णस्तस्य यथा कप्यासं पुण्डरीकमेवमक्षिणी

என்றும் सयश्चायं पुरुषे यश्चासावादित्ये स एक: என்றும் சொல்லுகிறபடியே ஸூர்யமண்டலாந்தர்வர்த்தியாயும், சங்கசக்ரகதாதரராயும், கோடிஸூர்யன் உதித்தாற்போன்ற ப்ரகாசத்தை உடையவராயுமுள்ள ஸ்ரீமந்நாராயணனை உமது இதயத்தின் உள்ளே இருப்பவராக த்யானம் பண்ணி, அப்படி ஹ்ருதயத்தில் த்யான த்ருஷ்டி விஷயரான ஸ்வாமியை ஸாத்வத ஸம்ஹிதையில் சொல்லப்பட்ட முறையில் மாநஸிகமாக ரத்நாஸநத்தில் எழுந்தருளப்பண்ணி நமஸ்கரித்தலாகிற உபசாரங்களாலே ஆராதிப்பீராக.

आवाहनासनं पाद्यं अर्घ्यमाचमनीयकम् ।।१५ ।।

दत्वातु देवदेवाय विष्णवे मुक्तिहेतवे ।

स्वात्मानं च कलत्रञ्च गृहं क्षेत्रं धनागमम् ।।१६ ।।

यदस्ति तव योगीन्द्र सर्वं तत्पादयोर्न्यसे:

இப்படி சுருங்க அருளிச்செய்த மாநஸாராதனத்தையே ப்ரதாந உபசாரம் முதலியவற்றைச் செய்யும் முறையை விவரித்தருளு கிருர். வாரீர் யோகிகளுக்குள் சிறந்தவரான தேவபாகரே! முதலில் ஸூர்யமண்டலத்தின் உள்ளே எழுந்தருளியிருப்பவ ரான ஸ்ரீக்ஷமந்நாராயணனை இதயத்தாமரையின் நடுவிலுள்ள ரத்நஸிம்ஹாஸநத்தில் ஆவாஹநம் பண்ணி, ஆஸநம் ஸமர்ப்பித்து, அர்க்ய பாத்ய ஆசமநீயமும் ஸமர்ப்பித்து, மேலும் திவ்யாந்ந நிவேதனம் முதலிய முக்யமான எல்லா உபசாரங்களையும் செய்யவும். பின்னர் நித்யஸூரி நிர்வாஹகரா யும், ஸர்வாந்தர்யாமியாயும், ப்ரம்மா முதலிய எல்லாச் சேதநர் களையும் கட்டுவதும், விடுவிப்பதும் ஆகியவற்றை அஸாதாரண வ்யாபாரமாக உடையவராயுமுள்ள ஸ்ரீவீரராகவனுக்காக என்று நினைத்து அவன் திருவடிகளிலே

आत्माराज्यं धनञ्चैव कलत्रं वाहनानिच ।

एतद्भगवते सर्वमिति तत्प्रेक्षितं सदा । என்றும் पुत्र: प्रेष्य:

तथाशिष्य इत्येवञ्च निवेदयेत् என்றும் சொல்லுகிறபடியே உம்முடைய ஸ்வரூபத்தையும் உமக்கு த்ரிவர்க்க ப்ரதான ஸஹகாரியாயும், பகவதாராதனத்துக்கு உதவுபவளாயுமுள்ள மனேவியையும், உமக்குண்டான க்ருஹத்தையும், க்ஷேத்ரத்தையும், பணம் முதலியவற்றையும், உமக்கு இம்மை மறுமைகளிலே ரக்ஷிப்பதாகிற பாரபலாதிகளேயும் ஆகிய எல்லாவற்றையும் ஸமர்ப்பிப்பீராக.

सात्वतोक्त प्रकारेण समर्च्य पुरुषोत्तमम् ।१७ ।।
शेषपर्यङ्कशयने यत्रशेते हरि:स्वयम् ।
तत्रनत्वा जगन्नाथं अष्टाङ्ग पतनैस्सह ।।१८ ।।
प्रणम्य दण्डवद्भूमौ मन्त्रवत्सुसमाहित:
व्यक्तं समर्चयेद्देवं व्यक्तैर्द्रव्यै: सुशोभनै: ।।१९ ।।
यथाशक्त्युपलब्धैश्च पूजये द्भक्तितोऽन्वहम् ।
तत्प्रसादात्परांशान्तिं स्थानं प्राप्स्यसि शाश्वतम् ।।२० ।।

இப்படி ஸாத்வத ஸம்ஹிதையில் சொல்லப்பட்ட முறைப்படி புருஷோத்தமனே மாநஸோபசாரங்காளலே ஆராதித்து பின்னர், எந்த திருவநந்தாழ்வானுகிற திருப்பள்ளி மெத்தையிலே பெருமாள் பள்ளிகொண்டிருக்கிருரோ அவ்விடத்தில் ஸர்வலோகேச்வரனை ஸ்வாமியை ''मनोबुध्यभिमानेन सहन्यस्य धारातले । कूर्मवच्चतुर: पादान् शिरस्तत्रैवपञ्चमम्'' என்று நித்யத்தில் உடையவர் அருளிச்செய்தபடி எட்டு அங்கங்களும் பூமியில் பட தரையில் போட்ட தண்டம் போலே தலே முதல் கால் வரை சரீரம் முழுதும் பூமியில் படும்படி நமஸ்காரம் பண்ணவும். பின்னர் ப்ராணுயாமம் பண்ணி மூலமந்த்ரத்திஞலேயோ த்வாதசாக்ஷரவித்தையிஞலோ ப்ரத்யக்ஷமாக அர்ச்சாரூபியாக எழுந்தருளியிருக்கிற ஸ்வாமியை, ப்ரத்யக்ஷங்களாயும், ந்யாயமான முறையிலே ஸம்பாதிக்கப்பட்டவைகளாயும்,

சாஸ்த்திரங்களில் விலக்கப் படாதவைகளாயும், தன் சக்திக்குத்தக்கவாறு கிடைத்தவைளாயுமுள்ள, அர்க்ய பாத்ய ஆசமநீய கந்த புஷ்ப தூப தீப ஹவிஸ் முதலிய பதார்த்தங் களாலே தினந்தோறும் ஆராதிப்பீராக. இப்படி ஆராதித்துக் கொண்டு வருகிற நீர் அந்த திருவெவ்வுள் கிடந்தானுடைய க்ருபையினுலே ஸாம்ஸாரிக துக்கங்களெல்லாம் நீங்கப்பெறு வீர், ''தேஷாம் தத்பரமம் ஸ்தாநம்'' ''யத்வை பச்யந்தி ஸூரய:'' முதலானவற்றில் ஸித்தமான உத்தமஸ்தானத்தை அடையப் போகிறீர்.

सनन्दनाद्या मुनयः वसिष्ठ प्रमुखास्तथा ।
मुनयो बहवश्चान्ये योगिनो मुनयस्तथा ।।२१ ।।
इन्द्रादिदेवतास्सर्वे गन्धर्वाप्सरसादयः ।
सूर्यवंशसमुद्भूता राजानो बहवोऽत्रवै ।।२२ ।।
सोमवंश समुद्भूता भूपाला मुनिसत्तम ।
राजानो जनकाद्याश्च योगिनो मुनिसत्तम ।।२३ ।।
यथार्हं पूजितस्तैस्तु देवदेवो जगत्पतिः ।
सर्वेषां वाञ्छितान्दाताह्यभीष्ट फलदोहरिः ।।२४ ।।
तमभ्यर्च्य यथान्यायं मोक्षं प्राप्स्यसिशाश्वतम् ।

மநநசீலர்களான ஆசார்யர்களிடத்தில் நெடுங்காலம் வாஸம்பண்ணி ஞானம் பெற்றவர்களுக்குள்ளே தலைசிறந்தவ ரான தேவபாகரே! ஸநந்தநாதி முனிவர்களும், வசிஷ்டர் முதலான முனிவர்களும் மற்றும் கர்மயோகநிஷ்டர்களான அநேகம் முனிவர்களும், இந்திரன் முதலான எல்லா தேவர்களும், கந்தர்வர்களும், அப்ஸரஸ் முதலானவர்களும், இம்மண்ணுலகிலிருந்து ராஜ்ய பரிபாலனம் செய்த அநேக ஸூர்யவம்சராஜாக்களும், சந்திரவம்சத்தில் பிறந்த பல ராஜாக்களும், கர்மயோக நிஷ்டர்களாய் உபநிஷத் ப்ரஸித்தர் களான ஜநகர் முதலிய மஹாராஜாக்களும் இப்படி அனைவராலும்

பூஜிக்கப்பட்டவராயும், நித்யஸூரிகளுக்குத் தலைவராயும், லீலாவிபூதியாகிய இம்மண்ணுலுகத்தவர்க்கு ஒப்பற்ற தலைவராயுமுள்ள ஸ்ரீவீரராகவன் ‘‘கொள்ளக்குறைவிலன் வேண்டிற்றெல்லாம் தரும் கோதில்’’ என்கிறபடியே வேண்டுவார் வேண்டுவனவற்றையெல்லாம் தரக்கூடிய வள்ளலாகையாலே தன்னை அண்டிய எல்லா அதிகாரிகளுக்கும் உடல்நோய், மனநோய், அகப்பகை, புறப்பகை, அஜ்ஞானம் முதலிய அனைத்தையும் போக்கி எல்லா நற்பலன்களையும் அருளுகிறார். இப்படி எல்லா அதிகாரிகளுக்கும் எல்லாப் பலன்களையும் மழையெனப் பொழிகின்ற ஸ்ரீவீரராகவனை ஸ்ரீபாஞ்சராத்ர ஸ்தோத்ர ப்ரகாரத்தாலே ஆராதித்தீராகில் सर्वे च्यवन धर्माण: என்று அழியக்கூடியதான कैवल्यं போலல்லாது ‘‘अनावृत्तिश्शब्दात्, नच पुनरावर्तते नच पुनरावर्तते’’ முதலிய ப்ரமாணத்தினாலே என்றும் நிலைத்திருப்பதான மோக்ஷத்தைப் பெறுவீர்.

इति मार्कण्डेय पराणे क्षेत्रकाण्डे वीक्षारण्य महात्म्ये

चतुश्शततमोऽध्याय:

## श्रीलक्ष्मीनृसिंहपरब्रह्मणे नमः



## श्रीवीक्षारण्यक्षेत्रमाहात्म्ये पञ्चमोऽध्यायः

இப்படிக் கேட்ட தேவபாகர் தீர்த்தமாஹாத்ம்யத்தைப் பற்றி மேலும் வினவுகிருர்.

देवभाग:

भूयस्तीर्थस्य माहात्म्यं श्रोतुमिच्छाम्यहं मुने ।
नतृप्तिरस्ति मेऽद्यापि कथां पुण्यां हिश्रृण्वतः ।।१ ।।

சாலிஹோத்ரபகவானே! பாவநமான பகவத் கதையை தேவரீரிடத்தில் கேட்கின்ற எனக்கு எவ்வளவு கேட்டும் த்ருப்தி பிறக்கவில்லை. ஆகையால் மேலும் ஹ்ருத்தாபநாசந தீர்த்தத்தின் மாஹாத்ம்யத்தைக் கேட்க ஆசைப்படுகிறேன். ஸாதித்தருள வேண்டும். இவ்வாறு தேவபாகர் கேட்டதற்கு ஶ்ரீசாலிஹோத்ர பகவான் பதில் அருளிச்செய்கிருர்

शालिहोत्र:

पुराकृतयुगे विप्रःकश्चिदासीत् द्विजोत्तमः ।
प्रख्यातः कौशिकोनाम तपसाच विवर्धितः ।२ ।।
षडङ्ग सहितान् वेदान् अधीत्यशुशुभेतराम् ।
विहिताचार निरतो युवा बलसमन्वितः ।।३ ।।
पितृमातृ द्विजाचार्य परिचर्या परायणः ।
अनेकगुण सम्पन्नः शीलवान् सज्ञनप्रियः ।।४ ।।

தேவபாகரே! முன்பு க்ருதயுகத்தில் ஸஜ்ஜனங்களைக் கண்டால் நிலவையும், தென்றலையும் கண்டாப்போலே ஆசைப்படுப

வனும், நல்லஸ்வபாவமுடையவனும், சமதமாதி குணங்கள் நிறைந்தவனும், தந்தைதாய், ப்ராம்மணர்கள், ஆசார்யர்களுக் குத் தொண்டு செய்வதையே மேலான பலனுக நினைத்திருப்ப வனும், தவம் செய்வதால் ஏற்படக்கூடிய கஷ்டங்களை ஸஹிக்கக்கூடிய சரீரபலமுடையவனும் யௌவநப்பிராயத்தி னனும், சாஸ்த்ரங்களிலே சொல்லப்பட்ட ஆசாரங்களிலேயே எப்போதும் ஈடுபாடுடையவனும் இப்படி உத்தமகுணங்க ளாலே ப்ராம்மணர்களுக்குள்ளே சிறந்தவனும் தபஸ்ஸினுல் வ்ருத்தியடைந்தவனும், உலகில் ப்ரஸித்தனும் குசிககோத்ரத்தில் பிறந்தவனுமுள்ள ஒரு ப்ராம்மணன் இருந்தான். அவன், சிக்ஷா, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜோதிஷம், கல்பம் ஆகிய ஆறு அங்கங்களோடு கூடிய ரிக் யஜுஸ் ஸாம அதர்வணங்களான நான்கு வேதங்களையும் குருமுகமாகக் கற்று மிகவும் ப்ரகாசித்தான்.

तस्यैवं गुणयुक्तस्य द्विजश्रेष्ठस्य धीमतः

ब्रह्मचर्य रतस्यासीन्मतिस्तीर्थनिषेवणे ।।५ ।।

இப்படி நற்குணங்களோடு சேர்ந்தவனும், பிரம்மசர்யாச்ர மத்தில் மிகவும் ஈடுபாடுகொண்டவனும், சிறந்த புத்திமானு முள்ள அந்த ப்ராம்மணனுக்கு கங்கை முதலிய புண்ய தீர்த்தங் களை ஸேவிப்பதில் எண்ணம் ஏற்பட்டது.

विनिर्ययौ निजगृहात् गंगां प्रतिमहानदीम् ।

उत्तराभिमुखो दूरं सागरं प्रेक्ष्य संसृतिम् ।।६ ।।

அந்த ப்ராம்மணன் ''நண்ணுதார் முறுவலிப்ப நல்லுற்ருர் கரைந்தேங்க எண்ணாருத்துயர் விளைக்குமிவை யென்ன உலகியற்கை'' என்றும், வான் பட்ட மன்னிருளில் மயங்கு மாறும் மறித்தொருகால் எனைஊழிச் சென்ருலன்ற்ரோ் ஊன்பட்ட உடலாழி வினையொழுக்கில் ஒரு கரையும் தாணுதே ஒழுகுமாறும், தேன்பட்ட இடம்போலத் தித்திக்கின்ற சிறுபயனே உறுபயனென்றழுந்துமாறும் தான் பட்டபடி இன்னோர் தானே கண்டு தளர்ந்திருடுமேல்'' என்றும் தந்திரங்கள்

அளவிலராய் தனத்தால் மிக்கதோர் தார்வேந்தர் தொழ வையமாண்டார் மாண்டார்'' என்றும் சொல்லுகிறபடியே கர்ப ஜன்ம ஜரா மரணம் முதலிய துக்கமயமான ஸம்ஸாரத்தை तृष्णातोये मदन पवनोद्धूत मोहोर्मिमाले दारावर्ते तनयसहज ग्राहसंघाकुले च संसाराख्ये महति जलधौ என்கிறபடியே ஸமுத்ரம் போலே கடக்கமுடியாததாக நினைத்து துக்கப்பட்டு எல்லா புண்யதீர்த்தங்களுக்குள்ளும் சிறந்ததான கங்கையை எண்ணி வடக்குதிக்கை நோக்கி வெகுதூரம் போக நினைத்து தன் வீட்டினின்றும் புறப்பட்டான்.

यतस्तस्य महारण्ये विजने दण्डकाह्वये ।

मध्येऽस्तमुपयातोऽभूद्भगवांस्तुदिवाकरः ।।७।।

அந்த பிராம்மணன் மனித ஸஞ்சாரமற்ற தண்டகமென்னும் பேருடைய பெருங்காட்டின் நடுப்பகுதியில் போய்க்கொண்டி ருக்கும் போது அனைத்துலகிலும் ப்ரகாசிக்கக்கூடிய தேஜஸ்ஸை உடைத்தான ஸூர்யன் அஸ்தமித்துவிட்டான். (''யத:'' என்ற ஷஷ்ட்யேகவசநம் ''தஸ்யயதஸ்ஸத:'' போய்க்கொண்டிருக்கச் செய்தே'' என்று அர்த்தம்)

व्याघ्रादिभ्यस्सभीतस्सन् श्वापदेभ्यो महत्तपः ।

निरीक्ष्य कुञ्जेलीनोऽभूत् क्षुत्पिपासार्दितो भृशम् ।।८।।

அந்த பிராம்மணன் புலி முதலிய துஷ்டமிருகங்களி னின்றும் பயந்தவனாய் மிகுந்த பசியாலும் தாகத்தாலும் பீடிக்கப் பட்டவனாய் மிகுந்த இருட்டைக்கண்டு புதரிலே ஒளிந்து கொண்டிருந்தான்.

एवं सञ्चिन्तयामास मनसासंस्मरन् गृहान्

उदेष्यति कदा भानुः सहस्रेण करेणवै ।।९।।

कदा तमस्समस्तञ्च निरस्तंहि भविष्यति ।

अहमव्याकुलो भूत्वा तीर्थं यास्यामि वै कदा ।।१०।।

அந்த அந்தணன் தனது வீட்டையும் அங்குள்ள தாய் தந்தை முதலானவர்களேயும் நினைத்து வருந்தி எப்போது ஆயிரம் கிரணங்களோடு கூடிய ஸூர்யன் உதிக்கப்போகிருன்? எப்போது இந்த இருளனைத்தும் நீங்கப்போகின்றன? எப்போது நானும் கவலையின்றி கங்காதீர்த்தத்தைக் குறித்து போகப் போகிறேன் என்று இப்படி சிந்திக்கலாஞன்.

इत्येवं गतधैर्यस्य क्षुत्तृष्णोपहतस्यच
पूर्वकर्मवशा दासीत्पुरतोऽस्य जनंगमः ।।११ ।।

''ஜநங்கம: சண்டாள: – ''சண்டாலப்லவ மாதங்கதிவாகீர்தி ஜநங்கமா:'' என்று அமரம். இப்படி தைர்யத்தை இழந்தவனையும், பசிதாகங்களால் பீடிக்கப்பட்டவனையுமிருக்கின்ற அந்த ப்ராம்மணனுடைய முன்வினைப் பயனுல் ஒருசண்டாளன் எதிரேவந்தான்.

अतीव कृशदेहस्य आयसाभरणस्यच ।
रूपं तस्य स दृष्ट्वापि क्षुधया नविवेदह ।।१२ ।।

அந்த ப்ராம்மணன் மிகவும் மெலிந்த உடலை உடையவனையும், இரும்பினுலான ஆபரணங்களை உடையவனையுமிருக்கின்ற சண்டாளனுடைய ரூபத்தைப் பார்த்தபின்னரும் பசியினுலே இவன் சண்டாளன் என்று தெரிந்து கொள்ளாமல் போனுன்.

अथापृच्छत्सचण्डालं विक्लवस्तुदिशोदश
विलोकयन् क्षुधार्तस्स एकमेव बहूविव ।।१३ ।।
क्वयात बतमे तावद्ब्रूत यूयं नरोत्तमाः ।
अत्रास्मि विक्लवोनूनं क्षुधयातृष्णयापिच ।।१४ ।।

பின்னர் அந்த அந்தணன் பசியினுலே மிகவும் பீடிக்கப் பட்டவனுய் மிகவும் தீநனுய் பத்துதிக்கையும் பார்த்தவாறு அச்சண்டாளன் ஒருவனேயே பலபேராக எண்ணி ப்ரமித்து, ''ஹே மநுஷ்யோத்தமர்களே! எங்கே போகிறீர்கள்? எனக்கு உண்மையைச் சொல்லுங்கள். நான் பசிதாகத்திஞல் மிகவும்

பீடிக்கப்பட்டு மிகவும் தீநனுய் இந்த புதரிலேயே கிடக்கிறேன். என்ருன்.

इतिपृष्टस्सचण्डालः ब्राह्मणेनाति विह्वलः ।

कुञ्जेप्रसारयामास स्वदृष्टिं कुटिलां ततः ।।१५।।

இப்படி அந்த ப்ராம்மணனுலே வினவப்பட்டவனுன அந்த சண்டாளன் மிகவும் பயந்தவனுய், இயல்வாகவே வக்ரகதியான தன் பார்வையைப் புதருக்குள்ளே செலுத்தினுன்.

अथापश्यत् द्विजवरं वृतं ब्राह्मणतेजसा

उपवासपरिश्रान्तं निरीक्षन्तमितस्ततः ।।१६।।

பின்னர் அந்த சண்டாளன் ப்ராம்மணஜாதிக்கேற்பட்ட தேஜஸ்ஸினுலே சூழப்பட்டவனுயும், உணவுஇல்லாததால் மிகவும் இளைத்தவனுயும், பயத்தினுல் நான்கு திக்கையும் பார்த்துக்கொண்டிருக்கும் பிராம்மணனைப் பார்த்தான்.

अब्रवीत्सतदाविप्रं क्षुत्पिपासार्दितं ततः

பின்னர் அந்த சண்டாளன் பசிதாகத்தினுல் பீடிக்கப்பட்டிருக்கும் அந்த அந்தணனைப்பார்த்து ஒருவார்த்தை சொன்னுன்.

चण्डालः

कस्त्वं ब्राह्मण कुञ्जेस्मिन् निलीन इवसाध्वसात् ।

कुत्र गन्तुं प्रवृत्तोसि लक्ष्यसे तीर्थगो भवान् ।

ஹே ப்ராம்மணு! நீர் யாரய்யா? பயத்தினுலே இந்தப்புதரிலே புகுந்து கொண்டவர்போலே காணப்படுகின்றீர். எவ்விடத்திற்குப்போக எண்ணிப் புறப்பட்டீர்? பார்த்தால் நீர் தீர்த்தயாத்ரைக்குச் சொல்கின்றவர்போல் காணப்படுகின்றீர்?
கௌசிக: இப்படிக்கேட்ட சண்டாளனை நோக்கி கௌசிகன் என்ற ப்ராம்மணன் பதில் சொன்னுன்

तीर्थसेवार्थमधुना प्रवृत्तोस्म्युत्तरां दिशम् ।।१८।।

अस्मिन्नरण्येऽस्तमितो गच्छतो मे दिवाकरः।
निकुञ्जेऽस्मिन्नितो भीतः तमसान्धीकृते निशि ।।१९ ।।
निलीनोऽस्मि मृगादिभ्यः दुष्टेभ्यो भीतमानसः।
क्षुत्पिपसाभिभूतोऽहमतीव कृशतां गतः ।।२० ।।
नास्मि शक्तोऽधुना वक्तुं दृष्टिर्मे परिवर्तते।

தீர்த்தயாத்ரை செல்லும் நோக்கில் வடக்கு நோக்கிப் புறப்பட்டுப்போகின்றேன். இந்தக் காட்டின் நடுவில் நான் நடந்து செல்லும்போது ஸூர்யன் அஸ்தமித்துவிட்டான். அதன்பின் புலி முதலிய துஷ்டம்ருகங்களுடைய அச்சத்தினுல் பயந்த மனமுடைய நான் இந்த ராத்ரியில் இருள்சூழப்பட்ட இந்தப்புதரில் புகுந்து கொண்டிருக்கிறேன். எனக்குக்களைப்பின் மிகுதியால் கண்சுழல்கிறது. இதற்கு மேல் வார்த்தை சொல்ல நான் சக்தியற்றவனுயுள்ளேன்.

निकुञ्जेस्मिन्नितो भीतः इत्यत्र- इतः अभीतः इति छेदः
इतः अस्मान्मार्गादित्यर्थः। अभीतः अभ्युपसृष्टा दिण्
गताविति धातोः कर्तरिक्तः ।आभिमुख्येन गत इत्यर्थः।
अन्यथा भीतमानस इत्यनेन पुनरुक्तितः इत इत्यस्य
अस्मिन्नित्यर्थोनयुज्यते। अस्मिन्निति पृथक्पदस्य सत्वात्।

चण्डालः

निर्याहिकुञ्जतो विप्र ममहस्तावलम्बनम् ।।२१ ।।
कुरुष्व यद्यशक्तोसि स्कन्धमारोहमेऽधुना।
गृहाणि प्रापयिष्यामि मामकानि महान्ति च ।।२२ ।।
भक्ष्यैर्भोज्यैश्च विविधैः परिपूर्णानि सर्वतः।

ஹே ப்ராம்மண! இந்தப்புதரிலிருந்து புறப்பட்டு வெளியே வாரும். உமக்கு சக்தியில்லையேல் என்கையைப்

பற்றிக்கொண்டு புறப்பட்டுவாரும். அதற்கும் சக்தியில்லே யாஞல் என்தோள்மீது ஏறிக்கொள்ளும். பார்க்குமிடமெல்லாம் உண்ணத்தக்க பலவகையான பதார்த்தங்கள் நிறைந்ததாயும் பரப்புமிக்கதாயுமுள்ளதான எனது வீடுகளில் இப்போதே உமமைக் கொண்டு போய்சேர்ப்பிக்கிறேன்.

इत्युक्तस्तेन सहसा स्कन्धारूढोऽभवत्तथा ।।२३ ।।

भवनानि सुरम्याणि जगाम समुदा पुनः

அந்த சண்டாளஞலே இவ்வாறு வேண்டிக்கொள்ளப் பட்டவஞய் அந்த பிராமணன் அந்த க்ஷணமே அவன் தோளிலேறிக்கொண்டு ஸந்தோஷம் மிக்கவஞய் மிகவும் அழகியனவாயுள்ள அந்த சண்டாளன் வீடுகளை அடைந்தான்.

ततस्तुतं विशेषेण चण्डालः प्रीतमानसः ।।२४ ।।

भक्ष्यैर्भोज्यैश्च विविधैः पूजयामास ब्राह्मणम् ।

பிறகு அந்த சண்டாளன் மிகவும் மகிழ்ந்த மனத்தினஞய்க் கொண்டு பலவகையான அப்பம் கறியமுது முதலானவற்ருேடு கூடிய அன்னங்களாலே அந்த பிராமணனை ஆராதித்தான்.

ब्राह्मणोपि क्षुधार्तत्वा दनवेक्ष्यैव भोजनम् ।।२५ ।।

चण्डालस्य गृहेतावत् चकार भ्रान्त मानसः

அந்தணனும் பசியால் பீடிக்கப்பட்டமையால் மயங்கிய மனத்தவஞய், பிராமஞன நான் இவ்விடத்தில் போஜனம் பண்ணலாமா என்று ஆராயாமலே அந்த சண்டாளன் வீட்டிலேயே போஜநம் பண்ணிஞன்.

ततस्तु शयनं प्राप्य निद्रयाभृशपीडितः।।२६ ।।

सुष्वापच परिश्रान्तः नविवेदापि किञ्चन ।

அதற்குப்பிறகு அந்த பிராம்மணன் சண்டாளஞலே நன்று பெருக்கிசுத்தம் செய்து விளக்கும் வைத்துப்படுக்கையும் விரிக்கப்பெற்றதஞலே வழிநடந்த களைப்பிஞலே அயர்ந்து உறங்கிஞன். ஆழ்ந்த தூக்கத்தில் அமிழ்ந்து ஒன்றும்

அறியாதவனுயிருந்தான்.

चण्डालोपि निजांकन्यां भूषणाच्छादनादिभिः ।२७ ।।
अलंकृत्याब्रवीद्वाक्यं तां वै षोडशवार्षिकीम् ।

பிறகு சண்டாளனும் சேரியிலேயே அழகினுலே எங்கும் பேர் பெற்றவளாயும், பதினறு வயது நிறைந்தவளாயுமுள்ள தன்னுடைய பெண்ணை நல்ல ஆடைகளாலும் ஆபரணங்களாலும் அலங்கரிப்பித்து இனிதாக ஒருவார்த்தை சொன்னுன்.

चण्डालः
एहिप्रियसुते साध्वि शयानं ब्राह्मणोत्तमम् ।।२८ ।।
शुश्रूषस्व पदेचास्य कराभ्यां पीडयस्वच
ब्राह्मणस्यहि शुश्रूषा विहिता सर्वजातिषु ।२९ ।।
तयाहि सद्गतिं यान्ति हीना ज्ञानेन दुर्बलाः ।

நல்ல குணவதியாய் எனக்கு மிகவும் விருப்பமான பெண்ணே! இங்கே வா; படுக்கையில் உறங்குகின்ற இந்த பிராமணனுக்குப் பணிவிடை செய்; வழி நடந்த சிரமம் தீர உன் கைகளாலே அவருடைய பாதங்களை மெல்ல மெல்ல பிடிப்பாயாக; எல்லா ஜாதிகளுக்குள்ளும் சிறந்தவரான பிராம்மணனுக்கு பணிவிடைசெய்வது எல்லா ஜாதியினருக்கும் சாஸ்த்திரத்திலே விதிக்கப்பட்டதாகும். ஆத்மஜ்ஞானமில்லாத வர்களாய் அதனுல் ஸ்வயமாக மோக்ஷத்தைப்பற்ற சக்தியில்லாத வர்கள் எல்லாரும் ப்ராம்மண சுச்ரூஷையினுலே நல்ல கதியை அடைகிருர்கள். எனவே நீ இந்த அந்தணனுக்கு பணிவிடை செய்து நல்ல கதி அடைவாயாக.

इत्युक्त्वा तेन वै पित्रा तुष्टामातंग कन्यका ।३० ।।
पादयो र्विदधे तस्य पीडनं प्रीतचेतसा ।

தந்தையான அச்சண்டாளனுலே இவ்வாறு நியமிக்கப்பட்டவ ளான அப்பெண் மிகவும் மகிழ்ச்சியுற்ருள். மகிழ்ந்த மனத்தளாய

அப்பெண் பிராமணனுடைய கால்களைப்பிடித்துக் கொண்டிருந்தாள்.

ब्राह्मणोपि परिश्रान्तो याममात्रं प्रसुप्यच ।३१ ।।
प्रबोधमुपयातोभूद्विगताध्वपरिश्रमः ।

வழிநடந்த களைப்பாலும் ஆஹாரமில்லாமையாலும், துன்புற்ற அந்த அந்தணன், வயிறாரஉண்டு மென்மையான படுக்கை வாய்த்தமையால் ஒருயாமகாலம் ஆழ்ந்து உறங்கினான். பின்னர் வழிநடந்தகளைப்பு தீர்ந்ததால் கண்விழித்து உணர்ந்தான்.

पादाभ्याशे वर्तमानां दृष्टवा मातंगकन्यकाम् ।।३२ ।।
श्यामां कमल पत्राक्षीं सुकेशीं तनुमध्यमाम् ।
बिम्बाधरां चक्रवाक स्फुरत्कुच युगोन्नताम् ।।३३ ।।
राका शशांकवदनां शुचिगण्डस्थलोज्वलाम् ।
लसत्कौसुंभवसनां सर्वाभरण भूषिताम् ।।३४ ।।
रतिमेव तदामेने प्रत्यक्षीकृत विग्रहाम् ।

பிறகு அந்த அந்தணன் தன் காலடியில் இருப்பவளாயும், யௌவனப்ராயத்திலுள்ளவளாயும், தாமரை இதழ்போன்ற கண்களையுடையவளாயும், கருத்து அழகிய நீண்ட கூந்தலை உடையவளாயும், சிறுத்தஇடையை உடையவளாயும், கோவைப்பழம்போன்ற சிவந்த உதடுகளை உடையவளாயும், சக்ரவாகப்பக்ஷிகளை ஒத்ததாய், உயர்ந்து குலுங்குகின்ற கொங்கைகளை உடையவளாயும், பௌர்ணமியில் உதிக்கின்ற பூர்ணசந்த்ரமண்டலத்தைப் போன்ற முகத்தை உடையவளாயும், ஒளிவீசித்திகழும் கன்னப்புறங்களை உடையவளாயும், குசும்பைச்சாயம் ஏத்தி அழகான ஆடையை அணிந்தவளாயும், எல்லாவிதமான ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட வளாயுமுள்ள சண்டாள கன்னியைப் பார்த்து, எல்லாரது கண்ணும் காணும்படி உருவங்கொண்ட ரதிதேவியாகவே

நினைத்தான்.

निरीक्ष्यैव तदा कन्या अनङ्गशरपीडितः ।।३५ ।।

अब्रवीत् प्रश्रितं वाक्यं कामार्थ सहितं तदा ।

இப்படிப்பட்ட அந்தப்பெண்ணைப்பார்த்த மாத்ரத்திலேயே அந்த அந்தணன் மன்மதபாணங்களால் பீடிக்கப்பட்டவனாய் காம ப்ரயோஜனத்தோடே கூடி இனியதொருவார்த்தை சொன்னான்.

बाले सुश्रोणि भद्रंते कमलायतलोचने ।।३६ ।।

कृतार्थं मां कुरुष्वाद्य मदनास्त्रविमोहितम् ।

அழகிய அல்குலைஉடையவளாய் இளம்பருவத்தினளாய் தாமரைப்பூவின் இதழையொத்த கண்களை உடையவளாய் உள்ள பெண்ணே! உனக்கு மங்களமுண்டாகுக. மன்மதபாணங் களால் பீடிக்கப்பட்ட என்னை உன் கலவிதந்து தன்யனாகும்படி செய்வாயாக.

इत्युक्ता तेन सा कन्या व्रीडयावनतानना ।।३७ ।।

नकिञ्चिदूचे सा कन्या तिर्यक् कृतनिरीक्षणा

இவ்வாறு பிராமணனாலே சொல்லப்பட்ட அந்த சண்டாளப் பெண் வெட்கத்தினாலே குனிந்த முகத்தினளாய் இருந்தாள். அவள் தன் மனத்திலுள்ள ஆசை தோற்றும்படி குறுக்குப்பாய்ந்த பார்வை உடையவளாய் பதில் ஏதும் சொல்லவில்லை.

प्रतिगृह्यच तां कन्यां कनकाभरणोज्वलाम् ।३८ ।।

ब्राह्मणोपि प्रसह्यैव कृतार्थमकरोत्स्मरम् ।

அந்த அந்தணனும் ஸ்வர்ணமயமான ஆபரணங்க ளாலே ஒளிவீசித்திகழ்கின்ற அந்தப்பெண்ணை பலாத்காரமாகப் புணர்ந்தான். தன்னைக் கெடுக்க நெடுநாளாகச் சமயம் பார்த்துக்கொண்டிருந்த மன்மதன் தெய்வாதீனமாய் இந்தமுரட்டு ப்ராம்மணனைப் படுகுழியில் தள்ளிவிட்டேன் என்று தன்னைத் தானே புகழ்ந்துகொள்ளும்படி தன்யனாக்கிவிட்டான்.

एवं चण्डलकन्यायां कृत्वासंगममार्त्तवत्।।३९ ।।

तया सपरिबभ्राम पृथिवीमण्डलं महत्।

அந்த அந்தணன் இப்படி சண்டாளப்பெண்ணோடே ஸம்ஸர்க்கத்தைச் செய்து கொண்டு தன்னை தந்யனாக எண்ணியவனாய் அவளுடன் பரந்த இந்த பூமண்டலம் முழுவதும் ஸஞ்சரித்தான்.

अर्थः प्रयोजनं धनादिरूपं धन्य इतियावत् आर्थेन तुल्यं आर्थवत् मन्यमान इतिशेषः

तुण्डीरमण्डलं प्राप नानातीर्थनिषेवितम् ।।४० ।।

कदाचिद्भागधेयेन वीक्षारण्यं जगामह ।

हृत्तापनाशनं नाम पद्मषण्डपरिष्कृतम् ।।४१ ।।

तीर्थनामुत्तमं तीर्थं दर्शनात्पापमोचनम् ।

पौषेमासे सकृत्स्नात्वा नत्वा तत्रजनार्दनम् ।।४२

जगामच यथा देशं तथैवसहभार्यया ।

இப்படியே அவன் அநேக புண்யதீர்த்தங்கள் நிறைந்த தொண்டைமண்டலத்துக்குச் சென்றான். மேலும் தனது ஜந்மாந்தரபுண்யவசத்தாலே வீக்ஷாரண்யத்தையும், அங்குள்ள தாயும் தாமரை மலர்களின் கூட்டங்களால் அலங்கரிக்கப்பட்ட தாயும், பார்த்தமாத்ரத்திலேயே ஸகலபாபங்களையும் போக்கக் கூடியதாயும் உள்ள ஹ்ருத்தாபநாசநம் என்று ஜகத்ப்ரஸித்தமான தீர்த்தத்தையும் அடைந்தான். தைமாதம் அமாவாசை அன்று அந்த தீர்த்தத்தில் ஒருமுறைஸ்நாநம் பண்ணிவிட்டு, அதன் கரையில் எப்போதும் சயனித்துக்கொண்டிருக்கும் ''அந்நம்தேஹி; ஜலம்தேஹி'' என்று ஜநங்களை யாசிக்கின்ற ஸ்ரீவீரராகவனை ஸேவித்துவிட்டு, அந்தப்பெண்ணோடு கூட தன் ஊருக்குச்சென்றான். (அர்த$_3$ கதௌ யாசநேச என்று தாது)

एवं यौवन कालं त मतीत्य जरयार्दितः ।।४३ ।।

वार्धकं समुपागम्य कालधर्ममुपागतः ।

இப்படி யௌவநமுள்ள காலமெல்லாம் கடந்தபின்பு அந்த அந்தணன் கிழத்தன்மை அடைந்து அதற்கேற்ற ஈளை இருமல் முதலான ரோகங்களாலே பீடிக்கப்பட்டு மரணமடைந் தான். (ஜரா சப்தம் தத்கார்யரோகபரம்)

तस्मिन् पञ्चत्वमापन्ने ब्राह्मणे ज्ञानदुर्बले (र्लभे) ।।४४ ।।

यमदूतास्समागम्य यमलोकमुपानयन् ।

''வித்யதேப்ராஹ்மணேதம:'' என்கிறபடியே ப்ராம்மணன் தன் ஜாதிக்கேற்ற புலனடக்கமின்றி படுகுழியில் விழுந்து கரைறேுவதற்குரிய ஞானமும் இல்லாதவனுய் தன் ஆத்மாவைக் கெடுத்துக்கொண்ட அந்த அந்தணன் மரணமடைந்தபோது ''வம்புலாங்கூந்தல் மனைவியைத்துறந்து பிறர்பொருள் தாரமென்றிவற்றை நம்பினுர் இறந்தால் நமன்தமர் பற்றியெற்றி வைத்து எரியெழுகின்ற செம்பினுல் இயன்ற பாவையைத் பாவீ தழுவென்று'' இப்படியொத்த கடுஞ்சொலார் கடியரான காலனுர் தமர்கள் அந்த ஆத்மாவைப்பற்றிக் கொண்டு போய் தங்களுக்கு யஜமாநனுன யமனுடைய லோகத்தை அடைவித்தார்கள்.

यमस्तु तं महाभागं दृष्ट्वाच सहसोत्थितः ।।४५ ।।

प्रत्युज्जगाम भीतस्सन् वेपमानः पुनः पुनः

निर्भत्स्य किङ्करांश्चैव संपूज्यद्विजसत्तमम् ।।४६ ।।

देव यानेन याहीति प्रश्रितस्त मुवाचह।

அனைத்து மக்களுடையவும் புண்யபாப பலன்களைக் கணக்கிட்டு அதற்கேற்றவாறு செய்யும் தொழிலை உடைய யமன், இந்த ஜந்மத்தில் நல்வழி தப்பினுலும் முந்தய ஜந்மங்களில் மிக்க புண்யங்களைச் செய்தவனுன அந்த அந்தணனைப் பார்த்த மாத்ரத்திலேயே அந்த க்ஷணமே எழுந்திருந்தவனுய் பயந்து நடுங்கி எதிர்கொண்டான். பின் தன்னுடைய கிங்கரர்களையும் பலவாறு கடிந்துகொண்டு அந்த

அந்தணனை அர்க்யம், பாத்யம் முதலியவற்ருல் பூஜித்து தேவரீர் தேவயாந மார்க்கத்திஞலே மோக்ஷத்துக்கு எழுந்தருளலாம் என்று வணக்கத்துடன் விண்ணப்பித்தான்.

ब्राह्मणो देवयानेन जगामानुत्तमं पदम् ।।४७ ।।

वैष्णवं भासमानं तत् यतो नावर्तते पुनः ।

பிராமணனும் யமனிடமிருந்து விடைபெற்றுக்கொண்டு எந்த ஸ்தாநத்தை சேர்ந்தவர்கள் ‘‘मामुपेत्यतु कौन्तेय पुनर्जन्म न विद्यते’’ என்றும் ‘‘यत्प्राप्य न निवर्तन्ते तद्धाम परम् मम’’ என்றும் ‘‘न च पुनरावर्तते न च पुनरावर्तते।अनावृत्तिश्शब्दात् अनावृत्तिश्शब्दात्’’ என்றும் சொல்லுகிறபடியே மீண்டும் கர்மஸம்பந்தத்தில் அகப்படுவதில்லையோ அப்படி புநராவ்ருத்தி சூந்யமாய், ‘‘अत्यर्कानिल दीप्तं तत्स्थानं तस्यमहात्मनः’’ ஆகியவற்றின்படி ஸ்வயம் ப்ரகாசமாய் ச்ரிய:பதியினுடைய போகவிபூதியுமான ஸ்ரீவைகுண்டநகரத்தை तेर्चिषमभिसंभवन्ति अर्चिषोहरह आपूर्यमाण पक्षमापूर्यमाणपक्षाद्यान् षडुदङ्ङेतिमासान् तान् मासेभ्यस्संवत्सरं संवत्सरादादित्यं आदित्याच्चन्द्रमसं चन्द्रमसो विद्युतं तत्परुषोमानवस्सएनान् ब्रह्मगमयत्येष देवपथो ब्रह्मपथ एतेन प्रतिपद्यमाना इमं मानवमावर्तं नावर्तन्ते என்று சொல்லப்பட்ட அர்ச்சிராதி மார்க்கத்திலே சென்று பரிபூர்ண ப்ரமாம்மாநுபவாநந்தம் பெற்ருன்.

अतिपाप प्रसक्तोपि विप्रस्तीर्थानुभावनः ।।४८

अगमत्परमं धाम किं पुनः पुण्यकृज्जनः ।

தேவபாகரே! அந்த அந்தணன் நெடுங்காலம் மஹாபாபங்களில் சம்பந்தமுடையவஞயிருந்தபோதிலும் ஹ்ருத்தாபநாசந தீர்த்த ப்ரபாவத்தாலே மோக்ஷத்தை அடைந்தானென்ருல் எப்போதும்

புண்யமே செய்கின்ற ஜநங்கள் அந்த தீர்த்தத்தில் ஸ்நாநம் பண்ணி ஸ்ரீவீரராகவனையும் ஸேவித்தால் மோக்ஷம் பெறுவதற்கு என்ன ஸந்தேஹம்.

**इति मार्कण्डेय पुराणे क्षेत्रकाण्डे वीक्षारण्य महात्म्ये**

**पञ्चशततमोऽध्याय:**

## श्रीलक्ष्मीनृसिंहपरब्रह्मणे नमः



## श्रीवीक्षारण्यक्षेत्रमाहात्म्ये षष्टोऽध्यायः

சாலிஹோத்ர:

இவ்வளவுகேட்ட பின்னரும் இன்னம் கேட்க வேண்டுமென்று த்ருப்தியில்லாமலிருக்கின்ற தேவபாகருடைய முகத்தைப்பார்து ஸ்ரீசாலிஹோத்ரபகவான் மேலும் தீர்த்த மாஹாத்ம்யத்தை அருளிச்செய்கிறார்.

भूयः श्रृणुष्व विप्रेन्द्र तीर्थमाहात्म्यमुत्तमम्

यस्यश्रवणमात्रेण यान्ति पापानि वै लयम् ।।१ ।।

எல்லாபிராமணர்களுக்கும் எல்லாதேவர்களுக்கும் இந்திரன்போலே யோகக்ஷேமங்களைத் தருவதில்வல்லவரான தேவபாகரே! எந்த தீர்த்தமாஹாத்ம்யத்தைக் கேட்ட மாத்ரத்திலேயே கணக்கற்ற பாபங்களெல்லாம் தொலைந்துவிடுகின்றனவோ அத்தகைய உத்தமமான தீர்த்தமாஹாத்ம்யத்தை இன்னம் உமக்குச்சொல்லுகின்றேன். கவனமாய்கேட்பீராக.

पितामहस्यपुत्रोऽभूत् दक्षोनाम प्रजापतिः

तस्यैका कन्यका नाम्ना सतीतिविदिताऽभवत् ।।२ ।।

பிரம்மாவுக்கு தக்ஷப்ரஜாபதி என்ற ஒரு புத்ரனிருந்தான். அவனுக்கு உலகங்கள் எல்லாவற்றிலும் ப்ரஸித்தையான ''ஸதீ'' என்று ஒரு பெண் இருந்தாள்.

उपयेमे सतां कन्यां हरस्त्रि पुरमर्दनः

न्यवसद्हिमवत्पार्श्वे तपः ,कुर्वन् तयासह ।।३ ।।

''तेषामसुराणां तिस्त्रः पुर आसन्'' என்று தொடங்கி ''सतिस्त्रः पुरोभित्वैभ्यो लोकेभ्योसुरान्प्राण्डदत'' என்று முடியக்கூடிய

ச்ருதியில் ப்ரஸித்தமான த்ரிபுராஸுரஸம்ஹாரத்தினுலே ப்ரஸித்தராய் லோகவ்யஷ்டி ஸம்ஹார கர்த்தாவான சந்த்ரசேகரர் அந்த ''ஸதி'' என்கிற பெண்ணை விவாஹம் செய்துகொண்டார். விவாஹம் ஆனபின் அந்த ஸதியோடுகூட தபஸ்ஸில் ஈடுபட்டவராய் இமயமலையின் தாழ்வரையில் வசித்துக் கொண்டிருந்தார்.

एतस्मिन्नेव कालेतु यष्टुकाम: प्रजापति:

दक्षोनिमन्त्रयाञ्चक्रे पुत्रीर्जामातृभिस्सह ।।४ ।।

இப்படி பரமசிவன் இமயமலையில் மனைவியோடு தவம் செய்துகொண்டிருக்கும் போது தக்ஷப்ரஜாபதி யாகம் பண்ண விரும்பியவராய், தன் பெண்கள் அனைவரையும் அவரவர் கணவன்மார்களோடு யாகத்திற்கு வரவழைத்தார்.

सत्या सह हरं नैव पुत्र्या जामातरं पुन:

निमन्त्र यामास तदा अशुचित्वं विचारयन् ।।५ ।।

அந்த தக்ஷப்ரஜாபதி தன் பெண்களையெல்லாம் மாப்பிள்ளைகளுடன் அழைத்தகாலத்து பரமசிவனை மட்டிலும் அழைக்கவில்லை. காரணம் யாதெனின் :– தமது பிதாவும், அனைத்துலகையும் படைப்பவரும், ப்ராம்மணோத்தமருமான ப்ரம்மாவினுடைய தலையைத் தனது இடதுகைக்கட்டை விரல் நகத்தாலே பரமசிவன் கிள்ளிக்களைந்து விட்டார். உடன் பிரம்மாவானவர் ''எந்தவிதமான குற்றமும் செய்யாத என் தலையை நீ கிள்ளிபடியால் ''நீ கபாலியாகப் போகக்கடவாய்'' என்று சபித்துவிட்டார். ருத்ரன் ப்ரம்மஹத்திபண்ணின அசுத்தி அடைந்தபடியால் அவரையும், அவரைவிட்டுப்பிரியாத ஸதி என்கிற பெண்ணையும் யாகத்துக்கு தக்ஷன் அழைக்கவில்லை. இதற்கு ப்ரமாணம் ''स्वपातकं रुद्रेण स्वयमेव उक्तं मात्स्ये'' ''तत: क्रोधपरीतेन संरक्तनयनेनच। वामाङ्गुष्ठ नखाग्रेण छिन्नं तस्य शिरो मया ''

ब्रह्मा

यस्मादनपराधस्य शिरश्छिन्नं त्वयामम तस्माच्छाप समायुक्तः कपालीत्वं भविष्यसीत्यादि। अत एव कूरेशविजयेप्येवं प्रत्यपादि अब्रह्मण्याशुचित्वा दनवरतमपि ब्रह्मशीर्षास्थि योगादित्यादिकम्

श्रुत्वाऽथ तद्यज्ञविधानमुत्तमं
सती च देवी सहसाजगाम
निषेवितापारिषदैः कुतूहलात्
भर्त्रानिषिद्धापि निवेशनं पितुः ।।६ ।।

பிறகு தன்பிதாசெய்கிற உத்தமமான யாகத்தைக் கேள்வியுற்ற ஸதீதேவி, தன் கணவரான ருத்ரனுலே, ''நீ அங்கே போகவேண்டாமென்று தடுத்தபோதிலும், ''அநாஹூதோऽபி அத்வரம் கச்சேத்'' என்று யஜமானன் அழைக்காது போனுலும் யாகத்தைப் போய் பார்க்கவேண்டியது என்று ப்ரமாணம் இருப்பதால் யஜ்ஞவைபவத்தைப் பார்க்கவேண்டும் என்கிற ஆசையினுலே தனது பரிசாரகர்களான ப்ரமதகணங்களோடே தன் பிதாவான தக்ஷப்ரஜாபதியின் க்ருஹத்துக்கு ஆவலோடு புறப்பட்டுப்போனுள்.

निरीक्ष्य तातं तमनन्यमानसं
जगादकोपात्पति शीलवर्तिनी
हरस्य भार्या हरिणायतेक्षणा
कठोर भावस्फुरिताधरा सती ।।७ ।।

யஜ்ஞகார்யங்களைச் செய்வதில் ஈடுபட்டவராயும், யாகத்திலே தீக்ஷிதராகையாலே மந்த்ரத்தை உச்சரிப்பதைத் தவிர மற்ற விஷயங்களில் மௌநியாய் இருந்தார். தன் பெண்ணை ''வந்தாயா குழந்தாய்'' என்று வரவேற்காமல் அலட்சியமாயிருந்த தன் தந்தையைப் பார்த்தாள். உலகை அழிக்கக்கூடிய ருத்ரனுடைய மனைவியாய் மான் போன்ற கண்ணையுடையவளான ஸதீதேவி, கணவனது ஸ்வபாவத்தை

அநுஸரித்தஸ்வபாவமுடையவளாகையாலே கோபத்தினுலே கலங்கிய மனத்தினளாய் கேட்பார் செவிசுடும் சொற்களை ஒரே க்ஷணத்தில் சொல்ல வேண்டுமென்றதுடிப்பினுலே அப்படி உச்சரிக்கக்கூடாத தன்மையால் துடிக்கின்ற உதடுகளை உடையவளாய் இவ்வாறு சொன்னுள்.

निमन्त्रणं नैव चकर्थ किं पुनः
जगत्प्रभोर्मे त्रिपुराणि जघ्नुषः ।
भर्तुर्हरस्या मितविक्रमस्य
कृत्वाऽऽह्वानं ह्यन्य जामातृकाणाम् ।।८।।

தந்தையே! அளவிடமுடையாத பராக்ரமசாலியாய், த்ரிபுரஸம்ஹாரம் செய்தவராய், ஜகத் ப்ரபுவாய், என்கணவராகையாலே, உமக்கு மாப்பிள்ளேயுமான ருத்ரனே மற்ற மாப்பிள்ளேகளேயெல்லாம் அழைத்திருந்தும் ஏன் அழைக்கவில்லே.

किं विप्रियं तेन कृतं तवासीत्
त्वयाऽपिवा तस्य कृतं किमागः ।
नूनं नचान्तं तव यज्ञकर्म
संप्राप्स्यति प्राकृतवत्करोषि ।।९।।

என் கணவரான சிவனுலே உமக்கு என்ன அபராதம் செய்யப்பட்டது? நீர் தான் அவருக்கு என்ன தீமை செய்தீர்? என்கிறபடியே பரஸ்பரம் த்வேஷத்துக்குக் காரணமிருந்தாலன்றோ இப்படி அலட்சியப்படுத்த வேண்டியிருக்கும். நீர் இப்படி எக்காரணமுமின்றி அலட்சியப்படுத்தியதால் உம்முடைய யாகம் தான் நல்லபடியாக முடியப்போகின்றதா? அதில்லே. எங்களே ஸமான்யமாக எண்ணி இப்படிச் செய்துள்ளீர். நல்லது. மேலே நடக்கப்போகின்றதைப் பார்ப்போம்.

ममावमानात्किल भर्तुरद्य
त्यजामिदेहं भवतस्समक्षम् ।

त्वयाऽस्य चासीत् प्रथमाभिधानं
कर्माधुना नैव भवेच्चभद्रम् ।।१० ।।

என் பர்த்தாவான சிவனே நீர் அவமதித்தீராகையால் உம்மிடத்திலுண்டான இந்த சரீரத்தை இப்போதே உமக்கெதிரே விடுகின்றேன். இதற்கு முன்பு ஏதாவது காரியங்கள் செய்ய நேரிடும்போது என் பர்த்தாவுக்கு முன்னமே அறிவித்து நடத்தியிருக்கின்றீர். இப்போது நீர் செய்த அலட்சியம் நன்ருக முடியமாட்டாது. அநர்த்தத்துக்கே காரணமாகப் போகின்றது.

इतीरयन्ती पितुरग्र एव तत्याज देहं निजयोग योगत:
विस्मापयन्ती दिविषद्गणाधिपान् असह्यकोपादयितावमानत: ।।११।।

இவ்வாறு சொல்லியவளாய், தன்னுடைய கணவரை அவமதித்ததால் பொறுக்கமாட்டாதவளான ஸதீதேவி யாக சாலேயிலுள்ள ப்ரதான தேவதைகள் அனைவரும் ஆச்சர்யப்படும் படி தன் தந்தையின் முன்னிலேயிலே பூமிமுதலான கார்யதத்த்வங்களே ஜலாதிகளான காரணதத்த்வங்களில் லயிப்பிக்கைக்குக் காரணமாய், தபஸ் சக்திவிசேஷத்தோடும் கூடி முச்சை அடக்குதலாகிற யோகானுஷ்டானமாகிற உபாயத்தினுலே தன் தேஹத்தை விட்டுத் தன் ஆத்மாவைப் பிரித்து மேல் எழுப்பிக்கொண்டாள்.

गणाश्च सर्वे खलु भीतमानसा दिशंययुर्यत्र पुरान्तक:स्थित:
निवेदयामासु रशेषमग्रत: कृतं यदासीद्धरभार्यया तदा ।।१२ ।।

அப்போது அவளுடன் வந்த பூதகணங்கள் எல்லாரும் என்ன ஆகுமோ என அஞ்சிய மனத்தராய் த்ரிபுரஸம்ஹாரகனுன ருத்ரன் இருக்கின்ற இடத்துக்குச் சென்ருர்கள். அங்கே சென்று அவருடைய பத்நியான ஸதீதேவி யஜ்ஞஸதஸ்ஸில் வந்து தன் தந்தையை வெறுத்ததையும், அவர் ஒருபதிலும் சொல்லாமல் உபேக்ஷித்ததையும், உடன் ஸதீதேவியோக ப்ரபாவத்தினுலே அவர் முன்னிலேயிலேயே தன் தேஹத்தைவிட்டு ஆத்மாவைப் பிரித்துக் கொண்டமையையும், அங்கு நடந்த செய்திகள்

முழுவதையும் அவருக்குத் தெரிவித்தார்கள்.

निशम्य तद्वाक्यमभद्रसंहितं सवीरभद्रं जनितं चकारह

ललाटतः स्वेदलवात् भयंकरं प्रशान्तशान्तिः किल संहृतक्षमः।।१३।।

ஸதியின் பார்த்தாவான ருத்ரன் தன் கணங்களது அமங்களமான வார்த்தையைக் கேட்டு தன் மனத்தை அடக்க மாட்டாதவனுய் பொறுமையிழந்து தனது நெற்றியிலுண்டான வியர்வைத்துளியினுலே ஸமஸ்தஜநபயங்கரனுன வீரபத்ரனைத் தோற்றுவித்தார்.

पुरस्थितं तं समवेक्ष्य लोचनैः वमन्बहिर्वह्निमिदं वहन्निव

जगज्जगादाशु जगत्पतिः स्वयं स्विद्यन्निजाङ्गोद्भवमन्युना हरः।।१४।।

ஜகத்பதியான ருத்ரன் தன் கண்களாலே இவ்வுலகம் முழுவதையும் சாம்பலாக்க நினைத்தவன்போலே நெருப்பைக் கக்குகின்றவனுய் சரீரத்திலிருந்து வெளிப்பட்ட கோபாக்னி யாலே உடல்முழுவதும் வியர்க்கப்பெற்றவராய் எதிரே உள்ள அந்த வீரபத்ரனை நோக்கி இவ்வாறு சொன்னுர்.

सपापकृद्यत्र करोति वै मघं स्वरक्षणा दक्षतपाः प्रजापतिः

नाम्ना स दक्षोपि ममापकारकृत् त्वं तत्र गत्वाशु नयस्व तं यमम्।।१५।।

வீரபத்ர! மஹாபாபியாய் தன்னை ரக்ஷித்துக்கொள்ளத் தக்கதான தபஸ் இல்லாதவனுய் பெயரால் மாத்ரம் தக்ஷன் எனப்படுமவனுயும், கார்யத்தில் திறமையற்றவனுகையாலே அதக்ஷனுயும், எனக்கு அபகாரியுமான அந்த தக்ஷன் எந்த இடத்தில் யாகம் பண்ணுகிருனே, அவ்விடத்திற்குச் சென்று, என்னுலே நினைக்கப்பட்டவனுயும், நினைத்தபடியே பயங்கரமான உருவத்தை உடையவனுமாகிய நீ போய், அவனை யமலோகத்துக்கு அனுப்பிவைப்பாயாக.

इतीरितस्तेन स वीरभद्रः प्रवर्तते यत्र हि दक्षयज्ञः।

जगाम तत्राशु तदाज्ञयैव वीरोऽरिभावाद्धृत हेतिसंघः।।१६ ।।

இப்படி த்ரிபுராரியாலே நியமிக்கப்பட்டவனுய் ஸ்வயம்

வீர்யசாலியாய், அவ்விடத்தில் சத்ருக்கள் எதிர்த்துவருவார்கள் என்ற எண்ணத்தினுலே அநேக ஆயுதங்களோடுகூடியவனுய் வீரபத்ரன் தக்ஷனுடைய யாகம் எங்கு நடக்கிறதோ அவ்விடத்திற்கு ருத்ரனது ஆணையாலே போய்ச்சேர்ந்தான்.

दक्षस्य यज्ञोऽथ ददर्श देवान् सऋत्विजो मन्त्रविदो निषण्णान् ।
भृगुंक्रतुश्चांगिरसं वसिष्ठं मरीचिमत्रिं पुलहं पुलस्त्यम्।।१७।।

பிறகு அந்த வீரபத்ரன் தக்ஷனுடைய யாகஸதஸ்ஸிலே ஹவிர் பாகத்துக்காக அழைக்கப்பட்டவர்களாய் வந்திருக்கின்ற தேவர்களையும் யஜ்ஞத்தில் ஓதப்படவேண்டிய மந்த்ரங்களை அறிந்தவர்களாய் ஸதஸ்ஸில் வீற்றிருப்பவர்களாயும், ஹோதா, அத்வர்யு, உத்காதா, ப்ரம்மா முதலிய பதினுறு ரித்விக்குகளாயுமுள்ள ப்ருகு க்ரது அங்கிரஸ் வசிஷ்டர், மரீசி, அத்ரி, புலஹர், புலஸ்த்யர் முதலானவர்களையெல்லாம் பார்த்தான்.

दृष्ट्वाचतं वीरमुदारसत्वं संवर्तरुद्रं धृतविग्रहं वा
प्रदुद्रुवुः केचनतत्र देवाः योद्धुञ्च केचित्सहसाप्रवृत्ताः।।१८।।

மிக்க பலசாலியாய் பயங்கரமான உருவத்துடன் ப்ரளயகாலருத்ரனைப்போலே வந்த வீரபத்ரனைக் கண்டு அங்கிருந்த சில தேவர்கள் ஓடிப்போனுர்கள். தைர்யசாலிகளான சில தேவர்கள் அக்கணமே போர்புரியமுற்பட்டனர்.

सवीर एको निजचापमुक्तैः पतत्रिभिर्भिन्न निकृत्त गात्रैः ।
तस्तार भूमिं तरसासुरेशैः पुरा पुरारातिरिवासुराधिपैः।।१९।।

அந்த வீரபத்ரன் தான் ஒருவனுகவே தனது வில்லினின்றும் விடப்பட்ட பாணங்களாலே பிளக்கப்பட்டும், அறுக்கப்பட்டும் இருக்கின்ற தேவதைகளுடைய சரீரங்களாலே த்ரிபுராரியான சிவன் த்ரிபுராஸுரர்களுடைய சரீரங்களாலே பூமியை மறைத்தாற்போலே மறைத்துவிட்டான்.

उत्पाट्यच श्मश्रु भृगोस्सकोपात् चिक्षेप दक्षस्य शिरो निकृत्य
खड्गेन तद्यज्ञहुताशनस्य प्रद्योतमानासु शिखासुतूर्णम् ।२०।।

அந்த வீரபத்ரன் ப்ருகுமஹர்ஷியினுடைய முகத்திலுள்ள ரோமங்களைக்களைந்துவிட்டான். மிகுந்த கோபத்துடன் தக்ஷனுடைய தலையைக் கத்தியால் அறுத்து அத்தலையைக் கொழுந்துவிட்டெரிகின்ற யாகாக்நியில் சடக்கெனப் போட்டுவிட்டான்.

एवं तावद्यज्ञविघ्नं तदानीं प्रीतिं कृत्वा राक्षसानाञ्च वीरः।
रुद्रस्याथो पादमूलंजगाम सर्वं तस्मै ज्ञापयामास तद्वत्।।२१।।

இவ்வாறு வீரபத்ரன் யாகத்துக்கு இடையூறையும், அதனாலே छिद्रं हि मृगयन्तेऽत्र विद्वांसो ब्रह्मराक्षसाः என்கிற படியே ராக்ஷஸர்களுக்கு ஸந்தோஷத்தையும் பண்ணிவிட்டு பரமசிவனது பாதாரவிந்தத்தின் கீழ்ச்சேர்ந்து, தான் செய்த காரியத்தையெல்லாம் தெரிவித்தான்.

यदा दक्षस्याशु चिच्छेद वीर
स्तदैवासीदग्रतो ब्रह्महत्या।
हरश्चासौ मुक्तिमिच्छन्नथास्या
श्चकारेशो बहुतीर्थाभिसेवाम्।।२२।।

அப்போது ருத்ரனாலே நியமிக்கப்பட்டு வீரபத்ரன் தக்ஷனது தலையை வெட்டினானே அப்போதே, யஜமானனாலே நியமிக்கப்பட்டு வேலைக்காரன் செய்யும் புண்யபாபங்களெல் லாம் யஜமாநனுடையதாகவே ஆகும் என்பது சாஸ்த்ரஸித்தம். எனவே உடனே ப்ரம்மஹத்தி என்ற பாபம் ஒரு பெண்ணுருக்கொண்டு ருத்ரன் எதிரேபோய் நின்றது. 'तरति ब्रह्महत्यां योऽश्वमेधेन यजते' என்று அந்த ப்ரம்மஹத்தி நிவ்ருத்திக்காக அச்வமேதயாகம் செய்ய எண்ணினான். பத்நியில்லாதவனாகிய தனக்கு अयज्ञोवा एषः यः अपत्नीकः என்கிறபடி யாகம் பண்ண யோக்யதை இல்லாமையாலும், எல்லாதேவதைகளுடையவும், ரிஷிகளுடையவும் விரோதத்தா

லும் அச்வமேதயாகம் பண்ணஇயலாது என நிச்சயித்தான். பத்நியில்லாமல் ஓரிடத்திலிருக்கக்கூடாத அருவருப்பினுலும், மஹாஸமர்த்தனுன அந்த ருத்ரன் ப்ரமஹத்தி பாபத்தினின்றும் விடுபட எண்ணிபலவிதமான புண்யதீர்த்தங்களுக்குச் செல்ல எண்ணினுன்.

यदाससर्वतीर्थानां सेवया ब्रह्महत्यया

नमुक्तश्च तदा विप्र विषण्णोऽभूत्त्र्यंबकः।।२३।।

தேவபாகரே! அந்த ருத்ரன் எல்லாதீர்த்தங்களில் ஸ்நாநம் பண்ணியும் ப்ரமஹத்தியிலிருந்து விடுபடவில்லே. அதனுல் அவன் மிகவும் துயருற்ருன். (நாலாவது பாதத்தில் ஒரு அக்ஷரமில்லாதது ரிஷியினுல் சொல்லப்பட்டதால் குற்றமாகாது).

जगादाकाशवाणी तं कृपयाऽऽविष्टमानसा।

ततो विषण्णवदनं प्राणायामपरायणम्।।२४।।

துயரமிகுதியால் வாடிய முகத்தனுய் ப்ராணுயாமபரனுன ருத்ரனேப் பார்த்து ஆகாசவாணீ கருணேயினுலே இரங்கிய மனத்தளாய் இவ்வாறு சொன்னுள்.

आकाशवाणी

हृत्तापनाशनं नाम विभोस्तीर्थमनुत्तमम्।

वीक्षारण्ये प्रसिद्धं तद्याहिमुक्तोभविष्यसि।।२५।।

ஹே பரமேச்வரா! வீக்ஷாரண்யத்தில் ஹ்ருத்தாபநாசநம் என்று ஸ்வாமியினுடைய அபிமானத்தைப்பெற்றதான உத்தமமான புண்யதீர்த்தம் இருக்கின்றது. அந்த தீர்த்தத்துக்குச் செல்லவும். ப்ரம்மஹத்தியினின்றும் விடுபடுவீர்.

श्रुत्वैवमाकाशगिरं हरो धर्मार्थसंहितम्।

ब्रह्महत्याविमोक्षार्थं ययौ हृत्तापनाशनम्।।२६।।

இப்படி தர்மஸித்தியாகிற பலனேடுசேர்ந்த ஆகாசவாணியை ருத்ரன் கேட்டு ப்ரம்மஹத்தி பாபத்தினின்றும்

விடுபடுவதற்காக ஹ்ருத்தாபநாசநதீர்த்தத்தை நோக்கிப் போனான்.

वीक्षारण्ये ददर्शाथसर: स्मरहरोविभु: ।

यत्र स्नात्वातिपापेभ्य: सर्वेभ्योमुच्यते जन:।।२७।।

பிறகு மன்மதனைத் தன் நெற்றிக்கண்ணால் சாம்பலாக்கியவனும், ஜகத்ப்ரபுவுமான ருத்ரன் எந்த ஹ்ருத்தாபநாசநதீர்த்தத்தில் ஸ்நாநம் செய்த ஜநங்கள் எல்லா மஹாபாதகங்கனின்றும் விடுபடுகின்றார்களோ அத்தகைய வீக்ஷாரண்யத்தில் ப்ரஸித்தமான ஹ்ருத்தாபநாசனம் என்கிற ஸரஸ்ஸைப் பார்த்தான்.

हृत्तापनाशनं नाम विख्यातं भुवियत्सर:

तत्रस्नात्वा विमुक्तोऽभूदीश्वरो ब्रह्महत्यया।।२८।।

பூலோகத்தில் ஹ்ருத்தாபநாசநம் என்று எந்த ஸரஸ்ப்ரஸித்தமாயுள்ளதோ அந்த ஸரஸ்ஸிலே ருத்ரன் ஸ்நாநம் செய்து ப்ரம்மஹத்திபாபத்தினின்றும் விடுபட்டான்.

यत: पुण्यं भगवताऽधिष्ठितं तीर्थमुत्तमम्।

वीक्षारण्यञ्च तत्रासीत् चक्रेवासं ततो हर:।।२९।।

எந்த காரணத்தினாலே ஆறுகுணங்கள் நிரம்பப்பெற்ற ஸ்ரீவீரராகவனாலே எல்லாதீர்த்தங்களைக் காட்டிலும் உத்தமமாக விசேஷித்து அபிமானிக்கப்பட்டதாயும், பாவநமாயும் உள்ள ஹ்ருத்தாபநாசந தீர்த்தமும் புனிதமான வீக்ஷாரண்யமும் அவ்விடத்திலுள்ள காரணத்தினால் ருத்ரன் அந்த க்ஷேத்ரத்தில் வாஸம்செய்தான்.

इदानीमपि विष्णवाख्यं धाम शेषाख्यतल्पकम् ।

ईश्वर: प्रणमन्नाम वायव्यां दिशितिष्ठति।।३०।।

இப்போது கூட ஸாக்ஷாத் ஈச்வரனான ருத்ரன் திருவநந்தாழ்வானாகிற திருப்பள்ளிமெத்தையில் கண்வளர்ந்தருளுகிற ஸர்வாந்தர்யாமியான தேஜஸ்ஸைக் குறித்து

दासभूताः स्वतस्सर्वे ह्यात्मानः परमात्मनः

अतोहमपि ते दास इति मत्वा नमाम्यहम् ।।

என்று மந்த்ரராஜபதஸ்தோத்ரத்திலே ஸர்வஜ்ஞனன ருத்ரன் தானே சொன்னபடியே தண்டம் ஸமர்ப்பித்துக்கொண்டு வாயுமூலையிலுள்ளான். இது ஜகத்ப்ரஸித்தம்.

एवं प्रभाववत्तीर्थं नाम्ना हृत्तापनाशनम् ।

ख्यातं त्रिभुवनेप्यस्मिन्नतस्तीर्थं प्रणम्यताम्।।३१।।

இத்தகைய ப்ரபாவம் உடையது ஹ்ருத்தாபநாசநம் என்கிற தீர்த்தம். இது மூவுலகிலும் ப்ரஸித்தம். ஆகையால் தேவபாகரே! இந்த தீர்த்தம் உம்மால் ஸேவிக்கத்தக்கது. இப்படிக் கேட்ட தேவபாகர் சாலிஹோத்ரபகவானைக் குறித்து மேலும் வினவுகிறார்.

कथं स भगवान् शंभुः तिरस्कृत्यमहानदीम्।

गंगां त्रिपथगां देवीं महापातकनाशिनीम् ।।३२।।

विष्णु पादां बुजोद्भूतां सागरस्वर्गपद्धतिम्।

हृत्तापनाशनं तीर्थं ययौ पापापनुत्तये।।३३।।

ஸர்வஜ்ஞனன சம்பு அறுபதினாயிரம் ஸகரபுத்ரர்களை பரிசுத்தர்களாக்கினபடியால் அவர்களுக்கு ஸ்வர்கமார்க்கம் போலே உள்ளதாய், ''तीर्थीकुर्वन्ति तीर्थानिस्वान्तस्थेन गदाभृता'' என்கிறபடியே கங்கைபுஷ்கரம் முதலான நதீ தடாகாதிகளுக்குத் தம்முடைய ஸம்பந்தத்தினாலே பாவநமுண்டாக்கின பவித்ராணும் பவித்ரரான பரமபுருஷனுடைய திருவடித்தாமரை யினின்றும் உண்டானதாயும், மஹாபாதகங்களையும் போக்கக் கூடியதாயும், வேதத்தினால் துதிக்கப்பட்டதாயும், முதலில் ஸ்வர்க்கலோகத்திலும் அங்கிருந்து பூலோகத்திலும் பின் பாதாளலோகத்திலும் பெருக்கெடுத்தோடுகின்றது. ''यच्छौच निस्सृत सरित्प्रवरोदकेन तीर्थेन मूर्ध्नि विधृतेन शिवः शिवोऽभूत्''

என்கிறபடியே தனக்கு மங்களத்தைத் தரக்கூடிய சிவன் என்னும் பெயரைப் பெறுவதற்குக் காரணமான ஸாக்ஷாத் கங்கை என்கிற மஹாநதியிருக்க அதைப் புறக்கணித்துவிட்டுத் தனது பாபம் போவதற்காக ஹ்ருத்தாபநாசன தீர்த்தத்தைக் குறித்துப்போனுன் என்பது எப்படிப் பொருந்தும்? हस्त चेन्मधुलभ्येत किमर्थं पर्वतं व्रजेत्' என்கிறபடியே தன் கையில் தேனிருக்கக்த தேனுக்காக மலைக்குப்போவாருண்டோ?

இவ்வாறு வினவிய தேவபாகருக்கு ஸ்ரீசாலிஹோத்ர பகவான் உத்தரம் அருளிச்செய்கின்ருர்.

साधुपृष्टोस्मि भवता मुनेसूक्ष्ममनीषया
अत्रैवोदाहरन्तीमं इतिहासं पुरातनम् ।।३४ ।।
नारदस्य च देवर्षेस्तत्पितुश्च स्वयं भुवः ।

தேவபாகமுனிவரே! மிகவும் ஸூக்ஷ்மபுத்தியினுலே நல்ல கேள்வி கேட்டீர். இவ்விஷயத்தில் தேவரிஷியான நாரதருக்கும் அவரது தந்தையான ஸாக்ஷாத் ப்ரம்மாவுக்கும் நடந்த ஸம்வாதமாகிற அநாதியான இதிஹாஸத்தைப் பெரியோர்கள் அர்த்தத்தை நிச்சயிப்பதற்காக எடுத்துக்காட்டி யுள்ளார்கள். உரையாடலை உமக்கு நான் சொல்லுகிறேன். கேளும்.

कदाचिन्नारदोलोकान्निरीक्ष्यच समन्ततः ।।३५ ।।
भूलोक मुपयातोऽभूत् तत्रतुण्डीरमण्डलम् ।
वीक्षारण्यं विचित्रंच सर्वलोकेषुविश्रुतम् ।।३६ ।।

ஸர்வலோகஸஞ்சாரியான நாரதபகவான் ஒரு காலத்தில் நாலுதிக்கிலும் அனைத்துலகங்களையும் பார்த்துவிட்டு பூலோகத்தை அடைந்தார். அதிலும் தொண்டைமண்டலத்தை அடைந்து எல்லா உலகங்களிலும் ப்ரஸித்தமாய் ஆச்சர்யகரமான வீக்ஷாரண்யத்தை அடைந்தார்.

हृत्तापनाशनंतीर्थं तत्रदृष्ट्वामहासरः ।

विस्मयं परमं प्राप्य मुनीन्द्रान् स्नातुमागतान् ।।
वसिष्ठं भार्गवं व्यासं अत्रिं वाल्मीकिमेवच ।
पुलस्त्यं पुलहंचैव क्रतुमंगिरसं तथा । ३८
अरिष्टनेमिनंचापि जमदग्निं महामुनिम् ।
विश्वामित्रं गाधिपुत्रं प्रतिसर्गविधायिनम् ।।३९ ।।
पप्रच्छ नारदोऽतीव संशयापन्नमानसः ।

அந்த நாரதர் வீக்ஷாரண்யத்தில் ஹ்ருத்தாபநாசனம் என்கிற மஹாஸரஸ்ஸான புண்யதீர்த்தத்தில் ஸ்நாநம் பண்ணுவதற்காக வந்திருந்த வசிஷ்டர், பார்கவர், வ்யாசர், அத்ரி, வால்மீகி, புலஸ்த்யர், புலஹர், க்ரது, அங்கிரஸ், அரிஷ்டநேமி, மஹாமுநியான ஜமதக்நி, காதியின் பிள்ளையாய், த்ரிசங்குவின் யாகத்தில் ஹவிர்பாகத்தைப் பெற்றுக்கொள்ளுமாறு அழைக்கப்பட்ட தேவதைகள் வராததால் அவர்களிடமுள்ள கோபத்தினலே 'अन्यमिन्द्रंकरिष्यामि लोकोवास्या दनिन्द्रकः' என்று சொல்லப்பட்டபடி மறுலோகத்தை ஸ்ருஷ்டிபண்ணின விச்வாமித்ரர் என்று இந்தரிஷிகளையடங்க ப்ராதிஸ்விகரூபத் தாலே பிரித்துப்பார்த்து அந்த நாரதர் ஸந்தேஹம் அடைந்த மனத்தை உடையவராய் ஆச்சர்யமுற்றவராய் இவ்வாறு வினவினர்.

दर्शपुण्ये पुण्यतिथौ हित्वात्रिपथगां नदीम् ।५० ।।
किमर्थमत्रस्नातुंवै यूयंहिसमुपागताः ।

ஹே மஹர்ஷிகளே! தை மாதத்தில் அமாவாசையாகிற இந்த புண்யநதியில் ஸாக்ஷாத் கங்காநதியை விட்டு ஸர்வஜ்ஞர்களான நீங்கள் இந்த தீர்த்ததில் ஸ்நாநம் பண்ண ஏன் எழுந்தருளியுள்ளீர்கள்.

இப்படி வினவிய நாரதருக்கு முன்கூறிய மஹர்ஷிகளெல்லாரும் உத்தரம் அருளிச்செய்கிருர்கள்.

सर्वज्ञोपि नजानीषे साक्षात्पुत्रोसिवेधसः ।।४१ ।।
तीर्थस्यास्यतु माहात्म्यं विचित्रं लोकविश्रुतम् ।
जानाति भगवानेकः स्वयंभूश्चतुराननः ।।४२ ।।
वक्तुं वै नवयं शक्ताः सकाशं ब्रह्मणः पितुः ।
गत्वापृच्छस्व सन्देहं भगवान् शमयिष्यति।।४३।।
तस्मादेव वयं तावन् महात्मन् सर्वतोधिकम् ।
माहात्म्यमद्भुतं सम्यक् श्रुत्वैव समुपागताः ।।४४ ।।

ஹே நாரதரே! நீர் ஸாக்ஷாத் ப்ரமமாவுக்கு புத்ரராவீர். இயற்கையாகவே நீர் ஸர்வஜ்ஞர். அப்படியிருக்க உலக ப்ரஸித்தமாயுள்ள இந்த தீர்த்தத்தின் மஹிமையை அறியீரோ? நான்கு வேதங்களேயும் நான்கு முகங்களாலும் ஸதா முழங்கிக் கொண்டிருப்பவராயும் ஒரு ஸாதாரணபிதாவினுலன்றிக்கே மஹாவிஷ்ணுவின் நாபீகமலத்தில் உண்டானவராயும், ஜ்ஞானம், சக்தி இவை நிறைந்தவருமான ஸாக்ஷாத் ப்ரம்மா ஒருவரே இந்த வைபவத்தை அறிந்தவர். இதன் வைபவத்தைச் சொல்ல நாங்கள் சக்தர்களல்லர். ஆகையாலே உமக்குப் பிதாவான ப்ரம்மாவினிடத்தில் சென்று கேளும். மஹாஜ்ஞாதாவான ப்ரம்மா உமது சந்தேஹத்தைப் போக்குவார். நாரதரே! நாங்களும் அந்த நான்முகனிடமிருந்தே எல்லா தீர்த்தங்களேக் காட்டிலும் அதிகமாயும் ஆச்சர்யகரமுமான இந்த தீர்த்தத்தின் வைபவத்தை எங்கள் ஐயமெல்லாம் தீரும்படி நன்ருக கேட்டுக்கொண்டே வந்தோம்.

तथेति तत्र स्नात्वावै नारदस्तु महामुनिः ।
पितुस्सकाशमगमत्संशयाविष्टमानसः ।।४५ ।।
अभिवाद्य विधातारं विनीतः पार्श्वतःस्थितः ।
अपृच्छत्संशयं तीर्थविषयं वीतमत्सरः ।।४६ ।।

ரிஷிச்ரேஷ்டரான ஸ்ரீநாரதபகவான் தாம் ஸர்வஜ்ஞராக

இருந்தபோதிலும் ஆக்ரஹமில்லாதவராய்க்கொண்டு இந்த தீர்த்த வைபவம் இப்படிப்பட்டதா? நல்லது என்று அங்கீகரித்து அந்த தீர்த்தத்தில் ஸ்நாநம் முதலிய அநுஷ்டானங்களை முடித்துக்கொண்டார். எல்லாத் தீர்த்தங்களைக்காட்டிலும் கங்கை தான் சிறந்தது என்று நாம் கேட்டிருக்கின்றோமே. இந்த மஹரிஷிகள் கங்கையைக்காட்டிலும் இந்த தீர்த்தம் சிறந்தது என்கிறார்களே! இதெப்படி இருக்கமுடியுமென்று சந்தேகம் கொண்டமனத்தவராய் தமது பிதாவான ப்ரம்மாவின் அருகே சென்றார். பின்னர் அனைத்தையும் படைக்கக்கூடிய ப்ரம்மாவை நமஸ்கரித்து விநயம் தோற்றும்படி பக்கத்தில் நின்று கொண்டு ஹ்ருத்தாபநாசனதீர்த்தம் கங்கை முதலிய அனைத்துத் தீர்த்தங்களைக் காட்டிலும் ச்ரேஷ்டமானதா அன்று என்கிற தம்முடைய ஸந்தேஹத்தைத் தெரிவித்துக்கொண்டார்.

ब्रह्मन् भूमण्डले पुण्ये वीक्षारण्ये महत्तरम्।
दृष्टं तीर्थं महापुण्यं नाम्ना हृत्तापनाशनम्।।४७।।
गंगादि तीर्थादधिकं कथितं पुलहादिभिः।
कथं गंगादि तीर्थेभ्यः आधिक्यं तस्यमे वद।।४८।।
हृत्तापनाशनस्यासीत् त्रिषुलोकेषुविश्रुतम्।

உலகிலேயே உத்தமான ஞானசக்திகள் நிறைந்த தந்தையே! பூமண்டலத்தில் பாவநமான வீக்ஷாரண்யத்தில் மிகப்பெரியதாயும், மிகப் புனிதமானதாயும்,ஹ்ருத்தாபநாசனம் என்றபெயரோடு கூடியதாயுமுள்ள ஒரு புண்யதீர்த்தம் அடியேனால் பார்க்கப்பட்டது. அந்த தீர்த்ததை எல்லா தீர்த்தங்களைக்காட்டிலும் சிறந்ததான கங்கையைக் காட்டிலும் ச்ரேஷ்டமானது என்று புலஹாதி மஹர்ஷிகள் சொல்லுகின்றார் களே. அந்த தீர்த்தத்துக்கு கங்காதி தீர்த்தங்களைக் காட்டிலும் மேன்மை எப்படி மூன்று உலகங்களிலும் ப்ரஸித்தமாயிற்று? அடியேனுக்கு ஸாதித்தருளவேணும்.

இப்படி தம் மூத்த குமாரரான நாரதர் வினவியதைக் கேட்ட ப்ரம்மா உத்தரமருளிச்செய்கின்றார்.

नमस्कृत्वाऽप्रमेयाय विष्णवे प्रभविष्णवे।४९ ।।
अविकाराय सततं सदा सद्रूपशोभिने ।
हृत्तापनशनस्यास्य वक्ष्ये माहात्म्यमुत्तमम् ।।५० ।।
येनाधिक्यमभूत्तस्य गंगादिभ्योपिनारद ।

நாரத! 'यतो वचोनिवर्तन्ते' என்கிறபடியே அளவிட முடியாத ஸ்வரூபஸ்வபாவராயும், परास्यशक्तिः विविधैवश्रूयते என்கிறபடியே சிந்திக்க இயலாத சக்தியுடையவரா யும், ஸ்வரூப விகாரிகளான ப்ரக்ருதி முதலானவற்றைப் போலவும், ஸ்வபாவ விகாரிகளான நம்போன்ற சேதநர்களைப் போலவுமில்லாமல் எப்போதும் இரண்டுவிதமான விகாரமில்லா தவராயும் अस्ति,जायते, वर्धते, परिणमते, अपक्षीयते, नश्यति என்கிறபடி, ''இருக்கிறது, பிறக்கிறது, வளர்கிறது, மாறுகிறது, தேய்கிறது, அழிகிறது'' ஆகிய ஆறுவகைவிகாரங்களும் இல்லாமல் எப்போதும் ஒரு ரூபத்தில் உள்ள திவ்யமங்கள விக்ரஹத்தாலே ஒளிவீசித்திகழ்பவராயும், ஸர்வாந்தர்யாமியு மான புருஷோத்தமனை நமஸ்கரித்து அந்த தீர்த்தத்துக்கு எதனாலே கங்கை முதலிய தீர்த்தங்களைக் காட்டிலும் அதிக மாஹாத்ம்யம் உண்டாயிற்றோ அத்தகைய ஹ்ருத்தாபநாசன தீர்த்தத்தினுடைய உத்தமமான மாஹாத்ம்யத்தை உமக்கு உண்மையாகச் சொல்லுகின்றேன்.

पुराकृत युगे तात प्रद्युम्नो नाम नामतः।।५१।।
राजा परमधर्मात्मा बभूवामितविक्रमः
मनोः स्वायंभुवस्यासीत् एष वंशेमहायशाः।।५२।।

நாரத! முன் க்ருதயுகத்தில் மிகவும் தர்மாத்மாவாயும், அளவிடமுடியாத பராக்ரமம் உடையவராயும் ''ப்ரத்யும்நன்'' என்கிற பெயரிலே ப்ரஸித்தராய் ஒரு ராஜா இருந்தார். மஹாகீர்த்திமானன இந்த ப்ரத்யும்நன் ஸ்வாயம்புவமநுவின்

வம்சத்தில் பிறந்திருந்தார்.

पुत्रान्नलेभे राजाऽसौ संशयाविष्टमानसः।
तपः कर्तुं समारेभे तस्यतीर्थस्यरोधसि।।५३।।
अनेकवर्ष साहस्रं तपस्तप्त्वा सुदारुणम् ।
नलेभे पुत्र सौभाग्यं अतश्चक्रे पुनस्तपः।।५४।।
वामपादस्य सहसा सोंगुष्ठेन भुवः स्थलम्।
निपीड्यनिवसन्नेव शतवर्षं महातपाः।।५५।।

அந்த ப்ரத்யும்நன் என்கிற மஹாராஜன் புத்ரர்களை அடையவில்லை. அதனால் எந்த இடையூறினால் தமக்குப் புத்ரபாக்யம் கிட்டவில்லையோ என எண்ணியமனத்தனாய், எல்லா இடையூறுகளையும் தபஸ் நீக்கிவிடும் என்று சாஸ்திரங்கள் சொல்லுவதால் தவமே பண்ணக்கடவோம் என நிச்சயித்து அந்த ஹ்ருத்தாபநாசன தீர்த்தத்தின் கரையில் தவம் செய்யத்தலைப்பட்டான். பலஆயிரம் ஆண்டுகள் மிகக்கொடிய தவம் செய்தும் புத்ரபாக்யம் கிட்டவில்லை. அதனால் தனது சக்தி விசேஷத்தினாலே தன் இடது காலின் கட்டைவிரலை பூமியில் ஊன்றிக்கொண்டு நின்றவனாய் மீண்டும் நூறுவருஷம் தபஸ் பண்ணினான்.

ततो विष्णुर्महातेजाः शंखचक्रगदाधरः।
गरुडस्कन्धमारुह्य जगामास्य तपोवनम्।।५६।।

இப்படி ப்ரத்யும்நன் செயற்கரிய தவம் பண்ணியபின் ஸ்ரீபுருஷோத்தமன் கோடிஸூர்யன் உதித்தாற்போன்ற திவ்ய தேஜஸ்ஸுடையவராயும், தமக்கே உரியவைகளான ஆயுதங்களாயும், ஆபரணங்களாயுமுள்ள திருவாழி திருச்சங்குகளை ஏந்தியவராய் கருடன் மீதேறிக் கொண்டு அந்த ராஜாவின் தபோவநத்துக்கு எழுந்தருளினார்.

आगतो भगवान्विष्णुरेष साक्षात्सनातनः।
विश्वस्य धातापुरुषः पुरस्ते पुरुषोत्तमः।।५७।।

इत्याकाशवचः श्रुत्वा प्रद्युम्नः प्रमुदान्वितः।
उन्मील्य नेत्रेराजर्षिः ददर्श पुरुषोत्तमम्।।५८।।

ப்ரத்யும்ந மஹாராஜரே! ஆறுகுணங்களும் நிரம்பப்பெற்றவராய், அநாதிஸித்தராய், அனைத்து உலகுக்கும் தாரகரும் போஷகருமாய், தேவர்கள், விலங்குகள், மனிதர்கள், தாவரங்கள் முதலிய விசித்ரமான ஜகத்தைப் படைப்பவரும், பக்தர்கள், முக்தர்களைக்காட்டிலும் வேறுபட்டவரான ச்ரிய:பதி தானே எழுந்தருளி உம்முடைய எதிரே ப்ரத்யக்ஷமாக நிற்கிறார் என்று முழங்கிய ஆகாச வாணியை ப்ரத்யும்நன் கேட்டு பேராநந்தமுடையவனாய் தனது கண்களைத் திறந்து புருஷோத்தமனான ஸ்வாமியை ப்ரத்யக்ஷமாகப் பார்த்தான்.

उत्फुल्ल पुण्डरीकाक्षं विनतानन्दनेस्थितम्।
पीतकौशेयवसनं नीलजीमूतविग्रहम्।।५९।।
प्रणम्यमानं योगीन्द्रैः सनकाद्यैस्सभक्तिकम्।
शंखचक्रधरं देवं वरदाभयदायिनम्।।६०।।
प्रसन्नवदनं देवं प्रणतार्तिहरं विभुम्।
दण्डवत्प्रणनामाथ सहसोत्थाय संस्तुतिम्।।६१।।
मूर्ध्न्यञ्जलिमुपाधाय चक्रेकैटभविद्विषः।

அப்போது ப்ரத்யும்நமஹாராஜன் அப்போதலர்ந்த தாமரை இதழை ஒத்த திருக்கண்களை உடையவராயும், கருடன்மீது எழுந்தருளியிருப்பவராயும், தங்கநூலாலே நெய்யப்பெற்றமையால், மஞ்சள் நிறமான திருப்பரியட்டத்தை தரித்திருப்பவராயும், நீருண்டமேகம் போலே கருமை பொருந்தி அனைத்து உலகத்தாரது தாபத்தையும் போக்கடிக்கக்கூடிய திருமேனியை உடையவராயும், ஸநகஸநந்தாதி யோகி ச்ரேஷ்டர்களாலே பக்தியோடு வணங்கப்படுகின்றவராயும், சங்கு சக்ரங்களை தரிப்பவராயும், கோடிஸூர்யன் உதித்தாற் போன்று ப்ரகாசிப்பவராயும், தீர்க்காயுஸ்ஸை உடைய நல்ல

பிள்ளை பேரன்களையும், பசு, ராஜ்யம், ஸ்வர்கம் முதலிய இம்மைப் பயன்களையும் அருள்பவராயும், உடல்நோய், உள்ளநோய், அகப்பகை புறப்பகை முதலியவற்ருல் அஞ்சுபவர்களுக்கு அபயப்ரதானம் பண்ணுபவராயும், உள்ளிருக்கின்ற ஆநந்தமெல்லாம் திருமுகமண்டலத்தில் தோற்றும்படி மலர்ந்த திருமுகமண்டலம் உடையவராயும், உலகைப்படைப்பது முதலிய விளையாட்டுக்களில் ஈடுபட்டவராயும், தம்மையே உபாயமாகவும், பலமாகவும், எண்ணி திருவடிகளில் பரந்யாஸம் பண்ணுகிறவர்களுடைய ஸம்ஸாரஸம்பந்தமான எல்லாத் துயரங்களையும் போக்கி காலதத்த்வமுள்ளளவும் கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தில் முடிசூட்டுபவராயும் உள்ள ஸர்வஸ்வாமியை தண்டம் ஸமர்ப்பித்து உடன் எழுந்திருந்து अञ्जलि: परमामुद्राक्षिप्रं देवप्रसादिनीஎன்கிறபடியே உடன் அநுக்ரஹம் பண்ணக்கூடியதான அஞ்ஜலியைத் தலைமேல் வைத்துக் கொண்டு கைடப ஸம்ஹாரம் செய்து உலகை ரக்ஷித்தருளின திருவெவ்வுள் கிடந்தானுடைய கல்யாணகுணங்களைக் கூறுகின்ற ரூபத்தில் ஸ்தோத்ரம் பண்ண ஆரம்பித்தார்.

नमस्ते पुण्डरीकाक्ष नमस्ते विश्वभावन।।६२।।

नमस्तेऽस्तु हृषीकेश महापुरुष पूर्वज।

'अथ यदिदमस्मिन् ब्रह्मपुरे दहरं पुण्डरीकं वेश्म दहरोस्मिन्नन्तर आकाश:'என்கிறபடியே தாமரைவடிவிலுள்ள பத்தர்களுடைய ஹ்ருதயத்தைத் தமக்கு சரீரம் போலே இருப்பிடமாகத் திருவுள்ளம்பற்றி अंगुष्ठ मात्र: पुरुषो मध्य आत्मनि तिष्ठति। ईशानो भूतभव्यस्य न ततो विजिगुप्सते।।என்றும் दहरकुहरे देवस्तिष्ठन् ईषद्दूर दीर्घिकानिपतित निजापत्यादित्साव र्णपितृ क्रमात् என்றும் சொல்லுகிறபடியே அளவிட்டுக்கூறமுடியாத வாத்ஸல்ய குணம் படைத்தவராய்,

ரக்ஷிப்பதற்கு எப்போது வாய்ப்புகிட்டும் என்றே எதிர்பார்த்துநிற்கக் கூடிய தேவரீருடையதன்றே என்னுடைய ஆத்மஸ்வரூபம். என்னுடையதன்று. तस्य यथा कप्यासं पुण्डरीकमेवमक्षिणी என்றும் ''கரியவாகிப்புடைபரந்து செவ்வரியோடி நீண்ட அப்பெரியவாயகண்கள்'' என்றெல்லாம் முழங்கப்படுவதாய் ஸ்ரீய:பதி என்பதற்கு அடையாளமான திருக்கண் அழகுடைய ஸ்வாமிந்! தேவரீர் பொருட்டு அடியேனது அஞ்ஜலி. नन्तव्यः परः शेषी शेषानन्तार ईरिताः। என்கிறபடியே பரமசேஷியாகையாலே எல்லா ஜந்துக்களாலும் வணங்கப்படுமவரான தேவரீரைவிட்டு எனது நமஸ்காரம் வேறு எங்கே புகும்? नमस्ते विश्वभावन! உலகைப்படைத்தல், காத்தல், அழித்தல் இவற்றிற்குக்காரணமானவரே! தேவரீர் பொருட்டே இந்த அஞ்ஜலி ஸத்ரார்த்தக பூதாதுவுக்கு ஸத்தாரூபோத்பத்தி வாசகத்வமும், ஸத்வாநுவ்ருத்தி ரூபஸ்திதிவாசகத்வமும் ஸித்தமிறே. அப்படியே பூப்ராப்தாவாத்மநேபதீத்யாதி ப்ரமாணத்தாலே ப்ராப்த்யர்த்தகத்வம் பூதாதுவுக்கு உண்டான படியால் காரணப்ராப்தி ரூபலயபரத்வமும் ஸித்தம்.

नमस्तेस्तु हृषीकेश महापुरुष पूर्वज। चञ्चलं हि मनः कृष्ण प्रमाथिबलवदृढम् । तस्याहं निग्रहंमन्ये वायोरिवसुदुष्करं என்று சொல்லுகிறபடியே ஸகலஜீவகோடிகளுக்கும் அடக்கமுடியாததான மநஸ் முதலிய இந்த்ரியங்களை தான் நினைத்தபடி நியமிப்பவராயும், वेदाहमेतं पुरुषं महान्तं என்கிறபடியே தனது அவயவத்தினின்றும் ஸ்ருஷ்டிக்கப்பட்ட ப்ராம்மணன் க்ஷத்ரியன் முதலிய அனைத்துலகையும் தோற்றுவித்தவராகை யாலே ''மஹாபுருஷ'' சப்தத்தினால் குறிப்பிடப்படுபவராயும், இப்படியே முன்காலங்களில் உலக நன்மைக்காக அவதரித்தவருமான தேவரீர் பொருட்டு அடியேனது அஞ்ஜலி ஆகக்கடவது.

त्वामेव विश्वधातारमाहुर्वेदास्सनातनम्।।६३।।
परंब्रह्मपरंधाम सनकाद्याश्च योगिनः।
मुक्त्यै त्वामेव हृदये ध्यायन्ति परमेश्वरम्।।६४।।
त्वं कारणं समस्तानां कार्यञ्चापि प्रगीयसे।
पृथिव्यापोग्निराकाशो वायुश्चैवात्र पञ्चमः।।६५।।
त्वमेव सर्वलोकेश श्रीनिधे विश्वभावन।
अष्टौ प्रकृतयो विष्णो त्वं सांख्यैः परिगीयसे।।६६।।
यदद्रेश्यं यदग्राह्यमचक्षुः श्रोत्रमुच्यते।
नित्यं सर्वगतञ्चैव सद्भिभुस्त्वमुदाहृतः।।६७।।

''इष्टापूर्वं बहुधाजातं जायमानं विश्वं बिभर्ति भुवनस्यनाभिः என்றும் द्यौस्सचन्द्रार्कनक्षत्रं खं दिशो भूर्महोदधिः वासुदेवस्य वीर्येण विधृतानि महात्मनः என்றும் विष्णुना विधृतेभूमी என்றும் சொல்லுகிறபடியே அனைத்துலகையும் தரிப்பவரான தேவரீரையே ''पूर्वमेवाहमिहा समिति तत्पुरुषस्य पुरुषत्वं'' ''सहस्रशीर्षापुरुषः सहस्राक्षः सहस्रपात् भूत्वोदतिष्ठत्'' ''नारायणपरंब्रह्म तत्वं नारायणः परः नारायणपरोज्योतिरात्मा नारायणःपरः'' अथ यदतः परोदिवोज्योतिर्दीप्यते विश्वतः पृष्ठेषु सर्वतः पृष्ठेषु अनुत्तमेषु उत्तमेषु इदं वावतद्यदिदं अस्मिन् अन्तः पुरुषेज्योतिः இவைமுதலான வேதங்கள் அநாதி ஸித்தபுருஷரா யும், பரப்ரஹ்மமாயும், பரஞ்ஜ்யோதிஸ்ஸாயும், முழங்குகின்றன. ஸநகாதிகளான யோகிகள், ''அவித்யா கர்மவாஸநாருசி ப்ரக்ருதி ஸம்பந்த கர்பஜன்மஜராமரணாதி ஸகல ஸாம்ஸாரிக துக்க நிவ்ருத்தி ரூபமான மோக்ஷம் பெறுகைக்காக तमीश्वराणां परमं

महेश्वरं तं देवतानां परमं च दैवतं என்கிறபடியே ப்ரஹ்மருத்ரஇந்த்ராதி ஜகதீச்வரர்களை தத்தம் கார்யங்களில் நழுவாதபடி ஆள்கின்றீர். அத்தகைய தேவரீரையே யமநியம ஆஸநப்ராணாயாமப்ரத்யாஹாராதி யோக ஸம்ஸ்க்ருதங்களான தங்கள் ஹ்ருதயங்களில் த்யாநம் பண்ணுகின்றார்கள். व्यक्तं विष्णुः तथा व्यक्तं पुरुषः काल एवच । यच्चापि सर्वभूतानां बीजं तदहमर्जुन । नतदस्ति विना यत्स्यात् मयाभूतं चराचरं இத்யாதிகளில் தேவரீரே ஸர்வகாரணதத்வமாகவும், ஸர்வகார்ய தத்வங்களாயும், தத்தச்சரீரியாகையாலே ஸ்ரீகீதாதி சாஸ்த்ரங்களில் விளக்கப்படுகின்றீர். ஸர்வலோகேச்வரராய் பெரியபிராட்டியாருக்கு மஹாநிதியாயிருக்கின்றவராய், ஸர்வஜகத்போஷகரான தேவரீரே நிலம், நீர், தீ, காற்று ஆகாயம் இவற்றின் பரிணாமங்களான ஸர்வவஸ்துக்களுமாயிருக்கின்றீர். ஸர்வதத்வஅந்தர்யாமியான தேவரீரே ப்ரக்ருதி மஹதஹங்கார சப்ததந்மாத்ர, ஸ்பர்சதந்மாத்ர, ரூபதந்மாத்ர, ரஸதந்மாத்ர கந்ததந்மாத்ரங்களாகிற எட்டுகாரணதத்த்வங்களாயிருக்கின்றீர் என்று ஸாங்க்யர்களான கபிலாஸுரி பஞ்சசிகி முதலானவர்களாலே ஸ்தோத்ரம் பண்ணப்படுகின்றீர். இவ்வர்த்தத்தை 'भूमिरापोऽनलो वायुः खं मनो बुद्धिरेवच' अहंकार इतीयं मे भिन्ना प्रकृतिरष्टधा । अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धिमे पराम् जीवभूतां महाबाहो ययेदं धार्यते जगत्'' இவைமுதலான கீதா வாக்யங்களாலே தேவரீரே தெளிவாகச் சொல்லியுள்ளீரன்றோ. எந்த வஸ்து கண்ணாலே காணமுடியாததோ, எந்த வஸ்து காது முதலியஎல்லா இந்த்ரியங்களாலும் அறியமுடியாததோ, எந்த வஸ்து சக்ஷுச்ரோத்ர நிரபேக்ஷ நித்ய விகஸ்வரஜ்ஞாநமோ, எந்த வஸ்து உற்பத்தி நாசம் இல்லாததோ, எந்த வஸ்து ஸர்வ வஸ்துக்களாலும் ஆச்ரயிக்கப்படுகின்றதோ, எந்த வஸ்து எங்கும் நிறைந்திருப்பதோ, எந்த வஸ்து முக்காலத்திலும் ஏகரூபஸத்தா சாலியோ அப்படிப்பட்ட வஸ்து எந்த வித்யையினாலே

அடையப்படுகின்றதோ அப்படிப்பட்ட பரவித்யையைச் சொல்லுகிறன்றேன் என்று ''अथ परा यया तदक्षरं अधिगम्यते यत्तद्रेश्यं अग्राह्यं अगोत्रं अवर्णमचक्षुः श्रोत्रं तदपाणिपादं नित्यं विभुं सर्वगतं सुसूक्ष्मं तदव्ययं यद्भूतयोनिं परिपश्यन्ति धीराः'' இவை முதலான உபநிஷத்துக்களாலே உபந்யஸிக்கப்படுமவர் தேவரீரே.

इति संस्तुत्य देवेशं विष्णुं हृद्गतमीश्वरं
प्रदक्षिणीकृत्यनृपः प्रणनाम पुनः पुनः।।६८।।

ப்ரத்யும்நமஹாராஜன், ஸர்வலோகேச்வரனுைய் தன்னுடைய ஹ்ருதயத்தில் அந்தர்யாமியாயுள்ளவராய், அப்படியே ஜகதந்தர்யாமியானவராய் ப்ரம்மாதி ஸமஸ்த தேவதைகளுக்கும் அநந்தன் கருடன் முதலான நித்யஸூரிகளுக்கும் நிர்வாஹ கருமானவரை இவ்வாறு ஸ்தோத்ரம் பண்ணி ''சுற்றிநாம்வலம் செய்யநம்துயர்கெடும் கடிதே'' என்கிறபடியே ப்ரதக்ஷிணம் பண்ணி பக்திபரவசத்தால் பலமுறை தண்டம் ஸமர்ப்பித்தான்.

उवाच भगवान् विष्णुः तं प्रसन्नेक्षणस्तदा।
स्वरेण महता विश्वं पूरयन्नुदधिर्यथा।।६९।।

அப்போது ஜ்ஞானம் சக்தி முதலான கல்யாணகுணங்கள் நிறைந்தவரான பரமபுருஷன், உள்ளே இருக்கின்ற க்ருபை, வாத்ஸல்யம் இவைகள் அடங்க கண்ணிலே தெரியும்படியாய் குளிர்ந்த கடாக்ஷமுடையவராய் பெருங்கடலைப்போலே கம்பீரமான தமது திருமிடற்ரோசை தன்னாலே லோகத்தை நிரப்பிக்கொண்டு அந்த ப்ரத்யும்ந மஹாராஜனைப்பார்த்து வார்த்தை அருளிச்செய்தார்.

वरं वरयभद्रं ते प्रद्युम्न तपसा तव।
सुदुश्चरेण महता प्रीतोस्म्यमित विक्रम।

மஹாபராக்ரமசாரலியான ப்ரத்யும்ந! உனக்கு மங்களமுண்டாகுக. ஒருவராலும் செய்யமுடியாத உனது

பெருந்தவத்தால் நான் பெருமகிழ்ச்சி அடைந்தேன். உனக்கிஷ்டமான வரத்தைக்கேட்பாயாக.

இவ்வாறு பெருமாளுலே நியமிக்கப்பட்ட ப்ரத்யும்ந மஹாராஜன் ஸ்வாமி ஸன்னிதியில் ப்ராத்திக்கின்ருன்.

ममवंशकरान् पुत्रान् प्रदेहि करुणांबुधे।
हृत्तापनाशन स्नानात् भगवन् भक्तवत्सल।।७१।।
अद्यप्रभृतितीर्थं वै मम हृत्तापनाशनात्।
इदं देव ह्रदं भूयान्नाम्ना हृत्तापनाशनम्।।७२।।
आविर्भूतो यतोद्यत्वं पौषे दर्शेममाधुना।
अतो गंगादितीर्थेभ्यो भवतादधिकं त्विदम्।।७३।।
इमान्वरान् स्वभक्ताय मह्यं देहि जगत्प्रभो।
अदेयं नहिते किञ्चित् भक्तानामनुकम्पया।।७४।।

எண்ணமுடியாத சக்தியை உடையவராயும், பக்தர்களது தோஷங்களில் அவர்களிடமுள்ள ப்ரேமாதிசயத்தால் ''அவிஜ்ஞாதா'' என்னும்படி கண்டுகொள்ளாதவராயும், கருணைப்பெருங்கடலாயுமுள்ள ஸ்வாமீ; தீர்க்காயுஷ்மான்களாயும், அழகிய ரூபமுள்ளவர்களாயும், நற்குணமுள்ளவர்களாயும், பலராயும், நல்லமுறையில் ஜீவிப்பவர்களாயும், புத்ரபௌத்ர ஸந்தானசாலிகளாயுமுள்ள புத்ரர்களை அடியேனுக்குத் தந்தருளவேணும். இவ்வரம் கிட்டியதும் இந்த ஹ்ருத்தாபநாசன ஸ்நானத்திலேயாகக்கடவது. எனது ஹ்ருதயத்திலுள்ள தாபத்தைப் போக்கித்தந்தபடியால் தேவர்களாலே தோற்றுவிக் கப்பட்ட இந்த புண்யதீர்த்தம் இது முதலாக ''ஹ்ருத்தாபநாசநம்'' என்ற பெயருடையதாகக் கடவது. எந்த காரணத்திலுலே தை மாதத்து அமாவாசையான இன்று தேவரீர் அடியேனுக்கு ஸேவைஸாதித்தீரோ, நினைத்த வரங்களைக் கொடுத்தீரோ அந்த காரணத்திலுலே இந்த தை மாத அமாவாசையில் இந்த தீர்த்தம் கங்கை முதலிய அனைத்து புண்யதீர்த்தங்களைக் காட்டிலும்,

சிறந்ததாகக்கடவது. அனைத்து உலகுக்கும் எல்லா பயன்களையும் க்ருபைசெய்கின்ற தேவரீர் உமது பக்தனான அடியேனுக்கு இந்த வரங்களையெல்லாம் தந்தருளவேணும். நிர்ஹேதுகமான க்ருபையினாலே, ''கொள்ளக் குறைவிலன் வேண்டிற்றை யெல்லாம்தரும் கோதில்'' என்கிறபடியே ஸகலஅதிகாரிகளுக் கும் எல்லா புருஷார்த்தங்களையும் வாரிவழங்கும் வள்ளலான தேவரீருக்கு, பக்தர்களுக்கு கொடுக்கப்படாதபலம் ஒன்றும் உள்ளதோ?

(''ஆவிர்பூதோ யதோத்யத்வம்'' என்கிற அர்த்தத்தில் ''அதுநா'' என்றபதம் பாவி.....ஸமஸ்தபௌஷாமாவாஸ்யாபர மாகையால் அத்ய சப்தத்தோடு புநருக்தியில்லை.)

श्री भगवानुवाच – இப்படிப்ப்ரார்த்திக்கின்ற ப்ரத்யும்ந மஹாராஜனுக்கு பெருமாள் உத்தரம் அருளிச்செய்கிறார்.

यान्वरान् नृपशार्दूल याचसे वै मदन्तिकात्।
दुर्लभान् तान् अवेहि त्वं मत्प्रसादात् त्वमाप्नुहि।।७५।।

எல்லாராஜாக்களிலும் சிறந்தவனான ப்ரத்யும்ந மஹாராஜனே! என்னிடம் என்னென்ன வரங்களைக் கேட்டுக் கொண்டாயோ அந்த வரங்கள் ஸுலபங்களல்ல. ஆனாலும் ஸர்வசக்தியுள்ள நம்முடைய அநுக்ரஹத்தினாலே நீர் அந்த வரங்களை அடையக்கடவாய்.

ब्रह्मा
एव मुक्तो भगवता प्रद्युम्नो मुनिसत्तम।
यथागतं जगामाशु पुत्रान् लेभे सुदुर्लभान्।।७६।।

நாரதரே! இப்படி புருஷோத்தமனாலே வரம் பெற்ற ப்ரத்யும்நன் பலஆண்டுகளாக மனைவி நண்பர், மந்த்ரிமார், வீடு, நாடு இவற்றைப் பிரிந்தமையாலுண்டான ஆசையில் விரைந்து இருப்பிடம் சேர்ந்தான். அவ்வாறே பகவதநுக்ரஹப்படி அரிய பல பிள்ளைகளைப் பெற்றான்.

अतो गंगादि तीर्थेभ्यो ह्याधिक्यं भगवत्कृतम्
अस्य तीर्थस्य वैपुत्र नात्र कार्या विचारणा ।।७७।।

மைந்தா நாரதா! ஆகையால் இந்த ஹ்ருத்தாபநாசந தீர்த்தத்திற்கு தை மாஸத்தில் அமாவாஸைநாளில் கங்கைமுதலிய எல்லாதீர்த்தங்களைக் காட்டிலும் பெருமை ஸர்வசக்தனான எம்பெருமானாலே உண்டாயிற்று. ''तीर्थी कुर्वन्ति तीर्थानि स्वान्तस्थेन गदाभृता'' என்கிறபடியே கங்கை முதலிய தீர்த்தங்கள் பாவநங்களானமை எந்த பகவத் ஸம்பந்தத்தினாலேயோ அந்த ஸர்வசக்தனும் ஸர்வநியந்தாவு மான பரமபுருஷனே இந்த தீர்த்தத்திற்கு தை அமாவாசை நாளில் எல்லா தீர்த்தங்களைக் காட்டிலும் சிறப்பு சொல்லியபடியால் இவ்விஷயத்தில் விசாரணைசெய்வானென்?

देवता तीर्थ तपसां भारताद्यस्यनिश्चय: ननास्तिक्यं भवेत्तस्य महामीमांसकैरपि என்றும், देवगुह्येषु चान्येषु हेतुर्देवि निरर्थक: वधिरान्धवदेवात्र वर्तितव्यं हितैषिणा என்றும்மஹர்ஷிகள் தீர்மானித்தபடியே நம்புவதுதான் நம்போன்றவர்களுக்கு நல்லதாகும்.

शालिहोत्र:

इति धातुर्वच: श्रुत्वा नारदश्छिन्नसंशय:
च चार च यथाकामं भगवन्न्यस्त मानस: ।।७८।।

இப்படி அனைத்துலகையும் படைப்பவரும் தமக்குப் பிதாவுமான ப்ரம்மாவின் வார்த்தையைக்கேட்ட நாரதர் ஸந்தேஹம் தீரப்பெற்றவராய் பரமபுருஷனுடைய சக்தியைக் குறித்து உருகிய உள்ளத்தோடு பகவானது கல்யாண குணங்களில் ஈடுபட்ட மனத்தினராய் इमान् लोकान् कामान्नीकामरूप्यनुसंचरन् என்று முக்தாத்மா பகவானது

விபூதிகளைக் கண்டு அநுபவிக்குமாப்போலே தமது விருப்பத்துக்கேற்றபடி பகவானாலே உண்டாக்கப்பெற்ற உலகங்களில் गायंश्चराम्यनुगृहाण यथा स्मृतिः स्यात् என்று தாம் பகவத்ஸன்னிதியில் ப்ரார்த்தித்தபடியே பகவத்குணங்களைப் பாடிக்கொண்டு பேராநந்தமுற்றவராய் ஸஞ்சரித்தார்.

एतत्ते सर्वमाख्यातं यन्मां त्वं परिपृच्छसि।

हृत्तापनशनस्यासीत् गंगाधिक्यं यथापुरा।।७९।।

ஹே தேவபாகரே! ஹ்ருத்தாபநாசனதீர்த்தத்துக்கு எல்லா தீர்த்தங்களிலும் சிறந்ததான கங்கையைக்காட்டிலும் எதனால் சிறப்புவந்ததோ அந்தவரலாற்றை உமக்கு உண்மையாக உபந்யஸித்தேன். இதுபற்றியல்லவா நீர் நம்மைக்குறித்து வினவினீர். இவ்வர்த்தத்தைப் பரம ஆஸ்திகரான நீர் நம்பக்கடவது.

यइदं श्रृणुयान्नित्यं तीर्थमाहत्म्यमुत्तमम्।

सयाति परमं स्थानं लब्ध्वा पुत्राननुत्तमान् ।।८०।।

இப்படி எல்லாக்காலத்திலும் உத்தமமான ஹ்ருத்தாப நாசனதீர்த்த மாஹாத்ம்யத்தை விச்வாஸத்தோடு பெரியோர் களிடத்தில் முறையோடு எவன் கேட்கிருனே அவன் ஸர்வோத் தமமான புத்ரர்களையடைந்து கடைசிக்காலத் தில் सोध्वनः पारमाप्नोति तद्विष्णोः परमं पदं என்கிறபடியே எல்லாவற்றிலும் மிகச்சிறந்ததான ஸ்ரீவைகுண்டம் என்னும் பெயர்கொண்ட த்ரிபாத்விபூதியைப் பெற்று வாழ்வான்.

**इति षट्शततमोऽध्यायः**

## श्रीलक्ष्मीनृसिंहपरब्रह्मणे नमः



## श्रीवीक्षारण्यक्षेत्रमाहात्म्ये सप्तमोऽध्यायः

देवभागः

श्रुतं तीर्थस्य माहात्म्यं विस्तरेणमयाधुना।

यथा भगवतस्साक्षात् जगत्सृष्टिं वदस्वमे।।१।।

ஹே சாலிஹோத்ரமஹாமுனிவரே! ஹ்ருத்தாபநாசந வைபவம் தேவரீரது அநுக்ரஹத்தால் விஸ்தாரமாக என்னால் கேட்கப்பட்டது. ஞானம், சக்தி முதலிய குணங்கள் நிறைந்த ஸ்வாமியினிடத்தினின்றும் ஜகத்ஸ்ருஷ்டியை முறைப்படி அடியேனுக்குச் சொல்லிஅருளவேணும்.

श्रीशालिहोत्रः

जगत्सृष्टिं प्रवक्ष्यामि याथातथ्येन मे श्रुणु

ஸ்ரீசாலிஹோத்ரபகவான் தேவபாகருடைய கேள்விக்கு பதில் அருளிச்செய்கிறார். தேவபாகரே! உலகப்படைப்பை உண்மையாக என்னிடத்தில் கேளும்

आसीदिदं तमो भूतं जगत्प्रलयलक्षणे।

काले महति विप्रेन्द्र नास्ति संज्ञासमन्वितम्।।

ப்ராம்மணச்ரேட்ரான தேவபாகரே! மஹத்தான ப்ரளய காலத்தில் இப்போது பூமி,மலை, கடல் முதலிய வடிவத்தில் பலவகை விசித்ரமான அமைப்பாகக் காணப்படுகின்ற ஜகத் மண்குடம் அழிந்தபோது வெறும் மண்ணாகக் காணப்படுவது போல் மஹதாதியான கார்யதத்த்வங்களனைத்திற்கும் காரணமாய் 'தமஸ்'' என்று சொல்லப்படுகின்ற மூலப்ரக்ருதியில்லயித்து, இப்போதிருக்கின்ற அவஸ்தை

(நிலைமை)மாறியிருப்பதனாலே இல்லை என்ற சொல்லாலே சொல்லத்தக்கதாய் ஸூக்ஷ்மதசையை அடைந்திருந்தது. இந்த ப்ரளயம் ப்ரம்மாவினுடைய இரண்டாவது பரார்த்தத்தின் முடிவில் அண்டம் முதலிய ஸமஸ்த கார்யதத்வலயரூபமான மஹாப்ரளயம். (இனி ஸ்ருஷ்டியை விஸ்தாரமாகச் சொல்லக் கருதி முந்துற இரண்டு ச்லோகத்தினாலே சுருக்கமாக ஸ்ருஷ்டியைச் சொல்லுகிறார்.)

ततस्सिसृक्षुर्भगवान् करुणाविष्टमानसः।।३।।

आदौ ससर्ज सलिलं विष्णुः पंकजलोचनः।

तत्र वीर्यं विनिक्षिप्तं तदण्डं समजायत।।४।।

ततश्चतुर्मुखो जज्ञे तस्मादासीदिदं जगत्

तदनन्तरं अचिदविशिष्टान्प्रलयेजन्तूनवलोक्य जात निर्वेदाः करणकलेबरयोगं वितरसिवृषशैलनाथकरुणे त्वम् என்கிறபடியே போகமோக்ஷப்ரவ்ருத்தியற்று அசித் வஸ்துவான ப்ரக்ருதியில் மெழுகிலுள்ள தங்கத்துகள்கள் போலே இருந்த ஜீவகோடிகளை கடாக்ஷித்தருளி, கரைபுரண்ட கருணை கொண்ட திருவுள்ளமுடையவராய் இவர்களுக்கு போகமோக்ஷப்ரவ்ருத்தி ஸாதநங்களான கைகால் முதலிய அவயவங்களோடு கூடிய உடம்பை அளிக்க முற்பட்டவராய் ஜகத்ஸ்ருஷ்டியில் கண்வைத்தவராய் உலகைப்படைப்பதற்கு உபயோகப்படக் கூடிய ஞானம் சக்தி முதலியவற்றால் நிறைந்தவராய் மலர்ந்த தாமரையை ஒத்த கண்களையுடையவரான ஸ்ரீவிஷ்ணு “मम योनिर्महद्ब्रह्म तस्मिन्गर्भं दधाम्यहम्। संभवस्सर्व भूतानां ततो भवतिभारत” என்கிறபடியே மஹதாதி ஸகலகார்யதத்வகாரண த்ரவ்யமான ப்ரக்ருதியில் ஸ்வாதிஷ்டித ஸகலஜீவராசியாகிற வீர்யத்தை ப்ரவேசிப்பித்து ஸலிலோபலக்ஷித (தண்ணீர்) ஸகல தத்வங்களையும் படைத்தார். பின்னர் பஞ்சீகரணாதிகளாலே அண்டம் முதலிய பௌதிக ஸ்ருஷ்டி ஸமர்த்தங்களான அந்த

அத்தத்வங்களாலே அண்டத்தைப்படைத்து அண்டாதிபதி யான நான்முகனைத் தனது நாபீகமலத்தினின்றும் படைத்து அவருக்கு ஸகலகார்யங்களுக்கும் உபயோகப்படக் கூடிய வேதத்தை உபதேசித்து வ்யஷ்டிஸ்ருஷ்டியில் நியமித்தருளினார்.

அப்படி பகவானாலே நியமிக்கப்பட்ட நான்முகனாலே இந்த உலகம் முன்போல் படைக்கப்பட்டது. இப்படி ஸ்ருஷ்டியைச் சுருக்கமாகச் சொன்னோம். இவ்விடத்தில் முதலில் தண்ணீரைப்படைத்தார் என்றது ஆகாசாத் வாயு: இத்யாதிக்ரமவிசிஷ்ட ஸகலதத்வஸ்ருஷ்டியுபலக்ஷணம். தத்வமுக்தாகலாபத்தில் ஸ்ரீமந்நிகமாந்ததேசிகன் அருளியதாவது :—

''आदावप्सृष्टि वादः श्रुतिमितमितरन्त प्रतिक्षेप्तु मीष्टे''

इति. अत्र सर्वार्थसिद्धिः ''ननु आपोवा इदमग्रे'' अपएवससर्जादौ'' इत्यादि श्रुति स्मृति दर्शनात् अग्न्यादेः सर्वस्याद्भ्यः सृष्टिस्स्यादित्याह आदाविति. महदादेरिव अग्नेरप्यद्भ्यः पूर्वभावित्वं बहुश्रुतिस्मृतिसिद्धम्। अतस्तदविरुद्धं दुर्निवारं इत्यर्थः। श्रुतिषुचन्यून निर्देशेषु अनुक्तमधिकं अन्यतो ग्राह्यं श्रुतहानायोगात्। अव्यवस्थितन्यूनाधिक सृष्टिकल्पनागौरवाच्चेति।

आदि सर्गं प्रवक्ष्यामि विष्णोरमिततेजसः।।५।।

தேவபாகரே! கீழே சுருக்கமாகச் சொன்ன அளவிட முடியாத பெருமைகளை உடையவரான ஸ்ரீவிஷ்ணுவினுடைய ஆதி ஜகத்ஸ்ருஷ்டியை விஸ்தாரமாகச் சொல்லப்போகிறேன். கவனமாகக் கேளும்.

क्षोभयामास संप्राप्ते प्रकृतिं विष्णुरव्ययः।

सर्गकाले जगद्योनिरयोनिर्वैनिरञ्जनः।।६।।

क्लेशकर्मविपाकाशयैरपरामृष्टः पुरुषविशेष ईश्वरः என்கிறபடியே கர்மஸம்பந்தரஹிதராய், அதனாலேயே தம்முடைய உத்பத்திக்கு ஒரு காரணமில்லாதவராய், நிகில ஜகத்காரணபூதராய்

ஸ்வரூபஸ்வபாவவிகாரமற்றவராய், ஸர்வதத்வ அந்தர்யாமியா யுமுள்ள ஸ்ரீவிஷ்ணு ஸ்ருஷ்டிகாலம் ப்ராப்தமானவளவில் ஸமபரிணாமசாலியான ப்ரக்ருதியை விஷமபரிணாமோந்முக மாகும்படி தமது ஸங்கல்பத்திலே ப்ரேரித்தார்.

प्रकृतेस्तु महानासीत् क्षुब्धाया अथविष्णुना।
अहंकारस्ततोजज्ञे त्रिविधोऽयमुदाहृतः।।७।।
वैकारिकस्तैजसश्च तामसश्चेति भेदतः।

அதற்குப்பின் ஸர்வதத்வாந்தர்யாமியான விஷ்ணு வினாலே ஏவப்பட்ட மூலப்ரக்ருதியில் நின்றும் மஹத்தத்வம் உண்டாயிற்று. அம்மஹத் தத்வத்தினின்றும் அஹங்கார தத்வம் உண்டாயிற்று. இவ்வஹங்கார தத்வம் வைகாரிகம் என்றும் தைஜஸம் என்றும் தாமஸம் என்றும் விபாஜக தர்மங்களினாலே மூன்று விதமாக மஹர்ஷிகளால் சொல்லப் பட்டது.

वैकारिकात्सात्विकाद्वै दशदेवाः प्रजज्ञिरे।८।।
श्रोत्रं स्पर्शन नेत्रंच रसनं प्राणमेवच।
वाक्पाणीच तथा पादौ पायूपस्थौच तान्विदुः।।९।।
एकादशेन्द्रियश्चात्र मनस्तु परिकीर्तितम्।

ஸாத்விகமான வைகாரிகநாமக அஹங்காரத்தில் நின்றும் விஷயப்ரகாசகங்களாயும் விஷயஸ்தல பர்யந்தம் கத்வரங்களுமாகையாலே தேவசப்தங்களான ஜ்ஞானகர்மேந் திரியங்கள் பத்தும் உண்டாயின. அவையாவன – ச்ரோத்ரேந்த்ரியம் (காது) த்வகிந்த்ரியம்(தோல்), சக்ஷுரிந்த்ரியம் (கண்) ரஸநேந்த்ரியம் (நாக்கு) க்ராணேந்த்ரியம் (மூக்கு) வாகிந்த்ரியம், பாணீந்த்ரியம் (கை) பாதேந்த்ரியம் (கால்) பாய்வீந்த்ரியம், மர்மஸ்தானம் என்றிவை பத்துமாகும். இந்த இந்த்ரியவர்க்கத் தில் எல்லா இந்த்ரியங்களுக்கும் ஸஹாயமான மந இந்த்ரியத்தை பதினோராவது இந்த்ரியமாக தத்வவித்துக்கள் சொன்னார்கள்.

इमांस्तु विषयांस्तेषां आहुः पौराणिकाजनाः।।१०।।

शब्दं स्पर्शनरूपेच रसगन्धौ तथैवच।

उक्तिं शिल्पं गतिञ्चापि विसर्गंच रतिंतथा।।११।।

आहुः साहाय्यकं तेषां मनसः कर्मकेवलं।

इतिवैकारिकीप्रोक्ता सामान्येन मयाधुना।।१२।।

த்வநிவர்ணரூபமான சப்தத்தையும், சீதோஷ்ணுதி ஸ்பர்சத்தையும் வெளுப்புகருப்பு முதலான ரூபத்தையும், நறுமணம் கெட்டமணம் ஆகிய கந்தத்தையும், ச்ரோத்ர(காது) தோல், கண், நாக்கு, மூக்கு ஆகிய ஞாநேந்த்ரியங்கள் ஐந்துக்கும் விஷயங்களாகவும், பூ மாலை தொடுத்தல் முதலிய சில்பம், நடப்பது உடம்பிலுள்ள மலமூத்ராதிகளை வெளிவருகை, ரமிக்கை என்றிவைகளை வாக்பாணிபாதோபஸ்த ரூபங்களான கர்மேந்த்ரியங்கள் ஐந்துக்கும் விஷயங்களாகவும், புராண ப்ரவர்த்தகர்களான மஹர்ஷிகள் சொன்னுர்கள். இப்படி எடுத்த ஜ்ஞாநகர்மேந்த்ரியங்கள் பத்துக்கும் ஸஹாயமாயிருக்கையே மந இந்த்ரியத்தின் கருமமாக அவர்களே சொன்னுர்கள். இப்படி ஸாத்விகமான வைகாரிகநாம அஹங்காரத்தினுடைய ஸ்ருஷ்டி உமக்கு என்னுலே சொல்லப்பட்டது. இதுவும் பொதுவாகச் சொன்னேமேதவிர இவற்றின் விரிவுகள் முழுதும் சொன்னபடியன்று.

अहंकारात्तामसाद्वै पञ्चभूतानि जज्ञिरे।

पृथिव्यापस्तथातेजः वायुराकाश एवच।।१३।।

गन्धोरसश्च रूपञ्च स्पर्शश्शब्दश्च तद्गुणाः।

தாமஸாஹங்காரத்தில் நின்றும் நிலம், நீர், தீ, காற்று, வானம் என்று பஞ்சபூதங்களும் உண்டாயிற்று. அந்த பஞ்ச பூதங்களுக்கும் க்ரமமாக கந்தம், ரஸம், ரூபம், ஸ்பர்சம், சப்தம் இவை அவற்றுக்கு அஸாதாரணங்களான குணங்கள்.

अहंकारस्तैजसस्तु साहाय्यं कुरुते द्वयोः।।१४।।

वैकारिकस्य विप्रेन्द्र भूतादेस्तामसस्यच।
एवं चतुर्विधा प्रोक्ता सृष्टिर्वैप्रकृतेः पुनः।।१५।।

இரண்டாவதான தைஜஸநாமகமான ராஜஸாஹங்காரம் வைகாரிக நாமகமான ஸாத்விகாஹங்காரத்துக்கும், பூதாதிநாமகமான தாமஸாஹங்காரத்துக்கும் இவ்விரண்டு அஹங்காரங்களுக்கும் ஸஹாயம் பண்ணுகிறது. தேவபாகரே! உமக்கு நம்மாலே இந்த்ரியஸ்ருஷ்டி, விஷயஸ்ருஷ்டி, பூதஸ்ருஷ்டி, தத்குணஸ்ருஷ்டி என்றிப்படி நான்குவிதஸ்ருஷ்டிகளும் சொல்லப்பட்டன.

पञ्चविंशंच पुरुषषड्विंशंपुरुषोत्तमम्।
आहुः तत्वविदोविप्राः कालतत्वं तथान्यकम्।।१६।।
एवं प्रधानसृष्टिर्वै मया प्रोक्ताद्विजोत्तम।

ப்ராம்மணச்ரேஷ்டரான தேவபாகரே! காரணமாயே இருக்கிற மூலப்ரக்ருதி ஒன்று, அதற்குமேல் மஹத்தத்த்வம், அஹங்காரதத்த்வம், தந்மாத்ர பஞ்சகம், ஆகஎட்டு. கர்மேந்த்ரியங்கள் ஐந்து, ஞானேந்த்ரியங் கள் ஐந்து, மனம் ஒன்று. ப்ருதிவீ முதலான பூததத்த்வங்கள் ஐந்து. ஆக பதினாறு. 8+16 = 24. ஆக ப்ராக்ருத தத்த்வங்கள் இருபத்துநாலுக்கு மேல் புருஷன் என்று சொல்லப்படுகின்ற ஜீவனை இருபத்தைந்தாவது தத்த்வமாகவும், ஸர்வதத்வாந்தர்யா மியான புருஷோத்தமனை இருபத்தாறுவது தத்த்வமாகவும், இவ்விருபத்தாறுவது தத்த்வங்களைக்காட்டிலும் காலதத்த்வம் வேறுபட்டதாகவும் தத்த்வத்தை அறிந்தவர்களான ப்ராம்மணர்கள் சொல்லுகிறார்கள். இப்படி ப்ரக்ருதியினுடைய ஸ்ருஷ்டியும் உமக்கு நம்மாலே சொல்லப்பட்டது.

महेश्वर विधातारौ जगत्सर्वं चराचरम्।।१७।।
यस्य सृष्टिं प्रशंसन्ति परस्मै ब्रह्मणे नमः।

''ருத்ரம் ஸமாச்ரிதாதேவா:'' என்கிறபடியே இந்த்ராதி

தேவர்களுக்கும் நிர்வாஹகனை ருத்ரனும், ''ருத்ரோ ப்ரஹ்மாணம் ஆச்ரித:'' என்கிறபடி சராசராத்மகமான ஜகத்தும் எந்த புருஷோத்தமனுடைய ஸ்ருஷ்டியைப் புகழ்கின்ரூர்களோ அப்படி எல்லாவற்றிலும் மேம்பட்டதாய், ஸ்வரூபரூபகுண விதிகளாலே அளவிட்டுக் கூறமுடியாததுமான வஸ்துவைக் குறித்து வணங்குகிறேன். ரஹஸ்யமான அர்த்தத்தை உபதேசித்துமுடிப்பதால் பரதேவதைக்கு நமஸ்காரம் செய்யப் பட்டது

भक्तानुकम्पी भगवान् क्रीडार्थं मधुसूदनः ।।१८।।
जगत्सृजत्यवतीच संहरत्येषयत्स्वयम्।
एवं क्रीडापरो देवो ह्यप्रमेयोविनिर्जितः ।।१९।।
भूतैः प्रमोदते विष्णुः मायया मोहयन् जगत्।

ये भजन्ति तु मां भक्त्या मयि ते तेषु चाप्यहम्
मच्चित्तामद्गतप्राणाः बोधयन्तः परस्परम्
कथयन्तश्च मां नित्यं तुष्यन्तिच रमन्तिच ।
तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम्
ददमि बुद्धियोगं तं येनमामुपयान्ति ते
तेषा मेवानुकम्पार्थं अहमज्ञानजं तमः
नाशयाम्यात्मभावस्थोज्ञानदीपेनभास्वता ।

என்றும்சொல்லுகிறபடியே பக்தர்களிடத்தில் கரைபுரண்ட கருணேயுடையவஞய் பரிபூர்ண ஜ்ஞானசக்தியாதிகஞய் ஆச்ரித விரோதிநிரஸநசீலஞன இந்த பரமபுருஷன் ஜகத்தைப் படைப்பதும் ரக்ஷிப்பதும், அழிப்பதும் தமது விளேயாட்டுக் காகவே தவிர வேறில்லே. அவாப்தஸமஸ்தகாமஞன பரமாத்மா வுக்கு ஜகத்ஸ்ருஷ்டி முதலியவற்ருல் என்ன பயன் அடையத்

தக்கது. இப்படி ஸார்வபௌமன் பந்து விளையாட்டு முதலியவற்றுல் ரஸிக்குமாப்போலே க்ரீடாபரனுய் தனது ஆத்மாநந்தாநுபவபரனுய் அளவிடமுடியாத ஸ்வரூப ஸ்வபாவனுய் ஸ்வதந்த்ரனுன ஸ்ரீவிஷ்ணு त्रिगुण मयैर्भावैरेभिस्सर्वमिदं जगत् । मोहितं नाभिजानाति என்றும் दैवीह्येषा गुणमयी मम माया दुरत्यया என்றும் சொல்லுகிறபடியே ப்ரக்ருதியாகிற மோஹநபிஞ்சிகை (மயக்கக்கூடியமயில்பீலி) யாலே ஜகத்தை மயங்கச்செய்து கொண்டு பந்து முதலிய விளையாட்டு சாதனங்களாலே சிறுவன் போலே இந்த பூதங்களாலே லீலாரஸம் அநுபவிக்கிருன்.

ये भजन्ति तु तं भक्त्या भगवन्तं मधुद्विषम्॥२०॥

तयामुक्ताः प्राप्नुवन्ति तद्विष्णोः परमं पदम्।

மதுகைடபஸம்ஹாரம் செய்து உலகத்தை ரக்ஷிப்பவராயும், உபயவிபூதிநிர்வாஹகராயுமுள்ள புருஷோத்தமனை தைலதாரையைப்போன்று இடையருது எண்ணுதலாகிற பக்தியினுலே எவர் உபாஸிக்கின்ருர்களோ அவர்கள் அந்த பக்தியினுலேயே அவித்யா, கர்ம வாஸநா ருசி ப்ரக்ருதி ஸம்பந்தரூப ஸம்ஸாரத்தினின்றும் விடுபட்டவர்களாய் ஸ்ரீவிஷ்ணுவினுடைய உத்தமபதமான ஸ்ரீவைகுண்டத்தைச் சேர்ந்திடுவர்.

चिदचित्प्रभुतत्वज्ञा योगशास्त्र विशारदाः।२१॥

विष्णुं प्रपन्ना भक्ताश्च प्राप्तं तै र्जन्मनः फलम्।

तथा भगवता गीतं विष्णुनाप्रभविष्णुना॥२२॥

दैवीह्येषा गुणमयी मम माया दुरत्यया।

मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति त ॥२३॥

எவர்கள் ''தேறஇயம்பினர் சித்தும் அசித்தும் இறையும் என வேறுபடும் வியன்தத்துவம் மூன்றும் வினைஉடம்பில்

கூறுபடும் கொடுமோகமும், தான் இறையாம் குறிப்பும் மாறனிணைந்தருளால் மறைநூல்தந்தவாதியரே'' என்கிறபடியே தேஹமே ஆத்மாஎன்னும் மயக்கம் நீங்குவதற்காக ஆத்ம ஸ்வரூபத்தை அசித் விலக்ஷணமாகவும், 'ஈச்வரோஹம்' என்கிற ஸ்வதந்த்ரஆத்மப்ரவ்ருத்திநிவ்ருத்திக்காக ஷட்விம்ச (26) விலக்ஷணமாகவும்,ஷட்விம்ச பூர்ணநுபவபூர்வக கைங்கர்யமே ஆத்மாவுக்கு ஸ்வரூபாநுரூபமான பலமென்றறிந்து குறிப்பிட்ட பலஸாதநங்களான பக்தி ப்ரபத்திகளை ஸத்ஸம்ப்ரதாயத்தோடு பக்தி ப்ரபத்திவிதாயக சாஸ்த்ரங்களாலே அறிந்து தங்கள் தங்கள் அதிகாரஅநுரூபமாக ச்ரிய:பதியை பக்தியினலேயாவது, ப்ரபத்தியினலேயாவது உகப்புறச்செய்கின்ருர்களோ அவர்களாலே महता पुण्यपण्येन क्रीतोयं कायनौस्त्वया प्राप्तुं दु:खोदधे: पारं त्वरयावन्नभिद्यते என்கிறபடியே ஜன்மபலம் கிட்டியது. இவ்வர்த்தம் ஸர்வசக்தியாய் ஸ்ரீகீதாசார்யனுக அவதரித்திருக்கின்ற ச்ரிய:பதியினலே ஸ்ரீகீதையில் விளக்கப்பட்டது. அந்த ஸ்ரீஸூக்தி எதுவென்ருல் ''தைவீஹ்யேஷா'' இத்யாதி. இதன் பொருள் – விளையாட்டிலே ஈடுபட்ட நம்மாலே லீலைக்கு ஸாதனமாக ஏற்றுக்கொள்ளப்பட்ட தாய் ஸத்வம் முதலிய மூன்று குணங்களை ஆச்ரயித்திருக்கின்ற ப்ரக்ருதியாகிற என்னுடைய மாயையை ஒருவராலும் மீறமுடியாது. நம்மையே எவர்கள் காலைக்கட்டிக்கொள்கிருர் களோ அவர்கள்தான் இந்தமாயையைக் கடக்கமுடியும். இதைத்தவிர வேறுவழியில்லை என்றபடி.

न वै दुष्कृतिनो मूढा: अन्यदेव परायणा:।<br>
मुक्तिं प्रयान्ति विप्रेन्द्र कल्पकोटिशतैरपि।।२४।।<br>
विधूतकल्मषा: केचित् विष्णुभक्ताविमत्सरा:।<br>
परस्परं बोधयन्ति तुष्यन्ति च रमन्ति च।।२५।।

ஹே தேவபாகரே! நெடுங்காலம் பாபத்தையே செய்து போந்தவர்களாய் அதனுலே தத்த்வஜ்ஞாநசூந்யர்களாய்

திருமாலைத்தவிர மற்றதேவதைகளிடத்தில் ஈடுபாடுள்ளவர்கள் நூறுகல்பகோடி காலமானுலும், மோக்ஷத்தை அடையமாட்டார்கள். नराणांक्षीण पापानां कृष्णे भक्तिः प्रजायते என்கிறபடியே பகவானை ஆச்ரயிப்பதற்கு விரோதியான பாபங்கள் நீங்கி கல்மஷமற்றவர் களான சிலரே ஸாத்விகர்களது உபதேசத்தாலே பரமாத்மாவின் உண்மையான தன்மையை அறிந்து ஸ்ரீவிஷ்ணு பக்தர்களாய் அதனுலே போட்டி பொருமை இல்லாதவர்களாய் பரமபுருஷனு டைய ஸ்வரூபகுணவிபூதி முதலானவற்றை தானறிந்தவற்றை ஒருவர்க்கொருவர் தெரிய அறிவித்துக் கொள்கின்ருர்கள். அங்கு சொல்லுமவர்கள் அநந்ய ப்ரயோஜநமாக தாங்கள் செய்கிற ப்ரவசநத்தால் ஸந்தோஷிக்கின்ருர்கள். கேட்பவர்களும் அநவதிகாதிசயப்ரியமானவற்றைக் கேட்பதனுலே மகிழ்ச்சியுறு கிருர்கள்.

विष्णु भक्ति विहीनस्य ब्राह्मणस्य विशेषतः।
संपर्कः परिहर्तव्यः यतः पापं भवेन्नृणाम्।।२६।।
यदि पश्यति विप्रेन्द्र पुरुषं वीतमत्सरः।
विष्णुभक्तो महायोगी समुक्त स्सर्वधैवहि।।२७।।

பகவத்பக்தி சூன்யனுன புருஷன் ப்ராம்மண ஜாதியாயி ருந்தாலும் அவனது சேர்க்கை அறவே விடத்தக்கதாகும். ஏதனுலென்ருல் தேவதாந்தரபரனுடைய சேர்க்கை பகவானிடத்துள்ள அன்பை அழித்து அதனுலே பாபத்தை விளைப்பித்து நரகத்தில் விழும்படியன்ருே பண்ணுகிறது. ஆகையால் அப்படிப்பட்டவர்களது சேர்க்கை தாழ்ந்த நிலைக்குக் காரணமாகும். தேவபாகரே! பொருமை முதலிய உட்பகைவர்களைத் துரத்தியவனுயும், பரமபுருஷனை வரிப்பதற்கு காரணமான குணவிசேஷமான பகவத்பக்தியோடு சேர்ந்தவனு யும், அதனுலேயே பெரியஸாதனத்தைப் பற்றியவனுமான புருஷன், எந்த புருஷமாத்ரனைக் குளிரக்கடாக்ஷிக்கிருனே அப்படி ப்ரம்மத்தை அறிந்தவனது கடாக்ஷம் பெற்றவன் ஸம்ஸாரத்துயரினின்றும் அடியோடு விடுபடுவான்.

कृत्वापि सुकृतं सर्व मश्वमेधाधिकं जनः ।
यदि भागवतस्यागः कुर्यात्स्यादेष किल्बिषी।।२८।।
विद्याविनयसंपन्ना ब्राह्मणा वेदपारगाः।
विष्णु भक्तिं न कुर्वन्ति तेहि चण्डालसन्निभाः।।२९।।
विष्णुभक्त्यैव सततं वसिष्ठाद्यामहर्षयः ।
तीर्णाः संसारवाराशिं अपारं मुनि सत्तम
तत्कर्मकृत् तत्परमः तद्भक्तः संगवर्जितः ।
तद्भक्त भक्त्यायुक्त स्त्वं तत्सायुज्यमवाप्स्यसि।।३१।।

எவன் அச்வமேதயாகம் முதலிய புண்யகாரியங்களை மிகுதியாகச்செய்திருந்தாலும், பகவத் பக்தனது விஷயத்தில் அபராதம் செய்தானுல் அவன் எப்போதும் அனுபவித்து மாளாத பெரியபாபத்தைச் செய்தவனுகிருன். நான்கு வேதங்களை ஆறு அங்கங்களோடு கற்றவனுயிருந்தாலும், விஷயம் முதலிய ஆத்மகுணபூர்த்தி உடையவர்களாயும் உள்ள ப்ராம்மணர்களானுலும் பகவத் பக்தி அற்றவராயிருப்பரானுல் அவர்கள் சண்டாளர்களைப் போலே விலக்கத்தக்கவர்களாவர். தேவபாகரே! வசிஷ்டாதிகளான மஹர்ஷிகள் பகவத் பக்தியினுலன்ரே அபாரமான ஸம்ஸார ஸமுத்ரத்தைக் கடந்தார்கள். ஆகையால் நீரும் பகவத் கர்மங்களான குணங்களைப்பாடுதல், அர்ச்சித்தல், பூமாலை சமர்ப்பித்தல், விளக்கேற்றுதல் முதலானவற்றைப் பண்ணுமவராய் பெருமாளையே ''உண்ணும்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன் எம்பெருமான்'' என்கிறபடியே தாரகபோஷகபோக்யங்களாக நம்பினவராய் பெருமாளிடத்தில் த்ருடமான பக்தியுள்ளவராய், ''விரக்தோSபரமாத்மநி'' ''மங்கையர் தோள் கைவிட்டு'' என்கிறபடியே மற்றவிஷயங் களில்பற்றைவிட்டவராய், பகவத்பக்தர்களிடத்தில் பெருமாளிடத்தில் போலே பக்தியுள்ளவராயிருந்தீரானுல்

ப்ராரப்த கர்மங்கள் முடிந்தபிறகு ''ஸாயுஜ்யமந்யே ஸதுமோக்ஷ உக்த:'' என்கிறபடியே பரமாத்மாவோடு போகதாரதம்யஅபாவமா கிற ஸார்ஷ்டிகையோடு சேர்ந்த போக்தவ்ய அவிசேஷமாகிற ஸாயுஜ்யத்தைப் பெறுவீர்.

विशुद्धसत्वो विदितात्मतत्वो
निविष्ट चित्तो भगवत्युपेन्द्रे ।
स्वदृष्टिपातेन पुनातिलोकान्
स्खलद्गतिर्ब्रह्मविचिन्तयानः ।।३२ ।।

यान्यस्य पापानि समुत्थितानि भवन्ति पूर्वं समुपार्जितानि।
यान्येवतान्याशु लयं तथाग्नौ यथैषिकातूल मुपेति विप्र।।३३ ।।

காமம், கோபம் முதலியவை இல்லாததனுலே பரிசுத்தமான மனமுடையவனுய், பகவானுக்கே அடிமை பூண்டதாயும், அவனுக்கே உரியதாயும், ஜ்ஞானஸ்வரூபமாயும், ஜ்ஞானகுணகமாயும், தேஹவிலக்ஷணமுமான ஆத்ம ஸ்வரூபத்தை நன்கு அறிந்தவனுய் இந்திரனுக்குத் தம்பியாக வாமனனுய் அவதரித்து பலிச்சக்ரவர்த்தியினுலே பறிக்கப்பட்ட ராஜ்யத்தை யாசிப்பதன் மூலம் ஸ்வாதீனமாகத் தேவர்களுக்குக் கொடுத்த ஸ்வாமியினிடத்தில் ஈடுபட்ட மனமுடையவனுய் ஆஸநம், சயநம் முதலிய எல்லா நிலைகளிலும் பரமாத்மாவையே த்யானம் செய்துகொண்டிருப்பதனுலே உறுதியான நடத்தை உடையவனுன ப்ரம்மவித்தானவன் தனது கடாக்ஷத்தினுலே லோகங்களையெல்லாம் பரிசுத்தங்களாக்குகின்றுன்., இப்படி உள்ள ப்ரம்மவித்துக்கு அறியாமையினுலே எந்த பாபங்கள் இப்போது உண்டாகின்றனவோ அல்லது முந்தைய ஜன்மங்க ளில் செய்தபாவங்கள் இருக்கின்றனவோ அவையனைத்தும் நெருப்பிலகப்பட்ட ஹூஹூ முள்ளும் பஞ்சும் போல உருமாய்ந்து போகும்.

विशुद्धभावा विहगेन्द्रकेतौ निरुद्धचित्ताः खलु यद्विशन्ति
तदेव सर्वे प्रवदन्ति वेदाः तेभ्यः प्रणामं कुरुविप्रवर्य ।।३४ ।।

பரிசுத்தமான ஹ்ருதயர்களாய் கருடக்கொடியோனை திருமாலிடத்தில் ஓடித்திரியும் மனத்தை எப்போதும் அடக்கிக் கொண்டிருக்கும் பாகவதர்கள் சாச்வதமான எந்த ஸ்தானத்தை அடைகின்றார்களோ அந்த ஸ்தாநமான பரமபதம் तद्विष्णोः परमंपदं सदा पश्यन्ति सूरयः सोध्वनः पारमाप्नोति तद्विष्णोः परमंपदं இவை முதலான எல்லா வேதங்களாலும் விளக்கப் பட்டது. அத்தகைய மோக்ஷஸ்தானத்தை அடைந்தவர்களான பாகவதர்களை ப்ராமணச்ரேஷ்டரான தேவபாகரே! நீர் நமஸ்கரிப்பீராக.

तद्भक्तपूजा खलु तस्य विष्णोः पूजाविधानं ह्यतियाति नूनम्।
अतस्त्वमप्यस्य कुरुष्व पूजां पादाश्रितानां प्रणतार्तिहन्तुः।।३५।।

பகவத்பக்தர்களுடைய ஆராதநம் பாகவதப்ரியமாயு மிருப்பதால் ஆகாரத்வய (பகவான் பக்தர்கள்) யோகத்தினாலே ஏகாகாரயோகிய பகவதாராதன வைபவத்தை விஞ்சியிருக் கின்றது. ஆகையால் தம்முடைய திருவடிகளை ஆச்ரயித்தவர் களுடைய துயரங்களனைத்தையும் போக்குவதையே வ்ரதமாக உடையவரான பெருமாளுடைய திருவடிகளை ஆச்ரயித்திருக் கின்ற பாகவதாராதனத்தை நீரும் முக்யமாகச் செய்யக்கடவீர்.

नहीन्द्रलोकं न यमस्य लोकं नचान्यलोकं नचतुर्मुखस्य।
प्रयान्ति ते केवल मेव विष्णोः परंपदं तत्खलु भक्तियुक्तः।।३६।।

பகவத் பக்தியுடையவர்களான பாகவதர்கள் இந்த்ரலோகத்தை அடையார்கள். அப்படியே யமலோகத்தையும் அடையார். மேலும் மற்ற தேவர்களுடைய உலகத்தையும் அடையார்கள். இத்தேவர்களுக்கெல்லாம் தலைவரான ப்ரம்ம லோகத்தையும் அடையார். மற்ற எந்த இடத்தை அவர்கள் அடைவார்களென்றால் ஸ்ரீவிஷ்ணு சப்தத்தினால்

சொல்லப்படுகின்ற ச்ரிய:பதியினுடைய ஸர்வோத்க்ருஷ்டமான ஸ்தானத்தையே அடைகின்றூர்கள்.

करोषि वै यद्धिजुहोषि यच्च ददासि यत्त्वं विमलात्मबुद्धिः।
नित्यं यदश्नासि तपस्यसीदं तदर्पणं साधुकुरुष्व तात।।३७।।
तद् भक्ति युक्तो विषयेषु तृष्णां निवर्त्य तद्योगयुतोनुवेलम्।
स्वधर्मयुक्तः प्रणमन् तमेव प्राप्नोषि यद्यतयो विशन्ति।।

தேவபாகரே! தெளிந்தமனத்தை உடைய நீர் நித்யம், நைமித்திகம் முதலான எந்த கர்மம் அநுஷ்டிக்கின்றீரோ, எந்த ஹோமம் செய்கின்றீரோ, என்ன தாநம் செய்கின்றீரோ என்ன போஜநம் செய்கின்றீரோ இவையெல்லாவற்றையும் பகவதர்ப்பணம் பண்ணக்கடவீர். முமுக்ஷுவான உமக்கு இன்னம் சுருக்கமாகச் சொல்லுகின்றேன் ''பரமாத்மநி யோ ரக்த: விரக்த: அபரமாத்மநி'' என்றும் ''மாற்பால்மனம்சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு'' என்றும் சொல்லுகிறபடியே பகவத் விஷயத்தில், மிகவிரும்பும் காதலியிடத்தில்போலே, மிகுந்த அன்புடையவராய், அது தவிர மற்ற சப்தாதி விஷயங்களில் ஆசையை நீக்கி, ईदृशः परमात्मायं प्रत्यगात्मा तथेदृशः तत्सम्बन्धानुसन्धानमिति योगः प्रकीर्तितः நான் உன்னையன்றி யிலேன் கண்டாய், நாரணனே – நீ என்னையன்றியில்லை'' இவைமுதலானவற்றில் சொல்லுகிறபடியே எல்லாஸமயங்களி லும் பகவச்சேஷத்வாநுஸந்தானமாகிற போகத்தோடு சேர்ந்தவனாய் वर्णाश्रमाचारवता पुरुषेणपरः पुमान् विष्णुराराध्यते पन्थाः नान्यस्तत्तोषकारकः முதலானவற்றில் பரமபுருஷனுக்கு முகமலர்ச்சியை உண்டாக்கக்கூடிய காரணங்களில் ப்ரதானமாகச் சொல்லப்பட்ட தத்தம் வர்ணாச்ரமத்துக்கு ஏற்ற தர்மத்தைத் தன் சக்தியுள்ளளவும் விடாமல் அநுஷ்டிக்கின்ற வராய் बद्धाञ्जलिपुटाहृष्टा नम इत्येववादिनः என்கிறபடியே

எப்போதும் ச்ரிய:பதியைக்குறித்தே ‘‘ரக்ஷமாம் சரணுகதம்’’ என்ற மந்த்ரத்திஞலேயாவது த்வய மந்த்ரத்திஞ லாவது ப்ரணுமம் பண்ணக்கடவீர். இவ்வாறு செய்யக்கூடிய நீர் பரமயோகிகள் அடையக்கூடிய மோக்ஷத்தை அடைவீர்.

**इति मार्कण्डेयपुराणे क्षेत्रकाण्डे तीर्थमाहात्म्ये भगवत् सृष्टि कथनं नाम सप्तशततमोऽध्याय:**

**श्री:**



## श्रीवीक्षारण्यक्षेत्रमाहात्म्ये अष्टमोऽध्याय:

देवभाग:

विष्णु भक्त्यस्य य: कुर्यादपराधं द्विजोत्तम।

सपापात्मा भवत्येवेत्युक्तं भगवताधुना।।१।।

कोवादृष्टोहि भवता वद तं तत्वतो मम।

சாலிஹோத்ரமஹாமுனிவரே! எவனொருவன் பகவத்பக்தன் விஷயத்தில் அபராதம் செய்கிருனே அவன் எத்தனையேனும் புண்யம் செய்திருந்தாகிலும் மஹாபாபியாய் விடுவானென்று பகவத்பக்தப்ரஸ்தாவநத்தில் தேவரீர் அருளிச் செய்ததே. அப்படி யாராவது பாகவதாபராதத்தாலே ஸங்கடப் பட்டவனை தேவரீர் கண்டதுண்டோ? அப்படி உண்டானுல் அடியேனுக்கு அந்த புருஷனைப்பற்றி உண்மையாகச் சொல்லவேண்டும். இப்படி வினவிய தேவபாகரைக் குறித்து ஸ்ரீசாலிஹோத்ரமஹர்ஷி உத்தரம் அருளிச்செய்கிருர்.

श्रीशालिहोत्र:

भगवद्भक्तियुक्तस्य इक्ष्वाकोर्वंशजस्य च।।२।।

अम्बरीषस्य दुर्वासा: कृत्वाग: प्राप्तवाम्स्तुयत्।

एतत्ते कथयाम्यद्य श्रुणु विप्र स भक्तिकम्।।३।।

தேவபாகரே! பகவானிடத்தில் பக்திஉள்ளவராய் அத்தகையவர்களுள் தலைவரான இஷ்வாகு வம்சத்தில் பிறந்தவராயிருக்கின்ற அம்பரீஷமஹாராஜனுக்கு ஸாக்ஷாத் ருத்ரனுடைய ருத்ராம்சபூதரான துர்வாஸமுனி அபராதம் செய்து என்ன பலனை அடைந்தாரோ அதை உமக்குச் சொல்லுகிறேன். பக்தியுடன் கேளும்.

अम्बरीषस्तु राजर्षिः शीलवान् भगवत्प्रियः।
सत्यसन्धोजितक्रोधोदान्तश्शत्रुनिबर्हणः।।४।।
एकादशी व्रतपरः सदाभागवतप्रियः।
त्रिषुलोकेषु विख्यातो बभूवातुलविक्रमः।।५।।

அம்பரீஷன் என்கிற ராஜர்ஷி ஸதாசாரநிஷ்டராயும், புருஷோத்தமனுக்கு ''ஜ்நாநீத்வாத்மைவ மே மதம்'' என்கிறபடியே மிகவும் ப்ரியமானவராயும், अप्यहं जीवितं जह्यां त्वां वा सीते सलक्ष्मणां नहिप्रतिज्ञां संश्रुत्य ब्राह्मणेभ्यो विशेषतः என்று ஸ்ரீசக்ரவர்த்தித்திருமகன் அருளிச்செய்ததுபோலே தாம் பண்ணின ப்ரதிஜ்ஞையை உயிர்போனாலும் விடாதவராயும் வெல்லமுடியாத கோபத்தைவென்றவராயும், வசிஷ்டர் முதலிய மஹர்ஷிகளாலே நன்கு சிக்ஷிக்ககப்பட்டவராயும், சத்ருக்களை வெல்பவராயும், यथा सरिद्वरागंगा वैष्णवानामहं यथा। तथा व्रतानां सर्वेषां श्रेष्ठमेकादशीव्रतम् இவை முதலானவற்றில் சொல்லப் பட்டபடி எல்லா வ்ரதங்களிலும் சிறந்ததான ப்ரஸித்தமான ஏகாதசீ வ்ரதத்தில் ஊற்றமுள்ளவராயும், எல்லா நிலைகளிலும் பாகவதர்களை அதிப்ரியவஸ்துக்களாகக் கொள்ளுமவராயும், இணையற்ற பராக்ரமாசாலியாயும், மூன்று லோகங்களிலும் ப்ரஸித்தராயும் இருந்தார்.

तस्मिंश्चरति राजर्षाविंबरीषे महत्तपः।
तस्याश्रमं प्रति ययौ दुर्वासास्तापसोत्तमः।।६।।

அத்தகைய அம்பரீஷமஹாராஜன் தவம் செய்து கொண்டிருக்கும்போது தவத்தில் சிறந்தவர்களான ரிஷிகளுக்குள்ளே ச்ரேஷ்டரான துர்வாசமஹர்ஷி அந்த அம்பரீஷமஹாராஜருடைய ஆச்ரமத்துக்கு வந்தார்.

राजर्षिस्तमवेक्ष्यैव मुनिं सत्वरमुत्थितः।
प्रणम्यार्घ्यं ततो दत्वा सभक्तिकमुवाचह।।७।।

அப்போது அம்பரீஷமஹாராஜா் ப்ரஸித்தரான துர்வாச மஹர்ஷியைப் பார்த்தவுடன் வேகமாக எழுந்து தெண்டன் ஸமர்ப்பித்து பக்தியோடு அர்க்ய பாத்யாதிகள் ஸமர்ப்பித்து இவ்வாறு விண்ணப்பம் செய்தார்.

अम्बरीष:

दुर्वास: कल्पयाम्यद्य द्वादश्यां भवतो मुने।

आतिथ्यंवै नदीं गत्वा स्नात्वाऽऽगच्छ महामुने।।८।।

துர்வாசமுனியே! இன்றையதினம் அல்பத்வாதசீ. இந்த த்வாதசிக்குள் தேவரீருக்கு விருந்தளிக்க ஏற்பாடு பண்ணுகிறேன். ஆகையால் கங்கைக்கெழுந்தருளி நீராட்டம் கண்டருளி சீக்ரத்தில் எழுந்தருளவேண்டும்.

द्वादश्यतिक्रमे दोष: पारणायां विधीयते।

यथानातिक्रम दोष: पारणायास्तथाकुरु।।९।।

பாரணைபண்ணும்போது த்வாதசி கடந்துவிட்டால் தோஷமுண்டென்று சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டுள்ளது. எப்படியானால் த்வாதசி கழிவதனாலே தோஷமுண்டாகாதோ அப்படித்வரையுடன் மாத்யாந்நிகம் செய்து எழுந்தருளவேணும்.

दुर्वास:

राजर्षे व्रतलोपंतु नकरिष्यामि ते पुन:।

आगमिष्याम्यहं शीघ्रं स्नात्वा त्रिस्रोतसिक्षणात्।।१०।।

ஹே அம்பரீஷ ராஜர்ஷியே! உமது த்வாதசி வ்ரதத்துக்குக் குறைவுவரும்படி நான் செய்வதில்லை. கங்கை வெள்ளத்தில் கணப்பொழுதில் ஸ்நாநம் பண்ணிவிட்டு சீக்ரமாய் வந்துசேர்கிறேன்.

श्रीशालिहोत्र:

एवमुक्त्वा महायोगी दुर्वासा वै महानदीम्।

गत्वा राजर्षि वर्यस्य व्रतलोपचिकीर्षया।।११।।

अत्वरन्नाचरत्स्नानं तथामाध्यान्हिकीं क्रियाम्।

இவ்வாறு சொல்லிவிட்டு கங்கையை நோக்கிச் சென்ற துர்வாசமுநி, அம்பரீஷனுடைய த்வாதசீ பாரணவ்ரதத்துக்கு லோபம் செய்யவேண்டுமென்ற எண்ணத்தினுலே அவசரமின்றி தாமஸமாகவே ஸ்நாநம்பண்ணி அப்படியே மாத்யான்னிககார்யங்களேயும் நிதாநித்துச் செய்தார்.

अथांबरीषो राजर्षिः द्वादशी व्रततत्परः

द्वादश्यतिक्रमंप्रेक्ष्य तुलसीतीर्थमाददे ।।१२।।

பின்னர் த்வாதசீ பாரணுவ்ரதபரரான அம்பரீஷ மஹாராஜர் த்வாதசியினுடைய அதிக்ரமம் வருகிறது என்று பார்த்து, ''अपोश्नाति तन्नेवाशितं तन्नेवाशितं अशितानशिता यस्मादापो विद्वद्भिरीरिताः''''अंभसा केवलेनैव कुर्वीत जल पारणम्'' இத்யாதி ச்ருதி ஸ்ம்ருதிகளாலே பாரணேக்கு த்வாதசியதிக்ரம தோஷம் வாராமலும் இருக்கும்படி ஆலோசித்து ஸங்கடமான ஸமயத்தில் ஜலபாரணேசெய்தால் அவன் சாப்பிட்டவனுமாவான், சாப்பிடாதவனுமாவான் என்கிற ப்ரமாணுர்த்தத்தை எண்ணி பெருமாள் தீர்த்தத்தைத் துளசியோடு சேர்த்து ஸ்வீகரித்தார்.

दुर्वासा अपि वैस्नात्वा शनैर्व्रत विधातकः।।१३।।

अम्बरीषस्य राजर्षेर्ययौ गृहमनुत्तमम्।

निजागमनमेवैनं प्रतीक्षन्तं मुहुर्मुहुः।।१४।।

अवलोक्य स राजानं मुनिराहरुषान्वितः ।

ராஜாவினுடைய த்வாதசீ பாரணுவ்ரதபங்கம் செய்ய விரும்பிய துர்வாசமுநியும், ஸ்நாநம் செய்துவிட்டு மெள்ளமெள்ள அம்பரீஷமஹாராஜருடைய திருமாளிகையைக் குறித்து வந்து சேர்ந்திட்டார். பிறகு தமது வரவை அடிக்கடி எதிர்பார்த்துக்கொண்டு நிற்கின்ற அம்பரீஷமஹாராஜரைப் பார்த்து துர்வாசமுநி கோபமுடையவராய் இவ்வாறு கூறினர்.

दुर्वासः

मय्यभुक्ते कथं तावद्भवता पारणं कृतम्।।१५।।

राजर्षिस्त्वं हि विख्यातो द्वादशी व्रत निष्ठित:।

ஹே அம்பரீஷ! நாம் சாப்பிடுவதற்கு முன்னம் நீர் எப்படி பாரணைசெய்தீர்? நீர் ராஜர்ஷி என்றும் த்வாதசீ வ்ரதத்தில் மிகவும் ஊற்றமுடையவரென்றும் ப்ரஸித்தராயிருந்து அதிதி சாப்பிடுவதற்கு முன்பு நீர் சாப்பிட்டது சரிதானு?

अम्बरीष:

नकृतं पारणं तात स्वीकृतं तुलसीयुतम्।।१६।।

पादतीर्थं भगवतो दृष्ट्वा द्वादश्यतिक्रमम्।

ஸ்வாமீ! அடியேன் பாரணை செய்யவில்லை. த்வாதசி நடப்பதை எண்ணி பகவானது அபிஷேகதீர்த்தத்தைத்தான் துளஸீ தளத்துடன் எடுத்துக்கொண்டேன், இவ்வளவே அடியேன் செய்தது.

दुर्वास:

हन्ताहं वै ततो ज्ञात्वा प्रोक्तवान् पारणं कृतम्।।१७।।

भवतेतिह्यधोगच्छे द्योऽतिथिं परिभावयेत्।

ஹா. அடடா! நீ செய்ததவறை அறிந்துதானடா நீ பாரணை செய்தாய் என்றேன். இவ்வளவும் தெரிந்து கொள்ளமாட்டாத ஜடமாக எம்மைநீ நினைத்தாயா? அது நிற்க. எவன் அதிதியை அவமதிபண்ணுகின்றானே அவன் தாழ்ந்த கதி யடையத்தக்கவன் தானே. அடா! நீ புஜித்தவனென்றால் நம்மை மீறியவனாகிறாய். சாப்பிடவில்லையாகில் த்வாதசீவ்ரதத்தை மீறிய பாபம் உனக்குத்தப்பாது. என்ன சொல்லுகிறாய் சொல்.

इत्युक्त्वा क्रोधताम्राक्ष: राजानं मुनिसत्तम:।।१८।।

क्षत्रबन्धोगृहाणेति शापार्थं जलमाददे।

ரிஷிச்ரேஷ்டரான துர்வாஸர் கோபத்தினாலே சிவந்த கண்களையுடையவராய்க்கொண்டு ராஜாவைப்பார்த்து இப்படி சொல்லிவிட்டு அடே க்ஷத்ரியாதமா. இதோ ப்ரயோகிக்கித்தேன் சுமந்துகொள் என்று சபிப்பதற்காக கமண்டலு ஜலத்தைக்

கையில் எடுத்துக்கொண்டார்.

एवं क्रोधसमाविष्टं दुर्वाससमनिष्टदम्।।१९।।

विलोक्य राजा भीतोऽथ सविष्णुं शरणं ययौ ।

இப்படி மிகுந்த கோபத்திஞலே பயங்கரமான உருவத்தை உடையவராய் தம் விஷயத்தில் பெரியதீங்கைச் செய்ய நிீனத்திருக்கின்ற துர்வாஸமுநியை அம்பரீஷ மஹாராஜன் பார்த்துபயந்து, துன்புற்றவர்கஂள அக்கணத்திலே ரக்ஷிப்பதற்காக எப்போதும் எல்லா வஸ்துவிலும் இருக்கின்ற ஸ்ரீவிஷ்ணுவை ''சங்கசக்ரகதாபாணே! த்வாரகாநிலயஅச்சுதா – கோவிந்த புண்டரீகாக்ஷ ரக்ஷமாம் சரணுகதம்'' என்று த்ரௌபதி சரண்அடைந்தாப்போலே சரணடைந்தார்.

ततोम्बरीषस्य विलोक्यविष्णुः भक्तार्तिहन्ता भगवान्विपत्तिम्

तदास्य दासस्य कृता मुवाच दुर्वाससा कुपितेनाशुचक्रम्।।२० ।।

பிறகு பக்தர்கஂள ரக்ஷிப்பதற்கேற்ற ஞானம் சக்தி முதலானவை நிறைந்தவராயும், பக்தர்களது துன்பத்தைப் போக்குவதே பெரியவ்ரதமாக உடையவரும், எந்த பக்தனுக்கு எப்போது எந்த துன்பம் உண்டாகுமோ அந்தத் துயரை அக்கணமே போக்க வேண்டுமென்கிற பக்தர்கஂளக் காக்கும் ஊற்றத்தாலே ஓரிடத்திலிருந்து செய்யமுடியாது; எங்குமிருக்க வேண்டுமென்ற எண்ணம்கொண்டு எங்கும் அந்தர்யாமியாய் உள்ள எம்பெருமான், அப்போது கோபம் கொண்டுள்ள துர்வாசராலே தமது பக்தஞன அம்பரீஷ மஹாராஜனுக்கு ஏற்பட்ட ஆபத்தைப் பார்த்து அப்போதே திருவாழியாழ்வாஂன (சக்கரம்)நோக்கி இவ்வாறு சொன்ஞர்.

श्री भगवान्

त्राह्यं वरीषं मुनिनाभिभूतं दुर्वाससा साधु सुदर्शनत्वम्।

सदा समुल्लंधित वाममार्गं

यतोहिभक्ता मम वै प्राणभूताः।।२१।।

வாராய் ஸுதர்ஶந! எப்போதும் தவருன பாதையில் ஒருநாளும் செல்லாதவராகையிஞலே துர்வாஸமுனியிஞலே

திரஸ்கரிக்கப்பட்ட அம்பரீஷ மஹாராஜரை நன்கு ரக்ஷிப்பாயாக. எனக்கு பக்தர்கள் உயிர்போன்றவர்கள். ஆகையாலே நம்முடைய பக்தனைரக்ஷிப்பது உனக்கு அவசியம் செய்யவேண்டியகார்யமாகும்.

इत्येवमुक्त: किलहेतिराज: राजर्षि वर्यस्य विपत्तिनुत्यै।

यत्रांवरीषो भगवत्प्रियोऽभूत् तत्रा भवद्रोषविलोहिताक्ष:।।२२।।

இவ்வாறு பகவானலே நியமிக்கப்பட்டவரான சக்ரராஜர் கோபத்தினலே மிகவும் சிவந்த கண்களையுடையவராய்க் கொண்டு ராஜர்ஷியாகிய அம்பரீஷருடைய ஆபத்தைப் போக்குவதற்காக பகவத்பக்தரான அவர் இருந்தவிடத்திற்கு எழுந்தருளினர்.

तद्वै सहस्रार मरिध्ननेमि स्वतेजसाग्रस्त समस्ततेज:।

निरीक्ष्यवै योगिवरस्तदानीं भीत: प्रदुद्राव दिशोदशापि।।२३।।

அப்போது தமது தேஜஸ்ஸினலே சூர்யன், சந்த்ரன், அக்நி நக்ஷத்ரம் முதலிய எல்லா தேஜஸ்ஸுக்களையும் மழுங்கச் செய்வதாயும், எல்லா சத்ருக்களையும் அழிக்கக்கூடிய தாரையையுடையதாயும், ஆயிரம் ஆரங்களை உடையதாயும், ஜகத்ப்ரஸித்தமாயுள்ள திருவாழியை வானத்திலே வரக்கண்ட துர்வாசர் அக்கணமே பயந்தவராய் பத்துதிக்குக்களிலும் பதறியவாறு ஓடினர்.

यतो यतो गच्छति भीत भीतो मुनिस्तदानीं हरिभक्त विप्रिय:।

ततस्ततो गच्छति विष्णुचक्रं भस्मीकर्तुं चण्डकोपं तमाशु।।२४।।

அப்போது பகவத்பக்தர்களுக்கு விரோதியான துர்வாசர் மிகவும் பயந்தவராய் எந்தெந்த இடத்தில் ஓடுகின்ருரோ அந்தந்த இடத்திலெல்லாம் மிக்க கோபமுள்ளவராகிய துர்வாசமுநியைச் சாம்பலாக்குகைக்காக விரைந்து பகவானது சக்ரம் தொடர்ந்துஓடித்துரத்திற்று.

तदा परिक्रम्य स शंभुलोकंविधातृलोकंच तथेन्द्रलोकम्।

त्राणार्थमुन्मत्तगतिर्महर्षि स्सविह्वल: क्षीर पयोधिमाप।।२५।।

இப்படி கோடிஸூர்யப்ரகாசமாய், உலகையே சாம்பலாக்கும் திறன்படைத்த பகவானது சக்கரத்தாலே துரத்தப்பட்ட அந்த துர்வாஸமுநி ஆரம்பத்தில் தாம் ருத்ராம்சம் ஆகையாலே ஸாக்ஷாத் ருத்ரனுடைய இருப்பிடத்துக்குசென்று என்னை ரக்ஷிக்கவேணுமென்று கூக்குரலிட்டார். நாமிரண்டு பேரும் ஸுதர்சனத்துக்கு இரையாகவேண்டுமென்று ருத்ரன் சும்மெனுதே கைவிட்டு ஓடிவிட்டார்.

அப்படியே ப்ரம்மலோகத்துக்குச்சென்று முறையிட்ட போது ஐயோ என்றிரங்காமல் கதவை அடைத்திட பின்பு ஆனைகெட்டவன் குடத்தில் கையை விடுமாப்போலே ப்ரம்மருத்ரர்கள் கைவிட்டதுகண்டும் பயத்தின் கொடுமையால் ஒருக்கால் அபயம்கிட்டுமோ என்று மயங்கி இந்திரன் அருகே சென்று முறையிட இவராலே தான் பட்டபாட்டை நினைத்து மறைந்துவிட்டான். இப்படி சென்றவிடங்களிலெல்லாம் பலமுறை சென்றும் அவமானப்பட்டு பைத்தியம் பிடித்தவன்போல் துர்வாசர் தளர்ந்துபோய், திருப்பாற்கடலுக்குச் சென்றுர்.

ददर्श तस्मिन् भुजगेन्द्रतल्पे शयानमार्तार्तिहरं पयोधौ।
शरण्यमेकं शरणागतानां मधुद्विषं भक्तियुतोमुनीन्द्रः।।२६।।

பிறகு மஹாவிஷ்ணுவின் சக்ரத்துக்கு எதிர்த்து நன்மைசெய்யமாட்டாத ப்ரம்மருத்ரர்களை ஆச்ரயித்துக் கெட்டேனே, அனைவரையும் அடக்கி ஆள்பவர் ஸ்ரீமந் நாராயணன்தான் என்று இப்போதல்லவா எனக்குத் தெரிந்தது. ஆகையால் அவன் திருவடிகளிலேயே விழுந்து முறையிட வேண்டுமென்று பக்தியுடன் துர்வாசர் திருப்பாற்கடல் சேர்ந்தார். அங்கே திருவந்தாழ்வானுகிற திருப்பள்ளிமெத்தையில் கண்வளர்ந்தருளுபவரும், துன்புற்றவர்களது துயரத்தைப் போக்குவதற்கே இட்டுப்பிறந்தவரும், சரணுகதர்களுக்கு முக்ய ரக்ஷகராயுமுள்ள ஸ்ரீமதுஸூதனனைக் கண்ணுரக்கண்டார்.

पपात भूमौ शरणागतस्तं तस्याग्रतो भक्तजनप्रियस्य।
त्राहीतिवाचं सकृदुच्चरन्वै मुनीश्वरो विह्वलमानसस्सः।।२७।।

மிகவும் தளர்ந்த மனத்தவரான துர்வாசர் ஸர்வரக்ஷகனே! அடியேனை ரக்ஷியும் என்று ஒருமுறை சொல்லிக்கொண்டு சரணாகதராய் அடியார்களுக்கு அன்பராகிய திருமாலின் முன்னிலையில் பூமியில் விழுந்தார்.

अवेक्ष्यतं भक्त जनार्तिहन्ता मुनीन्द्रमेनं शरणागतं सः।

स्वभक्तविद्वेषिणमार्द्रचित्तं किञ्चिद्धसन्विष्णुरुवाच जिष्णुः।।२८।।

''सत्येन लोकान्जयति. दीनान् दानेन राधवः। गुरून् शुश्रूषयाचैव धनुषा युधिशात्रवान् என்கிறபடியே அந்தந்த உபாயங்களினால் எல்லாரையும் ஜெயிப்பவராயும், அடியார்களது துயத்ரதை அடியோடு போக்குபவருமான திருமகள்கேள்வன் முதலில் தன் பக்தனுக்கு விரோதியாயும் போக்கற்று இப்போது தளர்ந்தமனமுடையவராயும், முன்பு பெரும் சினம்கொண்ட திமிர்பிடித்தவராயும், இப்போது வணக்கம் மிக்கவராயும், சரணாகதராயுமுள்ள துர்வாசமுனியைப்பார்த்து புன்முறுவல் பூத்தவராய் இவ்வாறு அருளிச்செய்தார்.

श्री भगवान्:

आगः कृतं यद्विबभूव मोहात् भक्तस्यमे भक्त जनप्रियस्य।

नालंहितत्क्षन्तु महं मुनीन्द्र मत्तोधिका भक्त जनायदत्र।।२९।।

துர்வாசா! அடியார்களிடத்து அன்புமிக்கவனான எனது பக்தனுக்கு அறியாமையால் எந்த அபராதம் செய்தாயோ அதை நாம் பொறுக்கவல்லோமல்லோம். நம் பக்தர்களுக்குச் செய்த அபராதத்தை பொறுப்பதில் நம்மைக்காட்டிலும் நமது பக்தர்கள் அதிக சக்தி படைத்தவர்கள். நமக்கு அவ்வளவு சக்தியில்லை.

तदंवरीषं शरणं भजस्व मद्दासवर्यं शरणागतानाम्।

अभीष्टदं नूनमनेनमुक्तः सुदर्शनेनास्यनुगच्छताशु।।३०।।

துர்வாசரே! நமது அடியார்களுக்குள்ளே சிறந்தவராயும், சரணம் என்று வந்தவர்களுக்கு விரும்பியதையெல்லாம் தரக்கூடியவருமான அம்பரீஷமஹாராஜனை சரணாகதிபண்ணு வீராக. அவ்வாறு செய்தீரானால் உம்மைப்பின்தொடர்ந்து

துரத்தக்கூடிய ஸுதர்சனத்தினின்றும் விடுபடுவீர்.

उक्त्वैवमुत्फुल्ल सरोजनेत्रः दर्वाससं वीतसमस्त धैर्यम्।
अन्तर्दधे प्राञ्जलि रञ्जनाभः सभोगतल्पेन समं मुरारिः।।३१।।

அப்போதலர்ந்த தாமரைமலரைஒத்த திருக்கண்களை உடையவராயும், மைபோன்ற திருமேனி நிறத்தை உடையவராயும், முரன் என்ற அஸுரனைவென்றவராயுமுள்ள திருமால், கூப்பியகையராயும், தைர்யம் துளியுமில்லாதவராயும் உள்ள துர்வாசரை இப்படி அருளிச்செய்துவிட்டு தமக்கே உரிய ஆதிசேஷனுகிய படுக்கையயோடு மறைந்துவிட்டார்.

सं प्रापितो दैन्यमसौ मुनीन्द्रः चक्रेण तेनाप्रतिम प्रभेण।
तमंबरीषं शरणं जगाम भक्त्यायुतःकैटभवैरिभक्तम्।।३२।।

ஒப்பற்ற ஒளியைஉடைய சக்ரத்தினுலே மிகவும் துன்புறுத்தப்பெற்ற துர்வாஸமுநி கைடபாஸுரசத்ருவான ச்ரிய:பதிக்கு பக்தரான அம்பரீஷமஹாராஜரை மிகுந்த பக்தியுடன் சரணமடைந்தார்.

सराजवर्यश्शरणागतं तं निरीक्ष्य विष्णोरपि चक्रहेतिम्।
ननाम तस्मिन् समये समृद्ध प्रबुद्ध दैत्यान्तक मानतात्मा।।३३।।

அப்போது ராஜச்ரேஷ்டரான அம்பரீஷமஹாராஜர் சரணுகதராய் நிற்கின்ற துர்வாஸமுநியையும், அவரைப்பின் தொடர்ந்து துரத்துகின்ற திருமாலின் சக்ராயுதத்தையும் பார்த்து தளர்ந்த மனத்தினராய்க்கொண்டு, பணம்படைபலம் முதலியன நிறைந்தவர்களாயும், எப்போதும் விழித்தவர்களாயுமுள்ள அஸுரர்களுக்கு யமனுயிருக்கின்ற ஸ்ரீஸுதர்சனுழ்வானை தெண்டம் ஸமர்ப்பித்தார்.

नमोस्तुते हेतिवराप्रमेय प्रभाव तुभ्यं जितशत्रुचक्र।
नमस्सहस्रार नमोनमस्ते त्राह्येनमार्तं शरणागतं त्वाम्।।३४।।

உலகிலுள்ள எல்லா ஆயுதங்களுக்கும் ராஜாவான தேவரீருக்கு நமஸ்காரம். அளவிடமுடியாத மஹிமை உடையவராயும், ஸமஸ்தசத்ருமண்டலங்களையும் ஜயித்தவரா யுமிருக்கிற ஸ்வாமீ! உமக்கு நமஸ்காரம். ஆயிரம் கிரணங்களை உடைய ஸூர்யன் போலே ஸஹஸ்ரராங்களை உடைய தேவரீர் பொருட்டு அடியேனது அநந்த நமஸ்காரங்கள். ஆர்த்தராய் தேவரீரைச் சரண்புகுந்த துர்வாசரை ரக்ஷித்தருளவேணும்

क्षमस्व यत्कर्मकृतं तदानीं मां प्रत्यनिन्द्यं मुनिनास्वमोहात्।
मत्प्रार्थनां भक्तजनप्रियत्वं गृह्णीष्व मुक्तं च तमातनुष्व।।३५।।.

இந்த துர்வாசமுனியினாலே குற்றமேதும் செய்யாதவனான என்னைக்குறித்துத் தம்முடைய அறியாமையாலே சாபம்கொடுக்கமுற்பட்ட எந்த கார்யம் அப்போது செய்யப்பட்டதோ அதைப் பொறுத்தருளவேணும். பக்தர்களிடம் அன்புமிக்கவரான தேவரீர் அடியேனுடைய இந்த வேண்டுகோளை ஏற்றுக்கொள்ளவேணும். தேவரீர் அந்த ரிஷியை பயத்தினின்றும் விடுவிக்கவேண்டும்.

इत्युक्त्वा प्रणतो भूमौ नोत्थितोभून्नृपोत्तमः।
क्षान्तमित्येव चक्रेण चोक्तमार्तस्तदानघ।।३६।।
महर्षिरपिमुक्तोभूच्चक्रं चापियथागतं
पूजितंह्यंबरीषेण जगाम लघुविक्रमः ।।

பாபமற்ற தேவபாகரே! ஸர்வராஜச்ரேஷ்டரான அம்பரீஷன் இப்படிச்சொல்லி பூமியில் விழுந்து வணங்கி எழுந்திருக்கவேயில்லை. அப்போது ராஜாவின் பிரார்த்தனையி னாலே சக்ரராஜரும் பொறுத்தோம் என்று அருளிச்செய்தார். துர்வாசரும் ஸுதர்சனபயத்தினின்றும் விடுபட்டார். பிறகு ஸுதர்சனரும் அம்பரீஷனாலே ஆராதிக்கப்பட்டவராய் விரைந்து தாம் வந்ததுபோலேவே திரும்பச்சென்றார்.

एतत्ते सर्वमाख्यातं यन्मां त्वं परिपृच्छसि।
विष्णुभक्तापराधं वै कृत्वा यत्प्राप्नुयान्नरः।।३८।।

தேவபாகரே! நீர் எந்தவிஷயத்தைப்பற்றி நம்மிடம் வினவினீரோ அதற்கு பதிலாகவே விஷ்ணுவின் பக்தர்களுக்கு அபராதம் செய்பவர்கள் படும்பாடு அனைத்தையும் உமக்குச் சொன்னோம்.

## इति श्रीमार्कण्डेय पुराणे क्षेत्रकाण्डे तीर्थमाहात्म्ये अंबरीषचरितं नाम अष्टशततमोऽध्यायः

**ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹபரப்ரஹ்மணேநம:**



**ஸ்ரீவீக்ஷாரண்யக்ஷேத்ரமாஹாத்ம்யே நவமோऽத்யாய:**

देवभाग:

आध्यात्म्यं ज्ञातुमिच्छामि मुनीन्द्र विगतस्पृह।

पुत्रमित्रकलत्रादौ तन्मेब्रूहिकृपानिधे।।१।।

மனைவி மக்கள் நண்பர்கள் முதலானவர்களிடம் பற்றற்றவரான ஸ்ரீசாலிஹோத்ரமஹாமுநே! க்ருபாநிதியான ஸ்வாமீ! அடியேன் ஆத்மஸ்வரூபம் சம்பந்தப்பட்ட அர்த்த வர்க்கத்தை தேவரீர் உபதேசிக்க வேண்டுமென்று விரும்புகிறேன். அவ்விஷயத்தை அடியேனுக்கு விளக்கியருளவேணும்.

श्रीशालिहोत्र:

हन्त ते कथयिष्यामि श्रुणुष्व अध्यात्ममुत्तमम्।

यत्ज्ञात्वा मुनयस्सर्वे परांगतिमवाप्नुयु:।।२।।

आत्मानमधिकृत्यैतत् प्रवृत्तं मुनिसत्तम ।

श्रुतं हि संप्रदायेन मुनिभिस्तत्व दर्शिभि: ।।३ ।।

மிக்கமகிழ்ச்சியாயிற்று. எந்த ஆத்மஸம்பந்தமான அர்த்தத்தை அறிந்து எல்லா மஹர்ஷிகளும் மோக்ஷத்தை அடைந்தார்களோ அத்தகைய உத்தமமான ஆத்மஸம்பந்தமான அர்த்தத்தை உமக்கு நான் சொல்லுகிறேன். ஆத்மாவைத் துவக்கி வந்த இந்த அர்த்தஜாதம் ஸம்ப்ரதாயத்தோடு தத்த்வத்தை அறிந்தவர்களான மஹர்ஷிகளாலே முறையோடு கேட்கப்பட்டது. அல்லது முறையன்றிக்கே, தான்தோன்றியாய் ஏட்டைப்பார்த்து அறிந்ததன்று. அவ்வாறு ஏட்டைப்பார்த்து அறிதல் यदृच्छया

श्रुतो मन्त्रः छन्नेनाथ छलेनवा । पत्रेक्षितोवा व्यर्थस्स्यात् प्रत्युतानर्थदो भवेत् ।।என்று ப்ரமாணம் உள்ளது.

आत्मातु निर्मलः प्रोक्तः ज्ञानानन्दं गुणोहिसः।
तस्य ज्ञानन्तु संक्षिप्तं कर्मणाविद्ययाद्विज।।४।।
विद्ययास्वस्वरूपस्य प्राप्तिर्भवतिशाश्वती ।
विद्याज्ञानमविद्यास्यात् अज्ञानं ज्ञानिनां वर।।५।।
अज्ञानेनावृतोजन्तुः ज्ञानेनहिविमुच्यते।
अविद्यया तिरोधानं अनादिरितिनःश्रुतं।।६।।
साब्रह्मज्ञानतो नश्येदविद्याच्छादनात्मिका ।

ஞாநிகளுக்குள்ளே சிறந்தவரான தேவபாகரே! ஆத்மா ஜ்ஞாநாநந்தகுணகளுகையிஞலேயும், ஜ்ஞாநாநந்த ஸ்வரூப ஞகையிஞலும் அவன் ஸ்வரூபத்தாலே ஒருதோஷமுமில்லாத வன். அப்படி ஸ்வரூபத: நிர்மலஞன ஆத்மாவுக்கு தர்மபூதமான ஞாநம் அநாதிகர்மரூபமான அவித்யைதன்ஞலே சுருங்கியிருக் கின்றது. தனது ஸ்வரூபஜ்ஞான பூர்வகமான பக்தி ப்ரபத்திரூப வித்யையிஞலே பகவத்ப்ரஸாதத்தின் மூலமாக பிற்காலமெல் லாம் தொடரக்கூடியதான அஸங்குசிதமான தர்மபூதஜ்ஞாநாத் மகஸ்வரூப ப்ராப்தி உண்டாகின்றது. विद्ययामृतमश्नुते முதலான வற்ருல் முக்திக்குஸாதநமாகச் சொன்ன வித்யையும், तमेवविदित्वा अतिमृत्युमेति ஆகியவற்றில் சொன்ன ஞானமும், ஒன்றே தவிர வேறில்லை. ''अज्ञानेनावृतं ज्ञानं'' ''अविद्याकर्मसंज्ञान्या'' ''तृतीया शक्तिरिष्यते - ययाक्षेत्रज्ञशक्तिस्सावेष्टिता नृपसर्वगा संसारतापानखिलानवाप्नोत्यति सन्ततान् ஆகியவற்றில் ஆத்மஸ்வரூபாவாரமாகச் சொன்ன அவித்யையும் அஜ்ஞானமும் ஒன்றுதான். அஜ்ஞானத்திஞலே

மறைக்கப்பட்ட ஆத்மா பக்திப்ரபத்திரூபஜ்ஞானத்திஞலே மோக்ஷமடைகிருன். அவித்யா ஸம்ஜ்ஞிதமான (பெயர் கொண்ட) கர்மத்திஞலே ஆத்மாவினுடைய தர்மபூதஜ்ஞாநத் துக்கு ஸங்கோசமான திரோதாநம் (மறைப்பு) அநாதி என்று நாம் ஆசார்யர்களிடமிருந்து அறிந்தோம். இப்படி ஆத்மாவினுடைய தர்மபூதஜ்ஞாநத்துக்கு ஆவரணமாயுள்ள கர்மரூபையான அவித்யை ப்ரஹ்மஜ்ஞான சப்திதமான பக்தி ப்ரபத்தி அந்யதரத்திஞலே நசித்துவிடும்.

प्रकृतिर्यातु सा माया मायीतुभगवान् हरि:।।७।।
माययामोहितोजीव: नजानाति हि किञ्चन।
अतस्तु देहे विप्रेन्द्र करोत्यात्ममतिं नर: ।।८।।
पुत्रमित्रकलत्रेषु ममतां च करोति वै।
अतो नरकमाप्नोति पुमान् मूढतयातया।।९।।
असूर्यानामते लोका अन्धेन तमसावृता:।
प्रेत्यतानभिगच्छन्ति येनाध्यात्मविदोजना:।।१०।।
मोहेनकुरुते कामं पुण्यपापात्मकं नर: ।
ज्ञानाद्विनश्यतश्शीघ्रं पुण्यपापेऽभे अपि।।११।।

अस्मान्मायी सृजते विश्वमेतत् முதலானவற்றில் சொன்ன மாயையானது மூலப்ரக்ருதி என்று எது உண்டடோ அது தான் அம்மாயையிஞலே உலகத்தை மயக்குகின்ற மாயீ எண்ணமுடியாத ஜ்ஞாநசக்திகளை உடையவஞன ச்ரிய:பதிதான். அந்த ப்ரக்ருதியாகின்ற மாயையிஞலே ஜீவன் புத்திகெட்டவஞய்கொண்டு ஒருவஸ்துவையும் உள்ளபடி அறிகிருனில்லே. தேவபாகரே! இந்த ப்ரக்ருதியிஞலே தான் சேதநன் மூடஞய் விகாரியான தேஹத்தில், நான் கரியவன், நான் நொண்டி, நான் குருடன், நான் கிழவன் என்று ஆத்மபுத்தியைப்பண்ணுகின்ருன். இவ்வளவே தவிர ஸர்வசேஷியான ச்ரிய:பதிக்கு அடிமை பூண்டவர்களான புத்ரமித்ரகளத்ராதிகளில் தன்னுடையது என்கிற புத்தியையும்

பண்ணுகிருன். இப்படியுண்டான தேஹம் வேறு ஆத்மாவேறு என்ற விவேகமில்லாமையினுலே சேதநன் நரகத்தை அடைகிருன். இப்படி ஆத்மஸ்வருபத்தையும், அவ்வாத்மாவுக்கு நெடுங்கால மாக அவித்யையினுலே வந்து தலைப்பட்ட அநர்த்தங்களையும் அறியாதவர்கள் தேஹம் மறைந்தபின் அடர்ந்த இருட்டினுலே சூழப்பட்டவைகளாயும், அஸூர்யங்கள் என்று ப்ரஸித்தங்களாயுமுள்ள பாபிகள் உலகத்தை அடைகின்ருர்கள். சேதநன் புண்யபாபங்களை அடைவது புண்யபாபங்களுக்குக் காரணமான கர்மத்தைப் பண்ணுகின்ற மோஹத்தினுலே. அப்படிப்பட்ட புண்யம் பாபம் இரண்டும் பக்தி ப்ரபத்தி ரூபஜ்ஞாநத்தினுலே சீக்ரம் அழிந்துவிடுகின்றன.

भिन्नो देहेन्द्रियादिभ्यो नित्योणुर्व्यापकोनरः।

अविनाशी कथं नाम विनाशीतु भवेद्वपुः।।१२।।

अस्वतन्त्रः कथं नाम स्वतन्त्रोवै भविष्यति।

स्वतन्त्रः परमात्मावै क्षेत्रज्ञः पारतन्त्र्यगः ।।१३ ।।

अतोह्यपारतन्त्र्यं वै स्वभावो गदितो मया ।

स्वातन्त्र्यं भगवन्न्यस्तं यस्तं वेद सवेदवित् ।।१४ ।।

ईश्वरस्सर्वभूतानां हृदये तिष्ठति प्रभुः ।

सर्वभूतांश्च विप्रेन्द्र भ्रामयन्भय यन्त्रितान् ।।१५ ।।

अहंकारं तथादर्पं कामं क्रोधञ्च मत्सरं ।

डंभलोभौ मदञ्चैव तान्मुक्त्वा मुच्यते जनः ।।१६ ।।

अभयं सर्वभूतानां दत्वा करुणयान्वितः ।

भगवन्न्यस्तचित्तो यो मुच्यते सनरस्सुधीः ।।१७ ।।

नियम्यमनसोवृत्तिं विषयेभ्योपि धीरधीः ।

केवलात्मनि निक्षिप्य मनाक्कैवल्यमाप्नुयात् ।।१८ ।।

தேஹத்தைக்காட்டிலும் கண்முதலிய இந்த்ரியத்தைக்

காட்டிலும், மநஸ்ப்ராணன் புத்திகளைக்காட்டிலும், வேறுபட்டவனாய், உத்பத்தி இல்லாதவனாய், அணுவின் அளவினனாய் எல்லா அசேதனவஸ்துக்களிலும் நுழையும் படியான நுட்பமுடையவனாய், நாசமில்லாதவனாயுள்ள சேதநன் பிணி மூப்பிறப்புண்ணும் உடலோடு ஏகவஸ்து ஆவனோ? ஸ்வதந்த்ரனாகாத ஜீவன் பரமஸ்வதந்த்ரனான பரமாத்மாவோடு ஏகதத்த்வமாவனோ? ''பதிம்விச்வஸ்யாத்மேச்வரம்'' என்று தனக்கொரு நியந்தா (கட்டளையிடுபவன்) இல்லாதவனாகை யாலே பரமாத்மவஸ்து ஸ்வதந்த்ரன். அவன் கர்மாநுகுணமாகக் கொடுத்த உடலைச்சுமந்து यथावायो स्तृणाग्राणि वशं यान्ति बलीयस: धातुरेवं वशं यान्ति सर्वभूतानि भारत என்கிறபடியே ஸகலப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளிலும் பிறரையே எதிர்பார்க்கக் கூடிய ஜீவன், பரதந்த்ரனாகையால் இந்த ஜீவாத்மாவுக்கு பகவத்பாரதந்த்ர்யமே ஸ்வபாவம் என்று நம்மாலே உமக்குச் சொல்லப்பட்டது. ஸ்வாதந்த்ர்யம் எம்பெருமானிடத்திலேயே உள்ளது. இப்படி ஸ்வாதந்த்ர்ய பாரதந்த்ர்யங்களை உள்ளபடி அறிந்தவன் எவனோ அவனே எல்லா வேதத்தின் பொருள்களையும் அறிந்தவன் ஆவான். ஹே தேவபாகரே! கணக்கற்ற சக்தி உடையவனாய் எல்லாவற்றையும் தன் சரீரமாகக்கொண்ட ஈச்வரன், கர்மரூபமான ஸம்ஸார பாசத்தினாலே பக்தர்களான ஸர்வசேதநர்களையும், அவரவர் கர்மத்திற்கேற்றவாறு ஏவிக்கொண்டு எல்லா ஜந்துக்களுடைய வும் ஹ்ருதயத்தில் கர்மஸாக்ஷியாயுள்ளான். ஆகையால் அவனே ஸ்வதந்த்ரன். ஜீவர்களெல்லாரும் பரதந்த்ரர்களே என்பது தேறிற்று. ஆகையால் தேஹத்தில் ஆத்மபுத்தியையும், உயர்ந்த சான்றோர்களை அவமதிப்பதற்குக் காரணமான உயர்குடிப்பிறப்பு, கல்வி, செல்வம் இவற்றின் மூலமான மதத்தையும், காமத்தையும், கோபத்தையும், தன்னைச் சரண்புகுந்தவர்களிடத்திலும் முன்புசெய்தகுற்றங்களையே நினைத்தலாகிய மாற்சர்யத்தையும், தர்மம் செய்கிறோம் என்கிற புகழுக்காக தர்மம் செய்கிற ஆடம்பரத்தையும், பிறர்செல்வத்துக்கு ஆசைப்படுகையும், துஷ்டர்களுடைய அன்னத்தைச் சாப்பிட்டதன்மூலம் ஏற்படுகின்ற செய்வன தவிர்வனவற்றை அறியாமையாகிற முட்டாள்தனத்தையும், எந்த

ஒருவன் விடுகின்ருனே அவன் அப்போதே ஸம்ஸாரத்தில் நின்றும் விடுபட்டவனுவான். எந்த புருஷன் பிராணிகள்படும் துயரைக் கண்டு ஐயோ என்று இரங்கி கருணையோடு எல்லா உயிர்களுக்கும் அபயப்ரதானம் பண்ணுகிருனே, எவன் எப்போதும் எம்பெருமானிடத்திலேயே தன் இதயத்தை வைத்துள்ளானே அத்தகைய மஹாபுத்திசாலியான புருஷன் ஸம்ஸாரத்தினின்றும் விடுபட்டவனுவான். மிக்க தைர்யமுள்ள வனுய் ஐம்புலன்களினின்றும் மநோவ்யாபாரத்தைத் திருப்பி அதனை தேஹேந்த்ரியங்களைக்காட்டிலும் வேறுபட்டவனுன ஆத்மாவினிடத்தில் கொஞ்சகாலமாவது செலுத்துகின்ருனே அவன் முறையே பகவத்பக்திப்ரபத்தி மூலமாக மோக்ஷத்தை அடைவான்.

योमूकः परनिन्दायां परदारेषु निस्पृहः ।
युक्तश्च ब्रह्मविद्यायां नरोनिर्वाणमृच्छति ।।१९।।
वासुदेव परोमर्त्यो मृत्युं तीर्त्वा प्रसन्नधीः ।
ज्ञानेन ह्यमृतं याति नक्वाचिद्विनश्यति ।।२० ।।
ब्रह्मज्ञानं यदा जातं अस्य जन्तोरनन्यगम् ।
तदैव प्राप्नुयादेव तद्ब्रह्माच्युत संज्ञितम् ।।२१ ।।

எந்த புருஷன் पररन्ध्रेषु जात्यन्धाः परदारेष्वपुंसकाः । परीवादेषु येमूकाः तेऽतीव दयिता मम என்கிறபகவானது வார்த்தையின்படியே பிறரது குற்றங்களைக் கூறுவதில் ஊமைபோல் இருக்கிருனே, பிறபெண்களிடத்தில் நபும்ஸகனுக இருக்கிருனே, எப்போதும் ப்ரம்மவித்யையைக் கேட்பதிலேயே ஈடுபாடுள்ளவனுயிருக்கிருனே அவன் மோக்ஷத்தை அடைவான். நல்ல ஆசார்யகடாக்ஷத்தாலே எந்த புருஷன் அஞ்ஞானம், ஸந்தேஹம், விபரீதம் ஆகிய குற்றம் அற்ற ஞானத்தை உடையவனுய், ஸ்ரீவாஸுதேவனையே பரதத்வமாகவும், சிறந்த உபாயமாகவும், சிறந்த பலனுகவும் நம்பியிருக்கிருனே அந்த புருஷன் பக்திப்ரபத்திரூபஜ்ஞானத் தாலே ஸம்ஸாரமாகிற யமனைக் கடந்தவனுய் ஸாக்ஷாத்ப்ரம்ம

ஸாயுஜ்யம் ஆகிய மோக்ஷத்தை அடைவான். இத்தகைய புருஷன் कौन्तेय प्रतिज्ञानीहि नमे भक्त: प्रणश्यति என்கிற பகவானது வார்த்தையின்படியே ஒருக்காலும் வழிதப்பிப் போகமாட்டான். எந்த ஸம்ஸாரி சேதநனுக்கு, மற்றைய மந்திரங்கள், வேறுதேவதைகள், மற்ற உபாயங்கள் ஸாமான்யமாக ப்ரயோஜனங்கள் இவற்றை எண்ணுதவனுய், ''எல்லாம் கண்ணன்'' என்கிறபடியே பகவான் ஒருவனேயே குறித்த விஷயமாகவும், அவனேயே உபாயமாகப்பற்றுவதில் உறுதியான ஞானவிசேஷம் எப்போது உண்டாகின்றதோ அப்போதே அவனுடைய ஆர்வத்துக்கீடாக பக்தனே ஒருபடியாலும் கைவிடாத ச்ரிய:பதியாகிற பரப்ரம்மத்தை அடைவன்.

तदेव भोगी शयने वीक्षारण्ये च दृश्यते ।

எது பக்தர்களே ஒருக்காலும் கைவிடாமல் ரக்ஷிக்கின்றதோ, எது ப்ரமம சப்தத்துக்கு முக்கியப் பொருளாக விளங்குகின்றதோ அத்தகைய பரப்ரம்மமே வீக்ஷாரண்யத்தில் திருவந்தாழ்வானுகிய மெத்தையில் பள்ளிகொண்டு கண்வளர்ப வராய் எல்லா மக்களுடையவும் ஊனக்கண்களால் காணப்படுகின்ருர். ஆகையால் கண்ணுல் காணமுடியாத அந்த வஸ்துவை எப்படி காணப்போகின்ரோமென்று கவலேப்பட வேண்டாம்.

ईर्ष्यासूयादि निर्मुक्तो नारायणपरायण: ।।२२ ।।

नरो नमृत्यु माप्नोति नान्यभक्ति: कदाचन: ।

பலவீனமான மக்கள் செய்யும் பிழையைப் பொறுக்கமாட்டாத அஸூயையினுலும், குணங்களிலே குற்றம் காண்கின்ற பொருமையினுலும், மற்றும் வெறுக்கத்தக்கவை களான காமம், கோபம் முதலியவற்றினின்றும் விடுபட்டவனுய் நாராயணனேயே அடைவிப்பவனுயும், அடையும்பயனுகவும் உடையவனுய் மற்ற தேவதைகளிடத்தில் பக்தியில்லாதவனு மான புருஷன் ஒருக்காலும் யமனேப்போலே அழிக்கக்கூடிய ஸம்ஸாரத்தை அடையமாட்டான்.

पराशर ब्यासशुकादिभिर्य त्सत्वो द्रिक्तैरुच्यते ब्रह्मसंज्ञम् ।

तदेव सर्वस्य निदानभूतं तद्विष्णवाख्यं श्रूयते विप्रवर्य ।।२३।।

''ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம்'' என்றும், ''ஸத்வம் விஷ்ணு ப்ரகாசம்'' என்றும் சொல்லுகிறபடியே பரம்பொருளை அறிவதற்கு உண்மையான ஞானமாகிற ஸத்வகுணம் தலையெடுத்த பராசரர், வ்யாசர், சுகர், சௌநகர் முதலான மஹர்ஷிகளாலே எந்த வஸ்து பரப்ரம்ம சப்தத்தாலே ஸ்ரீவிஷ்ணுபுராணம், மஹாபாரதம், ஸ்ரீபாகவதம் முதலிய க்ரந்தங்களினலே தீர்மானிக்கப்படுகிறதோ அந்த வஸ்து தான் எல்லா ஜகத்துக்கும் காரணமானது. தேவபாகரே! அந்த வஸ்து தான் ''விஷ்ணுஸ்ததாஸீத் ஹரிரேவ நிஷ்கல:'' ''விஷ்ணுநா வித்ருதே பூமீ இதி வத்ஸஸ்ய வேதநா'' முதலானவற்றில் விஷ்ணு சப்தத்தினலே சொல்லப்படுகின்றது.

ध्यात्वा देवं पुण्डरीकायताक्षं
वीक्षारण्ये भोगितल्पे शयानम् ।
प्रादुर्भूतं भक्तवात्सल्य योगात्
विष्णुं साक्षात् भक्तिगम्यं भजस्व ।।२४।।

தேவபாகரே! அப்போதலர்ந்த செந்தாமரை மலர்போன்ற கண்களை உடையவரான வீக்ஷாரண்த்தில் பாம்பணையில் பள்ளிகொண்டு கண்வளர்ந்தருளுகிறவராய், பக்திபண்ணுகிற மஹர்ஷிகளிடத்தில் உள்ள அன்புமிகுதியினலே எல்லார் கண்ணுக்கும் தோன்றக்கூடியவராய், அர்ச்சாரூபியாய், எழுந்தருளியிருக்கினற பக்தி ஒன்றினல் தான் அடையத்தக்க வரான விஷ்ணுவை நீர் நன்ருய் த்யானிப்பீராக.

सर्वेषु वेदेषु पुराणवाक्ये ष्वयं हरि श्शंभु शिवादि शब्दैः
सामान्यभूतैर्हि विशेषभूत उद्गीयते तत्तदर्थानुगुण्यात् ।।२५।।

எல்லா வேதங்களிலும் புராணவாக்யங்களிலும் ''शंभुराकाशमध्ये ध्येयः'' 'नसन्नचासच्छिव एव केवलः'' ''सर्वाणि हवा इमानि भूतानि आकाशादेव समुत्पद्यन्ते'' முதலான இடங்களில் சம்பு, சிவன், ஆகாசம் முதலான சப்தங்களாலே

''एकोहवै नारायण असीत् नब्रह्मानेशनः'' இவை முதலான இடங்களில் விசேஷ சப்தமான நாராயண சப்தத்திஞலே சொல்லப்படுகின்ருராகையாலே, விசேஷ பூதரான ச்ரிய:பதியே ஸாமான்ய சப்தங்களினுடைய, ஜகத்க்ஷேமங்கரத்வ, மங்கலதமத்வ, ப்ரகாசமாநத்வாதி அர்தங்களோடு சேர்ந்திருக்கையிஞலே விளக்கப்படுகின்ருர். ஆகையால், ''वेदैश्च सर्वैः अहमेव वेद्यः'' என்றும் ''ये च वेदविदोविप्राः ये च अध्यात्मविदो जनाः ।'' ''ते वदन्ति महात्मानं कृष्णं धर्मं सनातनं'' என்றும் சொல்லுகின்றபடியே ஸாமாந்யவிசேஷ சப்தங்களாலே சொல்லப்படுகின்ற எல்லா காரணவாக்யங்களாலும் திருமாலே சொல்லப்படுவதாகக் கொள்ளவேண்டும்.

सनकादि योगि जनहृत्सरोरुहे निवसन्तमच्युत मुदस्तदुष्कृतम् ।
भजभक्ति भावितमनास्त्वमुन्नतिं त्यजदेवतान्तर परेषुसौहृदम् ।।

ஸநகாதிகளான மஹாயோகிகளுடைய இதயத்தாமரையில் எப்போதும் எழுந்தருளியிருப்பவராயும், தன்னே அண்டிய மக்களே எப்போதும் கைவிடாதவராயும், அடியார்களது எல்லாப்பாபங்களேயும் தன்னே நினேத்த மாத்ரத்திலேயே போக்கடிப்பராவராயும் உள்ள திருமாலே மிகுந்த அன்புநிறைந்த நெஞ்சினஞய் கொண்டு எப்போதும் ஸேவித்துக்கொண்டிரும். ஒருபோதும் கொழுப்பு (திமிர்) முதலிய மனக்குற்றங்களேயும், மற்ற தேவதைகளிடத்தில் ஈடுபடுபவர்களுடைய நட்பையும் அடியோடு விடக்கடவீர். இதுவே ஸர்வஸாரஸங்க்ரஹமாகக் கொள்ளக்கடவீர்.

இதி ஸ்ரீமார்க்கண்டேயபுராணே க்ஷேத்ரகாண்டே தீர்த்தமாஹாத்ம்யே அத்யாத்ம கதநம் நாம நவசததமோSத்யாய:

**ஸ்ரீ:**



**ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹபரப்ரஹ்மணே நம:**
**ஸ்ரீவீக்ஷாரண்யக்ஷேத்ரமாஹாத்ம்யே தசமோऽத்யாய:**

देवभाग:

येनयान्ति परंधाम योगेन ध्वस्तकिल्बिष:

तं योगं श्रोतुमिच्छामि त्वत्तोऽहं मुनिपुङ्गव।।१।।

சாலிஹோத்ரமஹாமுநே! மோக்ஷத்தை விரும்புபவர்களான சேதநர்கள் யோகாப்யாஸத்திலுலே எல்லாகல்மஷங்களையும் போக்கடித்துக்கொண்டு மேலான ஒளியான ப்ரம்மத்தை அடைகின்றூர்களோ, அப்படி எல்லா தோஷங்களையும் போக்கக் கூடிய யோகத்தை தேவரீரிடமிருந்து கேட்கவேண்டுமென்று அடியேன் விரும்புகிறேன். கருணைகூர்ந்து அருளிச்செய்ய வேண்டும்.

श्रीशालिहोत्र:

श्रुणु योगं परंगुह्यं गुह्यानाञ्च पवित्रकम्।

परमब्रह्मविषयं सनकादिभिरीरितम्।।२।।

தேவபாகரே! ரஹஸ்யார்த்தங்களுக்குள்ளே மிகவும் ரஹஸ்யமானதும், ஆத்மாவின் சுத்திக்குக் காரணமானதும், பரப்ரம்மத்தைப்பற்றியதாயும், ஸநகாதிமஹர்ஷிகளால் கூறப்பட்டதாயுமிருக்கிற யோகத்தைக் கேளும்.

यमाश्चनियमाश्चैव आसनञ्च तथैवच

प्राणायामस्तथा प्रत्याहारोवै धारणा तत:।।३।।

ध्यानञ्चैव समाधिश्चेत्यष्टांगो योग उच्यते।

யமம், நியமம், ஆஸநம், ப்ராணுயாமம், ப்ரத்யாஹாரம்,

தாரணே, த்யாநம், ஸமாதி என்று ''ஷட்விதா சரணுகதி:'' என்றூப்போலே அங்காங்கிகூட்டிஞலே யோகம் அஷ்டாங்கம் என்கிறது. இவற்றில் ''ஸமாதி'' ஒன்றே அங்கியாகும். மற்ற ஏழும் அங்கங்களாகும். அங்கு **யமங்களாவன** – அஹிம்ஸா, அஸத்ய, அஸ்தேய, அக்ரோத, ப்ரஹ்மசர்யா பரிக்ரஹங்கள். சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டவை தவிர மற்ற விஷயங்களில் ப்ராணிகளேத் துன்புறுத்தாமலிருத்தல் அஹிம்சை ஆகும். எல்லாப் பிராணிகளுக்கும் நன்மை பயக்கக்கூடிய உண்மையான வார்த்தையைப் பேசுதல் ஸத்யமாகும். அஸ்தேயமாவது – பிறர்பொருளேத் தனக்குரியதாக ஆக்கிக்கொள்ளாமலிருத்தல் ஆகும். பிராணிகளுக்குத் தீமை விளேப்பதற்குக் காரணமான மநோவிகாரம் அற்றிருக்கை அக்ரோதமாகும். பெண்களிடத்தில் இன்பம் துய்க்கவிரும்பி தவருனபார்வை முதலானவை அற்றிருக்கை ப்ரம்மசர்யமாகும். தன் ஸ்வரூபம் வரை எல்லாமே பகவானுக்கு அடிமைப்பட்டது. ஆதலால் அத்தகைய பகவானுக்கு அடிமைபூண்ட இந்த ஆத்மவஸ்துவைத் தன்னுடையது என்று எண்ணுமலிருத்தல் அபரிக்ரஹ்மாகும். இவையனேத்தும் யமங்களாகும். **நியமங்களாவன** – சௌசம், ஸந்தோஷம், மந்த்ரஜபம், ஸ்வாத்யாயம், அஸ்திவாக்யம் இவைகள். வெளிப்புலன் உட்புலன்களுக்கு சாஸ்த்ரம் சொன்ன வழியிலேயே செய்யத்தக்க கருமங்களுக்கு யோக்யதை தான் சௌசமாகும். சப்தாதி விஷயங்களின் லாப அலாபங்கள் இன்பமோ துன்பமோ இல்லாமலிருக்கவேண்டுகையால் ஸ்வரூப ப்ராப்தபகவத்கைங்கர்யலாபத்திற்குக் காரணமான நித்யாநுவ்ருத்தமநஸ்ஸின் ப்ரீதி(யின்) ஸந்தோஷமாகும். மூலமந்த்ரங்களது அர்த்தத்தை அறிந்துகொண்டு அநுஸந்திப்ப தாயும், ரிஷிமுதலிய ந்யாஸபூர்வகமாயுள்ள உபாம்சுஉச்சாரணம் **மந்த்ரஜபமாகும். ஸ்வாத்யாயமாவது** –தைத்திரீயம் சாந்தோக்யம், ப்ருஹதாரண்யகம், கடவல்லி முதலாக பகவத் கீதை வரையிலுமுள்ள உபநிஷத்துக்களின் அர்த்தங்களே பரிசீலிப்பதாகும். **ஆஸ்திக்யம்** – பகவான் ஒருவன் உண்டு. அந்த பகவான் அனேவருக்கும் தலேவன், எல்லாரையும் நியமிப்பவன் என்று எண்ணிக்கொண்டிருக்கை. இவை அனேத்தும் **நியமங்களாகும்**. பசுஞ்சாணியால் மெழுகப்பெற்ற தாயும், காற்றில்லாததாயும், எறும்பு புழு முதுலியவை

அற்றதாகவும், ஏகாந்தமாயுமுள்ள இடத்தில் அடியில் தர்ப்பாஸநத்தையும், அதன்மேல் புலித்தோலேயும், அதன்மேல் வஸ்த்ரத்தையும், போட்டுக்கொண்டு ஸித்தாஸநம், பத்மாஸநம் முதலான உடம்பிலுள்ள அவயவங்களே முறைப்படி வைத்துக்கொள்வது தான் **ஆஸநமாகும்**. வலக்கையின் சுண்டு விரலாலும், பவித்ரவிரலாலும், இடது மூக்கின் த்வாரத்தை தடுத்து வலது மூக்கின் த்வாரத்திஞலே உள்ளிருக்கின்ற வாயுவை வெளியில்விட்டு கட்டைவிரலிஞலே வலது மூக்கின் த்வாரத்தை நன்ருகக்தடுத்து இடது மூக்கின் த்வாரத்திஞலே வெளிக்காற்றை உட்கொண்டு இவ்விரல்களாலே இரண்டு மூக்கின் த்வாரங்களேயும், நன்ருகத் தடுத்துப் பிடித்துக்கொண்டு இரண்டு உதடுகளிஞலே வாயை நன்ருகமூடிக்கொண்டு இதயத்தாமரையில் திருமகள்கேள்வனுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை திருவடிமுதல் திருமுடிவரை த்யானித்துக் கொண்டு, ப்ரணவத்தோடு கூடிய ஏழுவ்யாஹ்ருதிகளோடு கூடியதாயும், சிரஸ்ஸோடும் கூடியிருக்கின்ற காயத்ரியை மூன்று முறை மனத்தில் அநுஸந்தித்தல், அல்லது மூலமந்த்ரத்தை இருபத்தெட்டு முறை அநுஸந்திக்கையாவது செய்கை **ப்ராணுயாமம்** ஆகும். சப்தாதி விஷயங்களில் ஈடுபட்டிருக்கின்ற காதுமுதல் மநஸ் இறுதியாக உள்ள இந்த்ரியங்களே அந்தந்த விஷயங்களினின்றும் திருப்புகை **ப்ரத்யாஹாரமாகும்**. அடக்கமுடியாதமனதை பரப்ரம்மத்தினி டத்தில் ஆசையால் நிறுத்திக்கொள்ளுகை தாரணே ஆகும். அந்த பகவானிடத்திலுள்ள மநஸ்ஸிஞலே அவனது எல்லா அவயவங்களேயும் இடையருது அநுஸந்திப்பது தான் **த்யானமாகும்**. காற்றில்லாத இடத்தில் வைத்த விளக்கின் ஜ்வாலேயைப்போலே அசையாத மனதால் பெருமாள் திருமேனியை விடாமல் தியானிப்பது தான் **சமாதி** எனப்படும். ஆக இவையே **அஷ்டாங்கயோகமாகும்**.

नहि योगस्य विस्तारो वक्तुं वर्षशतैरपि।।४।।

हिरण्यगर्भप्रमुखैश्शक्य: किमुतमादृशै:।

அஷ்டாங்கயோகத்தின் விரிவை விசேஷஞானம் படைத்த ப்ரம்மா முதலானவர்களாலும், அநேகவர்ஷங்கள் சொன்னுலும் ஸாத்யமாகாது. அப்படியிருக்க அற்பஞானமும்

சக்தியும் படைத்த நம்போல்வார்களால் சொல்ல ஸாத்யமா?

प्राणायाम परोनित्यं नासाग्रन्यस्तलोचनः ।५ ।।
नचाप्युच्छ्रित आसीनो नातिनीचेतथैवच।
विषयेभ्यो निवर्त्यैकोमनोवै नियतात्मवान्।।६।।
ऋजुकायः प्रसन्नात्मा सर्वभूतहितोरतः
निस्पृहः पुत्रमित्रेषु समलोष्टाश्मकाञ्चनः।।७।।
प्रियाप्रियेष्वागतेषु गतौच सुखदुःखयोः।
कामक्रोधौ वशेकृत्वा श्रीमान् शान्तोऽनसूयकः।।८।।
अविह्वलोभयंत्यक्त्वा सर्वभूतेभ्य एवच।
धृतिमान् शीलसंपन्नः श्रुतवान् सज्जनप्रियः।।९।।
मैत्रीञ्च करुणाञ्चैव मुदितां चैव तत्ववित्।
उपेक्षां सर्वभूतेषु कुर्वन् सिद्धिमवाप्स्यसि।।१०।।

அப்படியோகவிஸ்தாரம் சொல்லவும் கேட்கவும் அரிதாயிருந்தபோதிலும் ஸாரமாகவும், சுருக்கமாகவும் உமக்குச் சொல்லுகிரோம். மிகவுயரமாகவும், மிக தாழ்வாகவும் இல்லாத முன்சொன்ன ஆஸநத்தில் உட்கார்ந்துகொண்டு தனது மூக்கின் நுனியைப் பார்த்துக்கொண்டு நித்யகர்மாவருத்தங்களான எல்லாக்காலங்களிலும் முன்பு சொன்னமுறையிலே ப்ராணுயாமங்களைப் பண்ணிக்கொண்டு, சப்தாதி விஷயங்களி லிருந்து மனதைத் திருப்பிக்கொண்டு தன்வசப்பட்ட மனத்தவ ராய், எப்போதும் ஜநசந்தடியில்லாமல் ஏகாந்தமாய், சரீரத்தைக் கோணல் குறுகலில்லாமல் நிமிர்த்துக் கொண்டு ஸமமாயிருத்திக்கொள்ளவேண்டும். தெளிந்த மனத்தை உடையவராய் பகை நட்பு அயலார் என்கிறவேறுபாடின்றி எல்லா மக்களிடத்திலும் நன்மையே நாடுபவராயிருக்க வேண்டும். பிள்ளைகள் நண்பர்கள் முதலானவர்களிடத்திலும் விருப்பு வெறுப்பில்லாதவராய் இன்பதுன்பங்களிலும் பற்றற்ற வராய் இருக்கவேண்டும். ஒருபைசாகூடப்பெருத ஓட்டாஞ்சில்

முதலானவற்றிலும், மிகவும் உபயோகப்படக் கூடியதான பதினாறு வர்ணங்களையுமுடைய கட்டித்தங்கம், ரத்நம் முதலான வற்றிலும் ஆசையற்றவராயிருத்தல் வேண்டும். காமக்ரோதங் களை அடக்கிக்கொண்டு அமைதி உற்றவராய், அஜாக்ரதை யாலே எப்போதாவது நல்வழியிலிருந்து நழுவுதல் ஏற்படுமானால் நமக்கு இப்படி வரலாமா என்று வெட்கப்படக் கூடியவராயிருக்க வேண்டும். பகைவன் விஷயத்திலும், குணங்களில் குற்றங்களை ஏறிடக்கூடாது.

கர்மத்தை அநுஸரிப்பவர்களால், ஸர்வஜ்ஞனாய், ஸர்வசக்தனாய், எல்லாருக்கும் நண்பனாய், எல்லாரையும் நியமிப்பவனாயுமுள்ள ஈச்வரனாலே ஏவப்பட்டவைகளான பாம்பு, புலி முதலிய ஜந்துக்களிடத்தில், गजं वा वीक्ष्य सिंहं वा व्याघ्रं वापि वरानना नाहारयति सन्त्रासं बाहूरामस्य संश्रिता என்கிற படி மேலே சொன்ன குணங்களை உடைய ஈச்வரனைப்பற்றி யிருப்பதாலும், நடப்பவை நடந்தே தீரும் என்கிற ப்ரமாணங்களை எண்ணுவதால் உண்டான சஞ்சலமற்ற தன்மை உடையவராய், பயத்தை விட்டவராய், எதனாலும் துன்பமடையாதவராய், தைர்யமுள்ளவராயிருத்தல் வேண்டும். நல்ல நடத்தை உடையவராய் மனதைப் பக்குவப்படுத்தக் கூடிய சாஸ்த்ரங் களில் பரிசயமுள்ளவராய், பாகவதர்களிடத்தில் பூமாலை, சந்தனம், பெண்கள், சந்திரன், நிலவு இவற்றைப்போலே பிரியமுள்ளவராய் இருக்கவேண்டும். எல்லா மக்களிடத்திலும் அநுகூலர்களாயிருக்கும்போது ஐயோ என்று இரங்கவும் வேண்டும். அவர்கள் ஸந்தோஷிக்கும்போது ஸந்தோஷத்தை யும், அவர்கள் ப்ரதிகூலமாக இருக்கும்போது நம்முடைய தீவினை காரணமாக இப்படிச் செய்கின்றார்கள் என்கிற நிச்சயத்தினாலே அவர்கள் விஷயத்தில் மாறுபாட்டற்ற மனத்தராய், அலட்சியப் படுத்தாமல் தத்த்வஜ்ஞாநியாயிருப்பீராகில் மோக்ஷஸித்தி பெறுவீர்.

ध्यायन्नित्य मनन्यात्मा शुद्धं ध्येयंहृदंबुजे।
अकुण्डमतिरव्यग्रः कर्मवर्णाश्रमान्वितम्।।११।।

कुर्वन्नित्यं त्रिसन्ध्यासु जपन्नष्टाक्षरं मनुं।
नमो नारायणायेति प्रणवं सहतारकम्।।१२।।

தத்த்வார்த்தத்தைப் பலமுறை அநுஸந்திப்பதனுலே எதிர்பாராத விஷயஸுகங்களில் மயங்காத புத்தியுடையவராய், கெட்டசிந்தனே இல்லாதவராய், தனது இதயத்தாமரையில் த்யாநிப்பவர்களது பாபத்தைப் போக்குவதாயும், த்யானிப்பதற்கு எளிதாயுமுள்ள சொல்லப்படுகின்றவடிவினராகிய பகவானது திவ்யமங்கள விக்ரஹத்தை த்யானிப்பவராயும், இது தவிர மற்றவற்றில் சிந்தையைச் செலுத்தாதவராயும், வர்ணுச்ரம தர்மத்துக்கேற்றபடியான நித்யநைமித்திக கர்மங்களே பகவத் கைங்கர்யரூபமாக இயன்றவரை உரியகாலத்தில் அநுஷ்டிப்ப வராயும், மூன்று ஸந்த்யாகாலங்களிலும் முதன் முதலாக அனேத்துமக்களேயும் காக்கக் கூடிய ஓங்காரமாகிய ப்ரணவத்தை யும், அதோடு ''நாராயணுய'' என்கிற மந்திராம்சத்தையும் சேர்த்து இப்படி அஷ்டாக்ஷரமான மூலமந்த்ரத்தை ஆசார்யன் உபதேசித்த அர்த்தாநுஸந்தானத் துடனும், ரிஷி முதலிய அங்கந்யாஸகரந்யாஸங்களோடும் கூடி ஜபித்துக்கொண்டிருப்பீ ராகில் சித்தியை அடைவீர். இனி தியானம்பண்ணவேண்டிய தான திவ்யமங்கள விக்ரஹத்தை விளக்குகிருர்.

ध्यायेत्स्फुरन्मकरकुण्डलमण्डिताङ्गं
ग्रैवेयकप्रभृतिभूषणभूषिताङ्गम्
मूर्ध्न्यु ल्लसन्मकुटरत्न मरीचिजालै रूर्ध्वं
वितानितमुद ञ्चितचारुवेषम्।।१३।।
राकाशशांक सदृशाननमात्तचक्रं
शंखोल्लसन्निजकरं करुणापयोधिम्।
पीतांबरं वरदमम्बुज पत्रनेत्र
मीषत्स्मितोल्लसित गन्धयुगं द्विजेन्द्र।।१४।।

पद्मापदांबुज परिष्कृतबाहुमध्य
पीठस्फुरद्रुचिरकौस्तुभमण्डितांगम् ।
भक्तार्तिहारिण मनंगमनन्त तातं
कल्याणदं कमलनाभमशेषवन्द्यं।।१५।।
नारायणं विहगनायकसेव्यमान
मानन्दरूपमपहापितभक्त पापं ।
नाकौकसां घनकिरीट विजृम्भमाण
स्फुरन्मणीन्द्र रुचिचुम्बित पादपद्मम्।।१६।।

''சுடரிலகுவிலகுமகரகுண்டலத்தன்'' என்கிறபடியே ஒளிவீசுகின்றவைகளாயும், மீன்வடிவில் உள்ளவையாயும் இருக்கின்ற குண்டலங்களாலே, திருக்காதுகள் மட்டும் என்கிற வரையரையில்லாமல் திருமேனி முழுதும் அலங்கரிக்கப் பட்டுள்ள கர்ணாபரணம் முதலான அந்தந்த ஆபரணங்களாலே அலங்கரிக்கப்பட்டுள்ள அவயங்களை உடையவராயுள்ளார். திருமுடியில் விளங்குகிற கிரீடத்தினுடைய நவரத்னங்களின் ஒளிக்கதிர்களாலே பலவண்ணங்களையுடைய மேல்கட்டை உடையவராயுள்ளார். அழகிய சந்தனம் பூசிக்கொண்டிருப் பவராயும், பௌர்ணமி சந்திரனுக்கொத்த திருமுகம்ண்டல முடையவராயும் உள்ளார். ஸங்கல்பமாத்ரத்தினாலே சத்ருக்களை அழிக்கக்கூடியது. ஆதலால் அலங்காரத்துக்காக வலது திருக்கையில் ஏந்தியுள்ள சத்ராயுதத்தை உடையவராயும், ''ஹரிகரபுஷ்கரஹம்ஸம்'' என்று ஸ்ரீதேசிகன் ஸாதித்தபடி அன்னம்போலே உள்ள சங்கினாலே அலங்கரிக்கப்பெற்ற இடது தாமரைக்கையை உடையவராய் உள்ளார். கருணையங்கடலா யுள்ளவராயும், மாமனாரான ஸமுத்ரராஜன் கல்யாணம் பண்ணித்தரும்போது கொடுத்த பீதாம்பரத்தை உடையவராயும், அபயஹஸ்தத்தினாலே வேண்டிய வரங்களைத்தருமவராயுள்ளார். தாமரைமலர் போன்ற திருக்கண்களை உடையவராயும், புன்சிரிப்பினாலே ஒளிவிடுகினற கன்னப்புறங்களை உடையவராயுள்ளார். ஸ்ரீமஹாலக்ஷ்மியின் திருவடித்தாமரை

களினுலே அலங்கரிக்கப்பட்ட திருமார்பாகிற ஆஸநத்தில் ப்ரகாசிக்கின்றவராயும், கௌஸ்துப ரத்னத்தினுலே அலங்கரிக் கப்பட்டவராயும் உள்ளார். அடியார்களது அவலங்களைப் போக்கியேதீருவதென்று கங்கணம் கட்டிக்கொண்டுள்ளார். தேசகாலவஸ்துபரிச்சேதமில்லாத ஸ்வரூபஸ்வபாவராயுள்ளார். அழகுக்கே இருப்பிடமான மன்மதனைப்பெற்றவராயும், அதிகாரிகளது விருப்பத்திற்கிணங்க எல்லா மங்களங்களையும் தரக்கூடியவராயுமுள்ளார். உலகைப்படைத்த நான்முகனைத் தோற்றுவித்த நாபீகமலத்தை உடையவராயும், ''ஸ்தவ்ய: ஸ்தவப்ரிய:'' என்கிறபடி எல்லா அதிகாரிகளாலும் துதிக்கத்தக்க வராயுமுள்ளார். ''தாஸஸ்ஸகா வாஹநமாஸநம் த்வஜ: யஸ்தே விதாநம்'' என்கிறபடியே தொண்டனுயும் நண்பனுயும் ரஸிகராயும்முள்ள வேதமயமான பெரியதிருவடியினுலே போற்றப்படுகின்றவராயும், அநுபவிப்பவர்களுக்கு ஒப்பற்ற ஸுகரூபமான ஸ்வரூபவிக்ரஹ குணங்களை உடையவராயும், ''மனத்தினுல் சிந்திக்கப் போயபிழையும் புகுதருவானின்றன வும் தீயினுல் தூசாகும்'' என்று சொல்லுகின்றபடியே பக்தர்களு டைய எல்லாவிரோதி கர்மங்களையும் போக்குமவராயுள்ளார். ஒரேஸமயத்தில் வந்து கூட்டமாய்வந்து வணங்குகின்ற ப்ரம்மருத்ராதிகளுடைய கிரீடங்களினின்றும் வீசுகின்ற ரத்நக்கூட்டங்களின் ஒளிக்கத்தையாலே திகழ்கின்ற திருவடித் தாமரைகளை உடையவராயுமுள்ள திருஎவ்வுள்கிடந்தான் உருவம் கொண்ட ஸ்ரீமந்நாராயணனை த்யாநம் பண்ணுவீராக.

த்யாயே: என்று (லிங்மத்யமபுருஷஏகவசநம்) இவ்விடத்தில் விக்ரஹகுணங்களோடு ஸ்வரூபகுணங்களை எடுத்து ''நாராயணம்'' என்று விசேஷத்தைக் குறிப்பிட்டபடி யால் பகவத்விக்ரஹமும் பகவத் ஸ்வரூபமும் ஒன்று என்ற உறுதிப்பாடு மிகவும் வேண்டற்பாலது என்பது தெரிகிறது. ஆகையால் தான் தமது தேஹத்தில் ஆத்மத்வ ப்ரமம் நீங்கி எம்பெருமான் திருமேனியில் பரமாத்மஸ்வரூபத்வ எண்ணம் எப்போதும் நமக்கு வேண்டுவது என்று திருமங்யையாழ்வார் அநுஸந்தானமென்று பெரியோர்களுடைய ஸ்ரீஸூக்தி.

एवं ध्यात्वा वासुदेवं हिनित्यं

मर्त्योर्मृत्युं विप्रतीर्त्वातिघोरम्

पादाम्भोजं प्रप्नुयाद्विश्वयोने विष्णो

र्जिष्णोर्वसुदेवात्मजस्य।।१७।।

தேவபாகரே! பிறப்பு இறப்பு என்கிற சக்ரத்தில் சுழல்பவனுயுள்ள ஜீவன் நாம் சொன்னபடியே ஸ்ரீவாஸுதேவனை தினமும் த்யானம் பண்ணினுனுல் மிக்க பயங்கரமான ஸம்ஸாரத்தைக் கடந்து, அகில உலகுக்கும் காரணபூதராயும், ஸர்வாந்தர்யாமியாயும், ஸ்வாதீனத்ரிவிதசேதநனுசேதந ஸ்வரூபஸ்திதிப்ரவ்ருத்திபேதனுயும், கண்ணனுயவதரித்து நாட்டையளித்துய்யச்செய்தவராயுமுள்ள திருஎவ்வுள் கிடந்தானுடைய அயர்வறும் அமரர்கள் தொழாநின்ற துயரறுசுடரடியைத் தொழுதெழப்பெறுவன். இப்போது நாம் உம்மைக்குறித்துச் சொன்னது எல்லா ஸம்ஸாரிகளுக்கும் பொது என்பதை அறிவீராக.

येऽर्था: प्रोक्तास्तान् स्वयं विप्रवर्य

श्रुत्वैवत्वं धूतपाप: स्वभक्त्या

विष्णोस्सम्यक् तत्परं धामयाहि

वीक्षारण्ये भोगितल्पे शयिष्णो: ।।१८।।

தேவபாகரே! உமக்கு நம்மாலே எந்தெந்த அர்த்தங்கள் சொல்லப்பட்டனவோ அவற்றை பக்தியோடு கேட்டுக் கொண்டு அந்தபாவநங்களான அர்த்தங்களுடைய ச்ரவண மநநாதிகளாலே நீர் எல்லாவிதமான ஸந்தேஹங்களையும் போக்கிக் கொண்டவராய், வீக்ஷாரண்யத்தில் ஆதிசேஷனுகிற திருப்பள்ளிமெத்தையில் கண்வளர்ந்தருளுகின்ற ச்ரிய:பதி யினுடைய ப்ரஸித்தமாயும் பரமபதத்தைக்காட்டிலும் இனியதாயுமுள்ள திவ்யக்ஷேத்ரத்தை அடையக்கடவீர்.

श्रुणुयादिह योभक्त्या संवादमिममावयो:

पुत्रपौत्रैस्स सहितो मृत्युं तरति मानव: ।।१९ ।।

நம்மிருவருடையவும், வினுவிடை வடிவிலுள்ள உரையாடலை எவன் பக்தியோடு இந்த உலகில் கேட்கிருனே அவன் பிள்ளைபேரன்களோடு கூடியவனுய் இங்கே சுகமாய்

வாழ்ந்து தேஹத்தின் முடிவில் ஸம்ஸாரத்தை கடந்து மோக்ஷம் பெறுவன்.

य इदं श्रावयेन्नित्यं ब्राह्मणान्वेदपारगान्

भक्तानन्यान्महीपालान् श्रद्धधानान्महीतले।।२०।।

पौर्णमास्याममायां वा द्वादश्यां वा विशेषत:

विषुवेह्ययनेचैव राहुदर्शे तथैवच

श्रावयेच्छ्राद्धकालेतु सयाति परमांगतिम् ।।

இம்மண்ணுலகில் எந்த பௌராணிகன் வேதமறிந்தவர் களாயும், பகவானிடத்தில் ஒப்பற்ற பக்தியுள்ளவர்களாயுமுள்ள ப்ராம்மணர்களேயும், சிரத்தையுள்ள க்ஷத்ரியர்களேயும் பௌர்ணமியிலோ, அமாவாசையிலோ, த்வாதசியிலோ, சித்திரை, ஐப்பசி மாதபிறப்பு ஸமயங்களிலோ க்ரஹண காலத்திலோ இந்த புண்யாவர்த்தக்ஷேத்ரமாஹாத்ம்யத்தை கேட்கச் செய்கின்றனோ ச்ராத்தகாலத்தில் ப்ராம்மணார்த்தக் காரர்கள் சாப்பிடும்போது கேட்பிக்கின்றனோ அந்த கேட்பிக்கின்ற பௌராணிகன் உத்தமகதியை அடைவான்.

यइदं श्रुणुयान्नित्यं भक्ति युक्तेनचेतसा

सविमुक्त श्शुभान्लोकान् प्राप्नुयात्पुण्यकर्मणाम् ।।

இந்த மாஹாத்ம்யத்தை எப்போதும் பக்தியுடன் கூடியமனத்தனராய் எவன் கேட்கின்றனே, அவன் எல்லா ஆபத்துக்களினின்றும் விடுபட்டவனுய் மகாபுண்யசாலிகளான மஹர்ஷிகளது மங்களமான லோகங்களே அடைவான்.

स्त्रियश्शूद्रास्तथैवान्ये भक्तिमन्तश्च येनरा: ।

ते चास्यश्रवणादेव मुच्यन्ते सर्वपातकै:

பெண்களோ, சூத்ரர்களோ மற்ற எந்த மனிதர்களானுலும், பக்தியுடன் கேட்கின்றூர்களோ அவர்களும் இந்த மாஹாத்ம்யத் தைக் கேட்டமாத்ரத்தினுலே எல்லா பாபங்களிலிருந்தும் விடுபடுவார்கள்.

अध्यायं पठतेयस्तु माहात्म्येऽस्मिन् शुचिव्रतः ।।

दशाश्वमेधिनः पुण्यं प्राप्नुयान्नात्र संशयः ।

எவன் சுத்தவ்ரதமுடையவனுய் இந்த புண்யாவர்த்த க்ஷேத்ரமாஹாத்ம்யத்தில் ஒரு அத்யாயம் படிக்கின்ருனே அந்த புருஷன் பத்துத்தடவை அச்வமேதயாகம் பண்ணின பலனை அடைவான். இதில் ஸந்தேஹமில்லை.

श्लोकञ्च यस्तु पठति सकृद्भक्तियुतो नरः ।।२५ ।।

सब्रह्मणःस्थानमेत्य मोदते द्विजसत्तमः ।

எவன் சிறந்த பிராமணனுயும் பகவானிடத்தில் பக்தி மிகுந்தவனுயும் இருக்கின்ருனே அவன் இந்த மாஹாத்ம்யத்தில் ஒரு சுலோகத்தையாவது ஒருமுறையாவது படிக்கிருனே அவன் நான்முகன் உலகத்தை அடைந்து பேராநந்த முற்றிருப்பான்.

पादमात्रं पठेद्यस्तु तत्रैकाक्षरमेववा।।२६।।

ऐन्द्रलोकमुपागम्य भवेदिन्द्रेणपूजितः ।

எவன் இந்த மாஹாத்ம்ய ச்லோகத்தில் ஒரு பாதமோ ஒரு அக்ஷரமோ படிக்கின்ருனே அவன் இந்திரலோகத்தை அடைந்து இந்திரனுலே பூஜிக்கப்படுவான்.

महात्म्यमेतत्तु मया नारदस्य सकाशतः।।२७।।

श्रुतं सोपि ब्रह्मणस्तु श्रुतवान्वैष्णवोत्तमः।

இந்த புண்யாவர்த்தமாஹாத்ம்யத்தை நான் நாரதரிடம் கேட்டேன். பாகவதோத்தமரான ஸ்ரீநாரதபகவானும் அனைத்துலகையும் படைத்தவராயும், எல்லாவித்தைகளையும் தோற்றுவித்தவருமான ப்ரம்மமாவினிடத்தில் கேட்டார்.

वीक्षारण्य निवासस्य विष्णोर्माहात्म्यमुत्तमम्।।२८।।

गृहेवसति यस्यैतत् सर्व पापैः प्रमुच्यते ।

இந்த புண்யாவர்த்தக்ஷேத்ரமாஹாத்ம்யம் என்னுலே நாரதரிடமிருந்து கேட்கப்பட்டது. பாகவதோத்தமரான ஸ்ரீநாரதபகவானும் ப்ரம்மாவினிடமிருந்து கேட்டருளினுர்.

ஸ்ரீவீக்ஷாரண்யவாசியான ஸ்ரீவீரராகவனுடைய உத்தமமான மாஹாத்ம்யத்தின் புஸ்தகம் யாருடைய வீட்டிலிருக்கிறதோ அந்த புருஷனும் எல்லா பாபங்களிலிருந்தும் விடுபடுகிருன்.

आयुष्यमेतद्विख्यातं पुण्यं पुत्रयशस्करम्।।२९।।
यस्तुधारयते भक्त्या सनित्यं श्रियमाप्नुयात्।

ஆயுஸ்ஸை வளர்ப்பதாயும், ஜகத்ப்ரஸித்தமாயும், புனிதமாயும், நன்மக்களைத்தருவதாயும், புகழைத்தருவதாயுமுள்ள இந்த வீக்ஷாரண்ய மாஹாத்ம்யத்தை எவன் பக்தியோடு புஸ்தகமில்லாமலேயே மனப்பாடமாக பாராயணம் பண்ணிக்கொண்டுவருகிருனே அவன் எப்போதும் ஸம்பத்தை அடைவான்.

**இதி மார்கண்டேய புராணே க்ஷேத்ரகாண்டே**
**வீக்ஷாரண்ய மாஹாத்ம்யே யோககதநம் நாம**
**தசசததமோऽத்யாய:**

**ஸ்ரீ:**



**ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹபரப்ரஹ்மணே நம:**
**ஸ்ரீவீக்ஷாரண்யக்ஷேத்ரமாஹாத்ம்யே ஏகாதசோऽத்யாய:**

एवमुक्त्वातु विरते शालिहोत्रे महामुनौ
देवभागस्तु धर्मात्मा वीक्षारण्यस्य वैभवम्।।१।।
पुण्यावर्ताह्वयस्यापि क्षेत्रस्य परमाद्भुतम्
हृत्तापनाशनस्यास्य तीर्थस्य महतः परम्।।२।।
माहात्म्यं शालिहोत्रोक्तं श्रुत्वा विस्मयमागतः।

எல்லா முனிவர்களிலும் சிறந்தவரான ஸ்ரீசாலிஹோத்ர பகவான் இதுவரை அருளிச்செய்தபோது தர்மாத்மாவான தேவபாகர் வீக்ஷாரண்யத்தின் வைபவமிருந்தபடியையும், புண்யாவர்த்தமென்கிற க்ஷேத்ரத்தினுடைய அத்யத்புதமான மாஹாத்ம்யமிருந்தபடியையும், பூமண்டலத்தில் மஹத்தான ஹ்ருத்தாபநாசநதீர்த்தத்தினுடைய மாஹாத்ம்யம் இருந்தபடியை யும் ஸ்ரீசாலி ஹோத்ரபகவான் அருளியபடியே கேட்டுமிகவும் வியந்தார்.

ततोविचिन्त्य समुनिः वीक्षारण्यं ययौ तदा ।३ ।।
हृत्तापनाशनेस्नात्वा तत्तीरे तपसिस्थितः।
कालेनमुक्तिमगमत् तत्स्थानस्य प्रभावतः।।४।।

பிறகு அந்த தேவபாகர் சாலிஹோத்ரபகவான் அருளிய அர்த்தங்களையெல்லாம் நன்கு மனனம் பண்ணிக்கொண்டு அவர்சொன்னபடியே செய்யத்தக்கதென்று நிச்சயித்து அப்போதே பிரயாணப்பட்டு வீக்ஷாரண்யத்துக்குச் சென்றார். அங்கே ஹ்ருத்தாபநாசநதீர்த்தத்தில் நீராடி அநுஷ்டானம் பண்ணியபிறகு அத்தீர்த்தத்தின் கரையிலேயே ஆச்ரமத்தை

அமைத்துக்கொண்டு தவத்தில் ஈடுபட்டவராயிருந்தார். அந்த க்ஷேத்ரமாஹாத்ம்யத்தால் தேஹம் மறைந்தபிறகு மோக்ஷத்தை அடைந்தார்.

शालिहोत्रो महातेजा: वीक्षारण्य प्रभाववित्
विष्णु सायुज्यकांक्षीतु तपसेकृतनिश्चय :।।५।।
वीक्षारण्यं ययौ योगी भक्तानामग्रणीर्हरौ ।

மஹாதேஜஸ்வியாய் வீக்ஷாரண்யத்தின் பெருமையை உள்ளபடி அறிந்தவராய், பகவானது ஸாயுஜ்யம் ஆகிய மோக்ஷத்தில் ஆசையை உடையவராகையாலே பக்தி பண்ணவேண்டுமென்று நிச்சயித்தவராய் எப்போதும் யோகத்தை அநுஷ்டிப்பதில் ஈடுபட்டவராய் திருமாலினிடத்தி லுள்ள பக்தியுள்ளவர்களுக்குள்ளே தலைவராயுமுள்ள ஸ்ரீசாலிஹோத்ரபகவானும் வீக்ஷாரண்யத்தை நோக்கி நித்யவாஸம் பண்ணஎழுந்தருளினார்.

सहस्रानीक:

இப்படி தாம் கேட்ட கேள்வியான அர்த்தத்துக்கு ஸமம் ஆகையினாலே ஸ்ரீமார்க்கண்டேயபகவானாலே உரையாடலாக அருளிச்செய்யப்பட்ட சாலிஹோத்ரருக்கும் தேவபாகருக்கும் இடையே நிகழ்ந்த உரையாடல் முழுவதையும் கேட்ட ஸஹஸ்ராநீக மஹாராஜன், ஸ்ரீசாலிஹோத்ரபகவானுடைய அவதாரத்தையும், அவரிடம் ஸ்ரீவீரராகவன் க்ருபை செய்த விசேஷங்களையும் ஸ்ரீமார்கண்டேயர் வாயாலே கேட்கவேண்டும் என்ற ஆசையினாலே வினவுகிறார்.

मार्कण्डेय महाभाग शालिहोत्रस्य संभवं
माहात्म्यमपि तन्मुक्तिं वद मे करुणानिधे ।

மஹாபாக்யசாலியாய் தயாநிதியாய் உள்ள ஸ்ரீமார்கண்டேயமஹாமுனிவரே! ஸ்ரீசாலிஹோத்ரபகவானுடைய அவதாரத்தையும், பெருமாள் அவருக்கு மோக்ஷம் அருளியவிதத்தையும் அடியேனுக்குச் சொல்லியருளவேணும்.

मार्कण्डेय:

पुरा कृतयुगे राजन् पुण्ये बदरिकाश्रमे।।७।।
पुरुपुण्य इतिख्यातः तपस्वी पुण्यवान् स्थितः।
तस्य पत्नी सत्यवती नाम्ना सत्युपमागुणैः।।८।।
यस्याः शुश्रूषया विप्रः परमानन्दमेयिवान्

ஸஹஸ்ராநீக மஹாராஜரே! முன் க்ருதயுகத்தில் புனித மான பதரிகாச்ரமத்தில் புருபுண்யர் என்று மகாபுண்ணிய சாலியாய் ஜகத்ப்ரஸித்தராய் ஒரு தபஸ்வி இருந்தார். அவரது மனைவி ஸத்யவதி என்னும் பெயருடையவளாய் குணங்களாலே ஸதிதேவிக்குச் சமமானவள். அந்த ஸத்யவதியினுடைய பணிவிடையினாலே புருபுண்யமஹர்ஷி பேரானந்தம் கொண்டி ருந்தார். यत्रानुकूल्यं दम्पत्योः त्रिवर्गस्तत्रनिष्ठितः என்றன்றோ ப்ரமாணமிருப்பது.

ततः कालेच महति पुरुपुण्य स्सदग्रणीः।।९।।
नलेभेसुचिरं पत्न्यां पुत्रं गोत्र विवर्धनम्।
पुत्रार्थं चिन्त्यमानस्य पुरुपुण्यस्यचेतसि।।१०।।
शालि यज्ञेन विधिना पुत्रप्राप्तिरितिस्थितम्।

பின்னர் நெடுங்காலம் கடந்த பின்னரும் ஆசாரத்தில் குறையாமலிருக்கிறபடியால் ஸத்துக்களுக்குத் தலைவரான புருபுண்யமஹர்ஷிக்கு அந்த பக்தியினிடத்தில் வம்சவ்ருத்திக் குக் காரணமான புத்ரன் நெடுங்காலமாகக் கிட்டவில்லை. அப்படி ஸந்தானமில்லாததால் புத்ரப்ராப்திக்கான உபாயத்தை ப்ரமாணங்களைக்கொண்டு பரிசீலிக்கும்போது அந்த புருபுண்யருடைய மனதிலே காம்யார்த்த கல்பசாஸ்த்ரத்தை பரிசீலிக்கும்போது நெல்லைக்கொண்ட ஹோமம் பண்ணுவதால் புத்ரன் கிட்டுவான் என்று தோன்றியது.

ततः शुभदिने यज्ञे प्रारब्धे तेनशालिभिः।।११।।
अष्टाविंशति संख्याभिरेकाहुत्युपसंख्यया

आहुतीनां सहस्रंतु प्रत्यहं वत्सरावधि।।१२।।
सजुहोति महाज्वाले ज्वलने विधिवन्मुनिः।

அதன்பின் அந்த சாஸ்த்ரத்திலே சொல்லியமுறைப்படி மங்களமான திதியும், கிழமையும் கூடிய நாளிலே ''ஏகம் வா ஏதத்தேவாநாமஹ:'' என்கிறபடியே தேவர்களுக்கு ஒருநாளான மனிதர்கள் கணக்கில் ஒருவருஷகாலம் இந்தயஜ்ஞத்தை நடத்தக்கடவோமென்று ஸங்கல்பித்துக்கொண்டு ஆரம்பித்தார். அந்த சாலியஜ்ஞத்தில் இருபத்தெட்டுநெல்லாலே ஒரு ஆஹுதி என்கிற கணக்கில் நாள்தோறும் ஆயிரம் ஆகுதி பண்ணினார். அந்த புருபுண்யமுநிவிதிப்படி அங்கோபாங்கத் துடன் மஹாஜ்வாலைகளோடு விளங்குகின்ற அக்னியிலே ஒருவருஷகாலம் ஹோமம் பண்ணிக்கொண்டிருந்தார்.

वत्सरान्तदिने होमे प्रज्वलज्वलनान्तरे।।१३।।
श्रीपतिः प्रादुरभवत् चंखचक्रगदाधरः।
कालमेघप्रभः श्रीमान् पीतवासाजनार्दनः।।१४।।
पुण्डरीकेक्षणः साक्षात् सर्वाभरणभूषितः।
मेघ गंभीरयावाचा प्रोवाचचमुनीश्वरम्।।१५।।
भो मुनेऽति प्रसन्नोऽस्मि वृणीष्व वरमुत्तमम्।

இப்படி நாள்தோறும் சாலி(நெல்)ஹோமம் நடந்து கொண்டிருக்கும்போது வருஷக்கடைசிநாளில் க்ரமமாக ஹோமம் முடியும்தருவாயில் பூர்ணாகுதி செய்யப்பட்டது. ஜ்வலித்து நிற்கிறஹோமாக்னியிலிருந்து சங்கு சக்ரம் கதை இவற்றுடன் கூடியவராய் ''தூநீர்முகில்போல் தோன்றாயே'' என்கிறபடியே நீருண்டகார்மேகம்போன்றஒளியுடையவராய், மார்பில் தமக்கேஉரிய ஆபரணம் போன்ற ஸ்ரீமஹாலக்ஷ்மியை உடையவராய், ஒப்பற்ற திருப்பரியட்டமுடையவராய், ஆச்ரயித்த பக்தர்களாலே அந்தந்த புருஷார்த்தங்களுக்காக யாசிக்கப்பட்டவராய், கரியவாகிப்புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப்பெரியவாயகண்களை உடையவராய், ஊனக்கண்ணாலும் காணும்படிப்ரத்யக்ஷமாக உள்ளவராய்

''பலபலவே ஆபரணம்'' என்கிறபடி கிரீடம் முதல் திருவடியிலுள்ள சலங்கை ஈருக பலவிதமான ஆபரணங்க ளாலே அலங்கரிக்கப்பட்டவராய், திருமால் தோன்றினார். புருபுண்யமுநிவரே! நாம் பெரிதும் மகிழ்ந்தோம். நீர் விரும்பும் வரத்தைக் கேட்பீராக என்று மேகத்தின் ஒலியைப்போன்று கம்பீரமான வாக்கினாலே புருபுண்யரைப்பார்த்து அருளிச் செய்தார்.

इत्युक्तस्तुष्टहृदयः साष्टाङ्गं प्रणमन् द्विजः।१६।।

वाचागद्गदया वाचं उवाच पुरुषोत्तमम् ।

இப்படி பகவானாலே நியமிக்கப்பட்ட புருபுண்யமகர்ஷி மகிழ்ந்தமனத்தராய், ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்து பக்த்யதிசயத் தாலும், பெருமகிழ்ச்சியினாலும் தழுதழுத்த குரலுடையவராய் பகவானைப் பார்த்து இவ்வாறு விண்ணப்பித்தார்.

जगन्नाथ सुपुत्रस्य प्राप्त्यै यत्नः कृतोमया।।१७।।

इति तेनार्थितो देवः पुत्रस्तेस्तु तथाविधः

उक्त्वैवमब्रवीद्विप्रं पुत्रश्शालि मखोद्भवः।।१८।।

शालिहोत्र इति ख्यातः नाम्ना भवतु सत्तमः

उक्त्वान्तर्धान मगमत्परमेशस्सनातनः।।१९।।

ஜகந்நாத! நல்ல புதல்வனை அடையவேண்டுமென்கிற ஆசையினாலே இந்த சாலியாகத்தைப்பண்ணினேன் என்று பிரார்த்தித்தார். பெருமாளும் புருபுண்யரே! உமக்கு உத்தமமான புத்ரன் உண்டாகப்போகிறான். நீர் சாலியஜ்ஞம் பண்ணியதனால் உண்டாகப்போகிற உமது புதல்வன் ''சாலிஹோத்ரன்'' என்ற பெயரால் ப்ரஸித்தனாய் சாதுஜனங்களாலே கொண்டாடப் படுவான் என்று புருபுண்யரைக் குறித்து மீண்டும் அருளிச் செய்தார். இவ்வாறு சொல்லிவிட்டு ஸர்வலோகேச்வரரான புராணபுருஷன் மறைந்துவிட்டார்.

होमकालेऽनलाद्बाह्यं गतान् लाजान्समूह्यच ।

गृहीत्वाञ्जलि मात्रान्वै श्रीपतेर्वचनान्मुनिः।।२०।।

ददौ स्वपत्न्यै पुत्रार्थं मुदा साऽभक्षयत्सती ।

गर्भं दधौ च तां दृष्ट्वा पुरुपुण्यो मुदं.दधौ।।२१।।

பிறகு புருபுண்யர் பகவானது நியமனத்தினுலே ஹோமம் பண்ணியபோது அக்னியிலிருந்த வெளிப்புறத்தில் சிதறின பொரிகளைத்திரட்டி எடுத்து இருகைப்பிடியளவு புதல்வன் பொருட்டு தமது மனைவிக்குக் கொடுத்தார். பதிவ்ரதையான அவள் கணவர் அநுக்ரஹித்துக்கொடுத்த பொரிகளை பக்தியுடன் வாங்கிச்சாப்பிட்டாள். அதுமுதல் கர்ப்பமானுள். கருவுற்ற தம்மனைவியைக்கண்டு புருபுண்ய மஹர்ஷி பெருமகிழ்ச்சியடைந்தார்.

दशमे मास्यजनयत्सती पुण्यपरायणा

सा पुत्रन्त्वति दीर्घाश्च जटाः प्रागूर्ध्व पुण्ड्रकम्।।२२।।

बिभ्राणं बहुतेजस्कं तं दृष्ट्वा मुदितः पिता ।

जातकादिव्रतान्ताश्च क्रियाश्चक्रे क्रमेणवै।।२३।।

''புண்யாநாமபிபுண்யோSஸௌ'' என்கிறபடி புண்யதம னை பகவானையே பரமப்ராப்யனுகவும் பரமோபாயமாகவும் நம்பியிருக்கின்ற பதிவ்ரதையான புண்யபுருஷனுடைய மனைவி பத்தாவது மாதத்தில் மிகநீண்ட ஜடைகளையும், தெளிவாகத் தெரியக்கூடிய ஊர்த்வபுண்ட்ர ரேகையையும், பெருந்தவத்த ரென்றும், பரமபாகவதர் என்றும் உலகுக்குத் தெரிவதற்காக பகவதநுக்ரஹத்தினுலே மிக்க ஒளிவீசித்திகழக் கூடிய புத்ரனைப் ப்ரஸவித்தாள். இத்தகைய புதல்வனைக் கண்டு பெருமகிழ்ச்சி யுற்ற தந்தையான புருபுண்யர் முறைப்படி ஜாதகர்மம், நாமகரணம், அந்நப்ராசனம், சௌளம் உபநயநங்களையும், ப்ராஜாபத்யஸௌம்ய ஆக்நேயவைச்வ தேவம் ஆகிய பெயர்கள் கொண்ட வ்ரதங்களையும் அநுஷ்டிப்பித்தார். பின்னர் ஸ்நாதக வ்ரதத்தையும் அநுஷ்டிப்பித்து லக்ஷணமான கன்னிகையைத் திருமணம் செய்வித்தார்.

शालिहोत्रोपिमेधावी त्रिकालज्ञोऽभवन्मुनिः

पित्रोरग्रेतपः कुर्वन् तच्छुश्रूषुरुवासह।।२४।।

ஸ்ரீசாலிஹோத்ரமுனி புகழ்பெற்ற மேதாவியாயும், முக்காலமும் உணர்ந்தவராயும் எழுந்தருளியிருந்தார். மேலும் மாதாபிதாக்களுக்கு அருகிலிருந்து கொண்டு சுச்ரூஷை செய்துகொண்டு தவமும் செய்துவந்தார்.

कालेन देवभागो ऽपि शालिहोत्रेणसंगत:

संवादश्चापि पूर्वोक्त: कथायास्समजायत।।२५।।

காலவிசேஷத்தில் தேவபாகரும் சாலிஹோத்ரபகவானேடு சேர்ந்தார். இருவரும் அப்போது ஒருவருக்கொருவரிடையே வினுவிடை வடிவில் ஸம்வாதம் (உரையாடல்) உண்டாயிற்று.

सहस्रानीक:

मार्कण्डेय कथाशेषं शालिहोत्रस्य पावनम्।

वक्तुमर्हस्यशेषेण श्रोतुं कौतूहलं हि मे।।२६।।

மார்கண்டேய பகவானே! ஸ்ரீசாலிஹோத்ரமஹர்ஷியினுடைய புனிதமான கதைமுழுவதையும் சொல்லவேணும். அதைக் கேட்கவேண்டுமென்ற ஆவல் எனக்கு மிகுதியாயுள்ளது.

मार्कण्डेय:

पवित्रश्सालिहोत्रर्षि: ततो वीक्षावनं ययौ।

विष्णु सायुज्यकांक्षीतु तपसे कृतनिश्चय:।।२७।।

हृत्तापनाशन सरस्तापत्रय हरं परम्।

दृष्ट्वा मनस्सुप्रसन्नं तत्रर्षेस्समजायत।।२८।।

பாவநசரித்ரரான ஸ்ரீசாலிஹோத்ரமஹர்ஷி பகவானது ஸாயுஜ்யமாகிய மோக்ஷத்தில் ஆசையுடையவராய், அதற்காக கர்மயோகஜ்ஞானயோகத்தினுல் உண்டான பக்தியோகாநுஷ்டாநம் அவச்யம் என்ற நிச்சயமுடையவராய், அந்த பதரிகாச்ரமத்தினின்றும் வீக்ஷாரண்யத்துக்கு எழுந்தருளினுர். அதில் ஸமஸ்த ஜநங்களுடையவும் ஆத்யாத்மிகம் முதலிய மூன்று தாபங்களேயும் தன்னே தர்சித்தமாத்ரத்தில் போக்கக்கூடிய

ஹ்ருத்தாபநாசம் என்கிற ஸரஸ்ஸைப் பார்த்தமாத்ரத்தில் மஹர்ஷியின் மனம் மிகவும் தெளிந்து மகிழ்ச்சியுற்றதாயிருந்தது.

तत्प्रदेशं गते तस्मिन् शकुनानि शुभानिवै।

बहून्यासन् सुकृतिनां सर्वं भवति शोभनम्।।२९।।

ஸ்ரீசாலிஹோத்ரமஹர்ஷி ஹ்ருத்தாபநாசநதீர்த்தக் கரைக்குவரும்போது வலக்கண்துடிப்பு, வலத்தோள்துடிப்பு, வலத்தொடைதுடிப்பு, ''பக்ஷீச சாகாநிலயம் ப்ரஹ்ருஷ்ட: புந:புநஸ்சோத்தமஸாந்த்வவாதீ– ஸுஸ்வாகதாம் வாசம் உதீரயாந: புந:புநஸ்சோதயதீவஹ்ருஷ்ட:'' என்கிறபடியே கருடபக்ஷியினுடைய தர்சநம் இவை முதலான பலசுப சகுனங்கள் உண்டாயின. புண்யசாலிகளுக்கு இவையனைத்தும் சுபஸூசக மாகவன்றோ இருக்கின்றது. ''நிற்கின்றதெல்லாம் நெடுமால்'' என்றும், ''சராசராணிபூதாநி ஸர்வாணி பகவத்வபு:। அதஸ் ததாநுகூல்யம் மேகார்யமித்யேவமே மதி:। ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம। தஜ்ஜலாநிதிசாந்த உபாஸீத।'' என்கிறபடியே எல்லாம் ப்ரம்மாத்மகம் என்று அநுஸந்தித்து அவனுக்கு அநுகூலமான கார்யங்களே நாம் செய்யத்தக்கதாகும் என்று எண்ணுகின்ற ஸத்துக்களுக்கு எல்லாமே द्रक्ष्यामि नूनं सुकपोलनासिकं स्मितावलोकारुणकंजलोचनम् मुखं मुकुन्दस्य गुडालकावृतं प्रदक्षिणं मे प्रचरन्त्यमीमृगा: என்கிறபடியே ப்ரதக்ஷிணமாக அல்லவா இருக்கிறது.

देवयोगेन च तदा पौष्यो दर्शस्समागत:

स्नातुं तत्समये तस्मिन् हृदे परमपावने।।३०।।

हृत्तापनाशनेतीर्थे ददर्श स समागतान्।

ब्रह्मादि देवतावर्यान् भृग्वादीन्मुनिपुङ्गवान्।।३१।।

गायत्त्र्यरुन्धतीमुख्या देवी रप्सरसस्तथा।

नारदादीनपिमुनीन् नरनारीस्समन्तत:।।३२।।

दिविभूमौ चतान् दृष्ट्वा विस्मयं परमंगत:।

பகவத்ஸங்கல்பத்தாலே ஸ்ரீசாலிஹோத்ரபகவான் என்றைக்கு எழுந்தருளினரோ அன்றையதினம் தை அமாவாசை வந்து சேர்ந்தது. அந்த ஸமயத்தில் தேவகாதமாயும், பரமபாவநமாயும் மஹர்ஷிகள் தீர்த்தம் ஸாதித்தருளினதானபடி யாலே यत्र भागवतास्स्नान्ति तद्वै परमपावनं என்கிறபடியே புண்யதீர்த்தமென்று ப்ரஸித்தமான ஹ்ருத்தாப நாசந ஸரஸ்ஸிலே நீராடவந்துள்ள ப்ரம்மா முதலான தேவச்ரேஷ்டர் களையும், ப்ருகு முதலிய சிறந்த மஹர்ஷிகளையும், காயத்ரி, அருந்ததி முதலான தேவபத்நிகளையும், ரம்பை ஊர்வசி முதலான அப்ஸரஸ்ஸுக்களையும், நாரதர் முதலிய தேவர்ஷிகளை யும், கணக்கற்ற மானிடர்களையும், மானிடப்பெண்களையும் வானத்திலும் பூமியிலும் கண்டு மிகவும் ஆச்சர்யப்பட்டார்.

शालिहोत्रः क्वचित्स्थित्वा वीक्ष्यविस्मितमानसः।।३३।।
अहोतीर्थस्य माहात्म्यं वक्तुं ब्रह्मादयोपिच
न शक्तस्ते महात्मानः किंपुनस्त्वितरेजनाः।।३४।।
इति सञ्चिन्त्य मतिमान्सायंकाले तदापुनः
किञ्चिच्च विरले तीरे तीर्थस्योत्तर दिग्गतः।।३५।।
स्नात्वा सरस्यां विधिवत् गृहीतनियमः परम्
कृत्वानुष्ठान जातंच तर्पयित्वा सुरानृषीन्।।३६।।
पितॄनपियथान्यायं तत्सरो वारिणा ततः
मौनव्रतं समास्थाय दृढासनपरिग्रहः।।३७।।
संकल्प्यवत्सरं सोऽथ निराहारो महातपाः
संवत्सरं व्रतन्त्वेवं कुर्वन् कृत्वा परन्तपः।।३८।।
कालं नयंश्चिरतरं बभूवच महाकृशः।

ஹ்ருத்தாபநாசநதீர்த்தக்கரையில் ஓரிடத்திலிருந்து கொண்டு நான்கு திக்கிலும் எள்விழக்கூட இடமில்லாத மக்கள் பெருவெள்ளத்தைக்கண்டு ஆச்சர்யப்பட்டார். என்ன ஆச்சர்யம்!

இந்த தீர்த்தத்தின் பெருமையை சிறந்த ஞானிகளான ப்ரம்மா முதலானவர்களும் முழுதும் சொல்ல சக்தியற்றவர்களாவர். அப்படியிருக்க மற்ற மக்கள் இதன் பெருமையை எப்படி அறியப்போகிருர்கள்? என்று மஹாபுத்திமானுன சாலிஹோத்ரர் ஆலோசித்துக்கொண்டிருந்தார். அந்த அமாவாசையன்று மாலேயில் தீர்த்தக்கரையில் ஜநசந்தடியின்றி இடைவெளி ஏற்பட்டதும், வடக்கே வீற்றிருந்து ஆசமநம் ஸங்கல்பம் முதலிய அங்கங்களோடே ஹ்ருத்தாபநாசனத்தில் மௌனம் முதலிய நியமங்களோடு நீராடியபின் மாத்யான்னிகம் ஸந்த்யாவந்தனம் முதலானவற்றை அநுஷ்டித்து அந்த தீர்த்தத்திலுலே முறைப்படி தேவர்ஷிபித்ருதர்பணங்களேச் செய்தார். தர்ப்பம் மான்தோல் வஸ்த்ரம் ஆகிய ஆஸநத்தில் வீற்றிருந்து மௌனவ்ரதம் மேற்கொண்டு ஓராண்டுக்காலம் தவம் செய்வதாக ஸங்கல்பித்துக்கொண்டார். மஹாதபஸ்வியான சாலிஹோத்ரர் அன்று முதல் ஆஹாரமின்றி ஒருவருஷம் முழுதும் ஆகாரமின்றி மௌனவ்ரதம் பூண்டு கடினமான தபஸ்ஸைப் பண்ணிஞர். நீண்டகாலம் தவம் செய்தபடியால் சரீரம் மிகவும் இளேத்தவராஞர்.

काले गते बहुतिथे पौष्यमा पुनरागता।।३९।।
कल्याणी कामदापुंसां स्नातानां तत्सरोवरे।
स्नातुं सर्वे समायाताः ब्रह्माद्याः पुनरेवहि।।४०।।
नेत्रयोरुत्सव करान् जनान् परमपावनान्।
स्नातान् स्नात्वागतान् स्नातुमागतानपि मानवान्।।४१।।
नारीश्च पुण्यास्सानन्दः शालिहोत्रो निरीक्ष्यवै।
प्रातरेव समारभ्य व्रीहीनुञ्छी कृतान् द्विजः।।४२।।
प्रसृतित्रयमात्रन्तु तण्डुलीकृत्यकृत्यवित्
अनुष्ठानं समाप्याशु व्रतपूर्तिं विचिन्त्यवै।।४३।।
पावने विजने देशे पाकं कृत्वा सुखेनच

संपूजिताय विधिवद्धरये परमात्मने ।।४४ ।।
समर्प्य मन्त्र विच्चान्नं संस्कृतं तेन तत्ववित्
वैश्वदेवादिकं कृत्वा तत्प्रसादान्नमद्भुतम् ।।४५ ।।
कृत्वातु च तुरो भागान् एकञ्चातिथि भागकम्
कृत्वाऽतिथेरागमनं पालयंश्चस्थित: क्षणम् ।।४६ ।।

இப்படிபலகாலம் கடந்தபின் ஹ்ருத்தாபநாசந தீர்த்தத்தில் ஸ்நாநம் பண்ணினவர்களுக்கு விரும்பியவற்றை யெல்லாம் தரக்கூடியதான மங்களகரமான தைஅமாவாசை திரும்பிவந்தது. முன்போலேவே அதில் நீராடுவதற்காக ப்ரம்மா முதலான ஸமஸ்த தேவதைகளும் வந்தார்கள். கண்ணுக்கு ஆநந்தத்தை அளிப்பவர்களாயும், பரமபாவநர்களாயும் ஸ்நாநம் பண்ணப்போகின்றவர்களாயுமுள்ள ஜநங்களையும், புண்யசாலி களான ஸ்த்ரீகளையும் பார்த்து பேராநந்தமுற்றூர். அன்றையதினம் காலைமுதல் பொறுக்கிச் சேர்த்த நெல்லுகளை மூன்று கை அரிசிகளாக்கி வைத்துக்கொண்டார். செய்ய வேண்டிய கர்மங்களை அநுஷ்டிக்கும் ஜ்ஞாநம்மிக்கவரான சாலிஹோத்ர மஹர்ஷி மாத்யான்னிகமாகிய கர்மாநுஷ்டானத்தை முடித்துக் கொண்டு ஒருவருஷகாலமாக அநுஷ்டித்த மௌனவ்ரதம் ஆஹாரமின்மை ஆகிய வ்ரதங்களை முடித்துக் கொள்ள எண்ணி பாரணம் பண்ண நிச்சயித்தவராய் ஜனசந்தடி இல்லாத சுத்தமான இடத்தில் முன்பு சேகரித்த அரிசியை சிரமமின்றி பக்வம் செய்து, தத்த்வத்தை அறிந்தவரும் எல்லா மந்த்ரங்களை அறிந்தவருமான சாலிஹோத்ரர் ஸ்ரீபாஞ்சராத்ரத்திலே சொல்லப்பட்ட விதிப்படி பகவானுக்கு திருவாராதனம் பண்ணி ஸர்வாந்தர்யாமியான ச்ரிய:பதியின் பொருட்டு பக்வம் செய்யப் பட்ட அந்த ஹவிஸ்ஸை ஸமர்ப்பித்தார். பிறகு வைச்வதேவத் தையும் பஞ்சமஹாயஜ்ஞங்களையும் அநுஷ்டித்து வைச்வதேவ விசிஷ்டமான அத்புதமான அந்த அன்னத்தை தமக்கும் மனைவிக்கும் மகனுக்கும் மருமகளுக்குமாக நான்கு பாகமாக்கி ஒருபாகம் அதிதிக்காகவும் வைத்தார். அதிதியின் வருகையை எதிர்பார்த்து சற்றுநேரம் வீற்றிருந்தார்.

तत्रान्तरे हरिस्साक्षात् वृद्धब्राह्मण रूपधृत्

दण्डी कमण्डलु धरश्छत्रवान् पादुके उभे ।।४७।।

विन्यस्य पादयोर्मन्दगतिः श्रान्तइवाधिकम्

गत्याच दूरतः खिन्नः क्षुधाचापि पिपासया ।।४८।।

शालिहोत्रेण सन्दृष्टः दरिद्रेणनिधिर्यथा ।

அப்போது பகவான் எண்பதுவயதுகிழட்டு ப்ராம்மண சரீரத்தை தரித்தவராய் இடதுகையில் தண்டமும் குடையும் ஏந்தியவராய் வலது கையில் தீர்த்த பாத்திரத்தை தரித்தவராய் இருதிருவடிகளிலும் இரண்டுபாதுகைகளை தரித்தவராய் மிகவும் சிரமப்பட்டவர்போலே தள்ளாடிய நடையுடையவராய் வந்தார். வெகுதூரத்தினின்றும் வருவதால் பசியினுலும் தாகத்தினுலும் மிகவும் களைப்பு தோன்றவந்தார். அவரைக்கண்ட சாலிஹோத்ரபகவான் தரித்ரன் பெருஞ் செல்வத்தைக் கண்டாற்போலே காணப்பட்டார்.

ततः प्रणम्य शिरसा संपूज्या र्घ्यादिभिर्द्विजम् ।।४९।।

पादौ प्रक्षाल्य तद्वारि पीत्वोवाच समुत्तदा ।

अद्यमे सफलं जन्म जीवितं मे सुजीवितम् ।।५०।।

यदद्य दृश्यसे विप्र! मद्दृष्टिविषये शुभः ।

அதன்பின் சாலிஹோத்ரமஹாமுநி அந்த கிழட்டு ப்ராம்மணனை ஸாஷ்டாங்கமாக தண்டம் ஸமர்ப்பித்து அர்க்ய பாத்ய ஆசமநீயங்களாலே நன்கு ஆராதித்து திருவடிகளை விளக்கி ஸ்ரீபாததீத்தத்தை அமுது செய்தருளி பேராநந்தமுற்ற வராய் இப்போது மங்களத்தைத் தரக்கூடிய தேவரீர் எனது கண்ணுக்கு இலக்கானமையால் என் ஜன்மம் ஸபலமாயிற்று என்று விண்ணப்பித்தார்.

इत्युक्त्वा प्राङ्मुखं विप्रं उपवेश्यादरात्परम् ।।५१।।

तं भागमतिथेरेकं तस्मै सव्यञ्जनं ददौ ।

सोऽपि विप्रवरश्शीघ्रं अन्नं भुक्त्वा तदास्थितः ।।५२।।

संशयस्थं द्विजं दृष्ट्वा शालिहोत्रोऽब्रवीत्तदा ।
विप्रेन्द्र तृप्तस्त्वमसि ब्रूहि तत्वं नवा मम ।।५३ ।।
सोवदन्मुनिशार्दूल मया भुक्त्वातु भोजनम् ।
पञ्चषाणिदिनान्यासन् क्षुत्श्रान्तिर्नास्तिमेऽधुना ।।५४ ।।
इत्युक्तं तस्य वचनं श्रुत्वा प्रदत्द्वितीयकम्
भागं तमपि भुक्त्वाऽशु तूष्णीमास्ते द्विजोत्तमः ।।५५ ।।
इङ्गितज्ञस्तृतीयञ्च भागं सोऽदात् द्विजायवै ।
सोऽपि भुक्त्वा तमपरं भागञ्च समवैक्षत ।।५६ ।।
शालोहोत्रस्तु रीयञ्च भागं प्रादान्मुदान्वितः
दत्तं तुरीय भागञ्च भुक्त्वा तृप्तइवाऽभवत् ।।५७ ।।

இப்படி விண்ணப்பம் செய்து அந்த கிழட்டு ப்ராம்மணனை மிகுந்த அன்போடு கிழக்கு முகமாக எழுந்தருளப் பண்ணி அதிதியின் ஒருபாகத்தை வ்யஞ்ஜநத்தோடு அந்த பிராம்மணனுக்கு அளித்தார். அந்த கிழவரும் அந்த ப்ரஸாதத்தை சீக்ரமாய் அமுது செய்துவிட்டு சிந்தித்துக் கொண்டிருந்தார். அப்போது சாலிஹோத்ரபகவானும் கேட்போமா வேண்டாமா என்று சந்தேஹித்து அவரைப்பார்த்து ‘‘ஹே ப்ராம்மணோத்தமரே! திருப்தி அடைந்தீரா இல்லையா உண்மையைச் சொல்வீராக’’ என்றார். அப்போது கிழட்டுப்ராம்மணரும் முநிச்ரேஷ்டரே! நாம் சாப்பிட்டு ஐந்தாறு நாளாயிற்று. ஆகையால் நீர் கொடுத்த அன்னத்தால் எனக்கு திருப்தி இல்லை என்றார். இப்படி கிழவருடைய வார்த்தையைக் கேட்டு இரண்டாவது பாகத்தையும் கொடுத்தார். அந்த பிராமணரும் அந்த பாகத்தையும் கணப்போதில் உண்டுவிட்டு மேலும் வேண்டுமென்ற நிலையிலிருந்தார். இங்கிதமறிந்தவரான ஸ்ரீசாலிஹோத்ரமஹர்ஷியும் மூன்றாவது பாகத்தையும் கொடுத்தார். அவரும் அந்த பாகத்தையும் சாப்பிட்டுவிட்டு நாலாவது பாகத்தையும் விரும்பினார். ஸ்ரீசாலிஹோத்ரபகவானும்

மகிழ்ச்சியுடன் நாலாவது பாகத்தையும் கொடுத்தார். அந்த கிழட்டு ப்ராம்மணன் அதையும் உண்டுவிட்டு திருப்தியுள்ளவரானார்.

शालिहोत्रः प्रसन्नात्मा तृप्तोसीति द्विजोत्तमम्

उवाच विप्रेऽपिपरं तृप्तोस्मीत्यवदत्किल ।।५८ ।।

सुखेन स्थीयतामत्रे त्युक्त्वा क्वापि गतः प्रभुः ।

ஸ்ரீசாலிஹோத்ரபகவானும் தெளிந்த மனத்தராய்க் கொண்டு தேவரீர் திருப்தி அடைந்தீரோ? என்று வினவ அவரும் மிகவும் திருப்தி அடைந்தேன் என்று சொல்லிவிட்டு பின்னர் தேவரீர் இங்கேயே இரும் என்று சொல்லிவிட்டு கிழட்டு அந்தண உருவில் அந்தஸ்வாமியும் எங்கேயோ ஒரு திசையை நோக்கிச் சென்றார்.

तांनिशामुपवासेन नीत्वा मुनि वरो मुदा।।५९ ।।

प्रभाते पुनरुत्थाय स्नात्वाहृत्तापनाशने ।

तीर्थेपौर्वाह्निकं कृत्वा ह्यनुष्ठान कदम्बकम् ।।६० ।।

संकल्प्य पुनरप्येवं शुभं सांवत्सरं व्रतम्

निर्जलञ्च निराहारश्चरिष्य इति सुव्रतः ।।६१ ।।

सरस्तीरे जपन्नास्ते श्रीमदष्टाक्षरं मनुम् ।

वाचं यमोनियमवान् महातीव्रं तपश्चरन् ।।६२ ।।

समतिष्ठत् क्षणमिवह्येकं संवत्सरं मुनिः ।

ரிஷிச்ரேஷ்டரான சாலிஹோத்ரபகவான் தெய்வாதீன மாய் நாம் கஷ்டப்பட்டு சம்பாதித்த அன்னத்தை அந்த ப்ராம்மணச்ரேஷ்டர் மகிழ்ச்சியுடன் உண்டாரே என்னே நமது பாக்யம்! என்று பெருமகிழ்ச்சியோடு அன்றிரவு உண்ணாமலே இருந்து பொழுதுவிடிந்ததும் அதிகாலையில் திரும்பவும் எழுந்திருந்து ஹ்ருத்தாபநாசந தீர்த்தத்தில் ஸ்நாந ஸந்த்யாவந்தனாதிகளை முடித்துக்கொண்டு மீண்டும் நிர்ஜலமா யும் ஆகாரமில்லாமலும் ஓராண்டுகாலம் வரை சுபகரமான

வ்ரதத்தை அநுஷ்டிப்போம் என்று ஸங்கல்பித்துக் கொண்டு நல்ல வ்ரதத்தை மேற்கொண்டவராய் மௌநியாய் சௌசஸந்தோஷம் முதலிய நியமங்களோடு மிகக்கடுமையான தவத்தைச் செய்தார். சாலிஹோத்ரர் ஓராண்டுக்காலமும் ஒருகணம்போலே எழுந்தருளியிருந்தார்.

एवं गते बहुतिथे काले पुनरुपागता ।।६३ ।।

सापौष्ये मास्यमावास्याकल्याणी कामदायिनी

प्रभाते तद्दिने पुण्ये शालिहोत्रो महामुनिः ।।६४ ।।

ददर्श भूमौ दिविच तथात्मनि शुभानिवै

शकुनानिमुदायुक्तः कृशीभूतः तपस्यया ।।६५ ।।

निर्जलो निर्गताहारः प्रस्खलन् प्रययौ सरः

இப்படி கடுமையான தவம் செய்து பலகாலம் கடந்தபின் மீண்டும் மங்களத்தைத் தருவதாய் ஜநங்களுக்கு விரும்பிய வரங்கள் எல்லாவற்றையும் தரக்கூடியதான தை அமாவாசை வந்து சேர்ந்தது. ஸ்ரீசாலிஹோத்ரபகவான் புண்யதமமான அன்று காலையில் பூமியிலும் வானத்திலும் தமது சரீரத்திலும் மங்களஸூசகங்களான சகுனங்களை மிக்க மகிழ்ச்சியுடன் பார்த்தார்.

प्रातः स्नात्वातु विधिवत्कृत्वानुष्ठान सञ्चयम् ।।६६ ।।

स्नातुमागत देवर्षीन्नरनारीगणान् बहून्

पुण्यान्वीक्ष्य मुदायुक्तः पारणाय समुद्यतः ।।६७ ।।

ஸ்ரீசாலிஹோத்ரமஹர்ஷி அந்த காலைவேளையில் விதிப்படி நீராடி காலையில் செய்யவேண்டிய நித்யகருமங்களை அனுஷ்டித்த்து, ஹ்ருத்தாபநாசந தீர்த்தத்திற்கு ஸ்நாநம் பண்ணுவதற்காக எழுந்தருளின தேவர்களையும், ரிஷிகளையும், புண்யர்களான மனிதக்கூட்டங்களையும் பெண்கள் கூட்டத்தையும் பார்த்து பெருமகிழ்ச்சியுற்றவராய் பாரணம் செய்யமுயன்றார்.

उञ्छधान्ये न समुनिः पाकंकृत्वान्नमादरात्
संपूज्य श्रीपतिं तस्मै परस्मै पुरुषाय वै ।।६८।।
समर्प्य भोक्तु मारेभे पूर्ववत्परमादरात्
कृत्वाभ्यागत भागंतु वैश्वदेवादिकात्परम् ।।६९ ।।
अतिथिं पालयन्नेव ह्यतिष्ठत् प्रार्थितातिथिः

அந்த சாலிஹோத்ரபகவான் பொறுக்கிச் சேர்த்தநெல்லை அரிசியாக்கிக் கொண்டு பக்வம் செய்த ப்ரஸாதத்தை திருமாலை நன்கு ஆராதித்து அவருக்கு ஸமர்ப்பித்து மிகுந்த ஆர்வத்தோடு வைச்வதேவம் முதலிய தேவகர்மாவை அநுஷ்டித்தபின் தாம் அமுது செய்ய முற்பட்டவராய், அதற்கு முன்பாக அதிதியை ஆராதிப்ப தற்காக நம்முடைய பாக்யவிசேஷத்தினாலே விருந்தாளிகள் எவரும் எழுந்தருள்வரோ என்று ப்ரார்த்தித்தவ ராய் அதிதியின் வரவை எதிர்பார்த்துக்கொண்டு சற்றே எழுந்தருளியிருந்தார்.

तत्रान्तरे हरिस्साक्षात्पूर्ववत् ब्राह्मणोऽभवत् ।।७० ।।
वार्धकेनपरिक्षीण सर्वावयवसंयुतः
क्षुधितोऽहं परिश्रान्तः पिपासाबाध्यते भृशम् ।।७१ ।।
अन्नं देहि जलं देहि स्थानं किञ्चित्प्रदेहि मे।
निद्रां कर्तुं सुखेनाद्येत्यब्रवीद्वृद्ध भूसुरः ।।७२ ।।

அந்த ஸமயத்தில் ஸாக்ஷாத் ஶ்ரிய:பதியே முன்போல வே கிழவராக தளர்ந்த எல்லா அவயவங்களையும் உடையவராய், அந்தணவடிவில் எழுந்தருளினார். நான் பசித்திருக்கிறேன். ஆகையால் மிகவும் இளைப்புற்று நிற்கிறேன். தாகம் மிகவும் வாட்டுகின்றது. மஹர்ஷியே! எனக்கு இத்தனை ப்ரஸாதம் தாரும். தாகத்துக்கு தீர்த்தமும் தாரும். சுகமாகப் படுத்துத்தூங்கும்படி கொஞ்சம் இடம்தாரும் என்று அந்த கிழட்டு பிராமணன் கேட்டார்.

त्वरितश्शालिहोत्रोपि भक्त्या परमया मुदा ।

अर्घ्यपाद्यादिभिर्विप्रं पूजयित्वादरेणवै ।।७३ ।।

पूर्ववद्भोजयामास सूपचारेणभक्तिमान्

ஸ்ரீசாலிஹோத்ரமஹர்ஷியும் பரமபக்தியோடும் பரமாநந்தத்தோடும் விரைந்து மிக்க அன்போடு அர்க்ய பாத்யாதிகளாலே அந்த கிழவரை ஆராதித்து பக்தியோடும் மிக்க உபசாரத்தோடும் முன்போலவே அமுது செய்தருளப் பண்ணினுர்.

भुक्त्वा सोऽपि गतश्रान्तिः क्षालितस्वांघ्रिपाणिकः ।।७४ ।।

आचम्य वारिणोत्थाय गृहेकस्मिन् मुने वद

विश्रान्ति हेतवेनिद्रां करिष्यामीतिचाब्रवीत् ।।७५ ।।

அந்தகிழட்டுப்ராம்மணரும் அமுதுசெய்தருளி இளைப்புத் தீர்ந்தவராய் திருக்கைகளையும் திருவடிகளையும் விளக்கிக் கொண்டவராய் தீர்த்தத்தினுல் ஆசமனம் பண்ணியபிறகு, ''ஹே சாலிஹோத்ரரே! எந்த இடத்தில் நாம் இளைப்புத்தீர உறங்கலாம்; அந்த இடத்தைச் சொல்லும்'' என்று கேட்டார்.

शालिहोत्रोब्रवीत् ब्रह्मन् अत्रैव शयनं कुरु ।

अहं च त्वत्समीपस्थः संवाहित करांबुजः ।।७६ ।।

तिष्ठामीति ब्रुवन्पार्श्वे ह्यतिष्ठत्परमादरात् ।

சாலிஹோத்ரரும், ''ப்ராம்ஹ்ணோத்தமரே! இந்த உள்ளிடத்திலேயே திருக்கண்வளர்ந்தருள்க. அடியேனும் ஸமீபத்திலேயே தேவரீர் திருக்கையை வருடிக்கொண்டு பக்கத்திலேயே இருக்கிறேனென்று மிக்க அன்போடு விண்ணபபித்து பக்கத்திலேயே மிக்க ஆதரத்துடன் எழுந்தருளியிருந்தார்.

सतुवृद्धद्विजश्शेतुं शिरो दक्षिणदिश्यधि ।।७७ ।।

स्थापयामासतत्काले दिविनेदुर्महास्वनः

शंखदुन्दुभयो दिव्याननृतुश्चाप्सरोगणाः ।।७८ ।।

गायन्तिस्मचगन्धर्वाहाहाहूहूमुखामुदा

तुष्टुवुर्मुनयश्चापि ब्रह्माद्यायोगिनोपिच ।।७९ ।।

सनन्द सनकाद्याश्च तदद्भुतमिवा भवत्

அந்த கிழஅந்தணரும் படுத்துக்கொள்வதற்காக தெற்கே தலையைவைத்துக்கொண்டார். அப்போது ஆகாயத்தில் தேவலோகத்திலுள்ள சங்கங்கள் துந்துபிவாத்யங்கள் முதலானவை பெருமுழக்கம் செய்தன. ரம்பை ஊர்வசி முதலான அப்ஸரஸுக்கள் நர்த்தனமாடினர். ஹா ஹா ஹூ ஹூ முதலான கந்தர்வர்கள் சந்தோஷமாக காநம் பண்ணினார்கள். நாரதர் முதலிய முநிவர்களும், ப்ரம்மாதி தேவர்களும், ஸநகஸநந்தாதி யோகிகளும் ஸ்தோத்ரம் பண்ணினார்கள். மேலும் அப்போதுண்டான வைபவம் மிக்க ஆச்சர்யமாயிருந்தது.

तत्रान्तरे मुनेरग्रे विश्वरूपं श्रिय:पति: ।।८० ।।

दर्शयामास वचनं शशंसपरमं महत्

मेघगंभीरयावाचा हर्षयन्मुनिमानसम् ।।८१ ।।

प्रसन्नोऽस्मि मुनिश्रेष्ठ शालिहोत्रमहामते ।

तुभ्यमभ्युत्सहे दातुं वृणीष्व वरमुत्तमम् ।।८२ ।।

அப்போது பெரியபிராட்டியாருடைய இங்கிதம் அறிந்தவரான பெருமாள் தமக்கே உரிய விச்வரூபத்தை சாலிஹோத்ரமஹர்ஷிக்கெதிரே காண்பித்து, நான் வெறும் கிழட்டு பிராமணனல்ல என்றும் ஸாக்ஷாத் பரமபுருஷன் என்றும் ப்ரகாசிப்பித்தருளினார். மஹாமேதாவியான சாலிஹோத்ரரே! நாம் பெரிதும் மகிழ்ந்தோம். உமக்கு சிறந்த வரத்தைக் கொடுக்க உத்தேசித்துள்ளோம். நீர் கேட்டுப்பெற்றுக்கொள்ளலாமென்று மேகம்முழங்குவது போல கம்பீரமான குரலோடு ஸ்ரீசாலிஹோத்ர ருடைய மனத்திற்குப் பேராநந்தத்தைக்கொடுத்துக்கொண்டு பெரும் பொருள் கொண்ட வார்த்தையை அருளிச்செய்தார்.

शालिहोत्रोपि लक्ष्मीशं अब्रवीत्किमित: परम् ।

वरं स्वस्तिदमस्त्यन्यत्तथापीप्सितमस्ति मे ।।८३ ।।

त्वत्सायुज्यं जगत्पूज्यं वांछामि वरदाग्रणी:

देहि देहि कृपामूर्ते मह्यं संसृतिमुह्यते ।।८४ ।।

தேவரீரது ஸேவையைக்காட்டிலும் நன்மை தரத்தக்கது வேறு என்ன உள்ளது. ஆனாலும் அடியேன் விரும்புவது ஒன்றுள்ளது. ஸமஸ்தலோகத்திலும் சிறந்ததான தேவரீரது ஸாயுஜ்யத்தை அடியேன் விரும்புகிறேன். வரங்கொடுப்பவர் களுக்குள்ளே சிறந்தவராயும் க்ருபையே வடிவெடுத்தவராயு முள்ள ஸ்வாமீ! ஸம்ஸாரத்தில் மூடனாய் உழல்கின்ற அடியேனுக்கு ''सायुज्यं अन्ये सतुमोक्ष उक्तः'' என்கிறபடியே தேவரீரோடு ஸமமான போகமாகிற மோக்ஷத்தைத் தந்தருள வேணும்.

श्रुत्वा तद्वचनं देवः भक्ताऽसक्तः परात्परः

तथास्त्विति ब्रुवन् तस्य शिरस्यथजटायुते ।।८५ ।।

पाणिं दक्षिण माधाय माधव साधुसाध्विति

संभावयन्समवदत् जगन्नाथस्सुरेश्वरः।।८६।।

''अहंभक्तपराधीनः ह्यस्वतन्त्र इवद्विपः'' என்கிறபடியே பக்தர்களிடத்தில் கட்டுப்பட்டவராயும், பிறர்களான ப்ரம்மாக்களைக்காட்டிலும் மேலானவராயும், நித்யஸூரிகளுக்குத் தலைவராயும், அனைத்துலகுக்கும் ஈச்வரனாயுமிருக்கின்ற ஸ்ரீவீரராகவன் அந்த சாலிஹோத்ரருடைய வேண்டுகோளைக் கேட்டு அப்படியே ஆகட்டுமென்று அருளிச்செய்தார். சடையோடுகூடிய ஸ்ரீசாலிஹோத்ரமஹர்ஷி யினுடைய தலையிலே வலது திருக்கையை ''அணிமிகுதாமரைக் கையை அந்தோ அடிச்சியோம் தலைமிசை நீ அணியாய்'' என்று கோபிகள் ஆசைப்பட்டதை நினைவில்கொண்டு பெரியபிராட்டியாரையும் மகிழச்செய்துகொண்டு நன்றாய் விரும்பினீர். வரம்கேட்கின்ற உமதுஸ்வரூபத்துக்கும், ''चतुर्णां पुरुषार्थानां दाता देवश्चतुर्भुजः'' என்றும், ''मोक्षमिच्छेज्जनार्दनात्'' என்றும், ''கொள்ளக் குறைவிலன் வேண்டிற்றெல்லாம் தரும் கோதில்'' என்றும் சொல்லுகின்றபடியே, அனைத்துமக்கள் விரும்புமவற்றை

யெல்லாம் காது கொடுத்துக் கேட்பதில் வல்லவரான நமக்கும் ஏற்றதாயிருந்தது. நீர் வரம் கேட்டது மிகவும் நன்று நன்று என்று புகழ்ந்தவாறு இப்படி அருளிச்செய்தார்.

श्रृणुध्वं मुनयस्सर्वे ब्रह्माद्यास्सुर पुंगवा: ।।८७।।
इत: परं पुरस्यास्य नाम किं गृहमित्यथ।
ममापि किं गृहपतिरित्याख्या भविताध्रुवम् ।।८८।।
स्थास्याम्यत्राहमपि वैशालिहोत्रस्य धीमत:
भक्ति पाशेन सुदृढं संयत: सर्वदामुदा ।।८९ ।।
इत्युक्त्वा शेषशयने शयिन स्मुखमादरात्
पाणिं दक्षिण माधाय शालिहोत्रस्य मस्तके ।।९० ।।
ज्ञानमुद्रां वामकरे विभ्रत्परमपावन:
योगविद्रां जगद्रक्षा जागरूकामुपविशत् ।।९१ ।।

ஹே ஸமஸ்த ரிஷிகளே! ப்ரம்மாதிதேவர்களே! நமது வார்த்தையைக்கேளுங்கள். இன்று முதல் இந்த நகரத்துக்கு ‘‘கிம்க்ருஹம்’’ என்று பெயருண்டாகப்போகிறது. நமக்கும் ‘‘க்ருஹபதி’’ என்றபெயர்உண்டாகப்போகிறது. நாமும் இதுமுதலாக மஹாஞானியான சாலிஹோத்ரருடைய த்ருடபக்தி யாகிற கண்ணிநுண்சிறுத்தாம்பினுலே கட்டுண்டவராய் எப்போதும் கலங்காப்பெருநகரையும் மறக்கும்படி செய்கின்ற ஹ்ருத்தாபநாசநத்தின் கரையுலுள்ள போக்யதையினுலுண்டான பேராநந்தத்தோடு இந்த திருஎவ்வுளில் ‘‘திருஎவ்வுள்கிடந்தான்’’ என்றும், ‘‘எவ்வுள்பெருமலே’’ என்று திருமங்கையாழ்வார் முதலானவர்கள் பாடும்படி நித்யவாஸமாயிருக்கக்கடவோம். இப்படி அருளிச்செய்துவிட்டு ‘‘பவித்ராணும் பவித்ரம் ய:’’ என்கிறபடியே பரமபாவநரான திருஎவ்வுள்கிடந்தான், திருஅநந்தாழ்வான் திருமேனியாகிற திருப்பள்ளிமெத்தையில் சுகமாக பரமாதரத்தோடு திருக்கண்வளராநின்ருர். பரமதந்யரான சாலிஹோத்ரருடைய திருமுடியில் வலக்கையை வைத்து இடதுகையில் நாபீகமலத்தில் உள்ள ப்ரம்மாவுக்கு ஓங்காரமாகிற

பிரணவத்தின்பொருளை உபதேசிப்பதற்காக ஞானமுத்ரையை வஹித்துக்கொண்டு ஜகத்ரக்ஷணஜாகரூகராய் யோகநித்ரையில் உள்ளார். (பவிதாத்ருவம் என்றவிடத்தில் பவிதா என்று பூதாதுவில் லுட் ப்ரதமபுருஷஏகவசநம்)

नाभीसरोजदेशेतु ब्रह्माचाभूत्तदा स्वयम्
पादौ सं वाहयन्त्यैते लक्ष्मीभूमिस्थिते उभे ।।९२ ।।
विष्वक्सेनस्सुनन्दश्च नन्दश्चान्येपि तादृशाः
पारिषद्याः परिवृताः बभूवुस्समवस्थिताः ।।९३ ।।
गरुत्मानग्रतः स्थित्वा प्राञ्जलिस्समसेवत
शंखचक्रगदाशार्ङ्गखड्गा अपिच शाश्वताः।।९४ ।।
मूर्ति भूताश्चेतनया सहिता स्संसिषेविरे
शालिहोत्रोपि तस्य श्रीहस्त स्पर्शसमुद्भवे ।।९५ ।।
आनन्द सागरे मग्नः समास्ते संस्तुवन्हरिम्

உலகைப்படைப்பவராயும், ''योब्रह्माणं विदधातिपूर्वं योवै वेदांश्च प्रहिणोति तस्मै'' என்கிறபடியே பகவானலே கொடுக்கப்பட்ட வேதங்களை அறிந்தவரான ப்ரம்மா, ப்ரணவம் முதலிவற்றில் சொல்லப்பட்ட பொருளின்படி சுச்ரூகைஷயி லே அப்போது பகவானது திருநாபீகமலத்திலிருந்தார். ஸ்ரீபூமிதேவிகளிருவரும் பெருமானது திருவடிகளை, ''வடிவிணையில்லா மலர்மகள் மற்ற நிலமகள் பிடிக்கும் மெல்லடி'' என்கிறபடி பிடித்துக் கொண்டிருந்தார்கள். ஸேநை முதலியார், ஸுநந்தர், நந்தர் இன்னம் இவர்களைப்போன்ற ஸ்வாமி பரிஷந்நிர்வாஹகர்களான முதலிகள் அடங்க தத்தம் கைங்கர்யங்களை நடத்திக் கொண்டிருந்தார்கள். பெருமாளுக்கு நிலைக்கண்ணடி போன்ற கருடன் பெருமாளுக்கு எதிரேநின்று ஸேவித்துக் கொண்டிருந்தார். சங்கம், சக்ரம் கதை சார்ங்கம் இவை முதுலான நித்யஸூரிகளான ஆயுதமுதலிகள் தத்தம் வடிவுகளோடும் சைதந்யத்தோடும் கூடினவர்களாய்

ஸேவித்துக்கொண்டிருந்தார்கள். ஸ்ரீசாலிஹோத்ரரும் பெருமாள், தமது தலையில் இருத்திய ''அணிமிகுதாமரைக்கை'' யின் ஸ்பர்சத்தாலே உண்டான பேரானந்தப்பெருங்கடலில் மூழ்கியவராய் வாயார வாழ்த்திக்கொண்டிருந்தார்.

मार्कण्डेय:

इत्येवं शालिहोत्रस्य माहात्म्यं जननं तथा ।।९६ ।।

मुक्तिश्च राजशार्दूल पुरावृत्तं परंतप ।

ஸஹஸ்ராநீகரே! முற்காலத்திலிருந்த ஸ்ரீசாலிஹோத்ர பகவானுடைய அவதாரம் இத்தகையது. மாஹாத்ம்யம் இப்படிப்பட்டது. அவர் திருஎவ்வுள் கிடந்தானது க்ருபையினாலே மோக்ஷம் பெற்றார்.

य इदं श्रृणुयान्मर्त्यो यश्चापिश्रावयेद्बुध: ।।९७ ।।

उभावपिमहाभागौ अन्ते तत्पदमाप्नुयात् ।

இந்த வீக்ஷாரண்யமாஹாத்ம்யத்தை எவன் பக்தியோடு கேட்கின்றானோ, எவன் கேட்பவர்களுக்கு ஞானம் வரும்படி கேட்பிக்கின்றானோ மகாபாக்யசாலிகளான அவ்விருவருமே இவ்வுலகில் நன்றாகவாழ்ந்து, தேஹாவஸாநத்தில் பெருமாள் திருவடிகளை அடைவார்கள்.

धन्यं यशस्यं सकल प्रशस्यं

श्रीशालिहोत्रस्य चरित्रमेतत्।

यस्मिन् गृहे तिष्ठति पुस्तकस्थं

तदेव वैकुण्ठ पुरोपमं स्यात् ।।९८ ।।

இதிஸ்ரீமார்கண்டேயபுராணே க்ஷேத்ரகாண்டே தீர்த்த மாஹாத்ம்ய கதநம் நாம ஏகாதச சததமோऽத்யாய:

சொல்பவர்களுக்கும், கேட்பவர்களுக்கும் பெருஞ்

செல்வத்தைத்தருவதாயும், மிக்க புகழைத்தருவதாயும் பண்டிதர் முதல் பாமரர்வரை ஸகலஜநங்களாலும் கொண்டாடத்தக்க ஸ்ரீசாலிஹோத்ரபகவானுடைய இந்த சரித்ரம் எந்த வீட்டில் புஸ்தகவடிவில் இருக்கின்றதோ அந்த க்ருஹம் ஸ்ரீவைகுண்ட நகரம்போலே பெருமாளும் பிராட்டியும் நித்யவாஸமாய் எழுந்தருளியிருக்கும்படி என்றும் செல்வச்செழிப்பாக இருக்கும்.

**பரத்வாஜஸ்ரீநிவாஸராகவார்யேண தீமதா**
**ஸ்ரீவீக்ஷாரண்யமாஹாத்ம்யம் த்ராவிட்யாவிவ்ருதம் கிரா.**
**ஸ்ரீகநகவல்லீ ஸமேத ஸ்ரீவீரராகவபரப்ரம்மணே நம:**